வெளியீடு — 17

உ
சிவமயம்.
சிவசண்முக மெய்ஞ்ஞான தேசிகன் திருவடி வாழ்க.

# கோவல் ஆதீனக் குருமணி.

திருக் கயிலாய பரம்பரைத்
திருக்கோவலூராதீன முதற் குரு மூர்த்திகள்
ஸ்ரீலஸ்ரீ
ஆறுமுக மெய்ஞ்ஞான சிவாசாரிய சுவாமிகள்
(ஞானியார்)

# வரலாறு.



திருக்கோவலூராதீனம், திருப்பாதிரிப்புலியூர்
ஸ்ரீமத் ஞானியார் மடாலய வெளியீடு
கலி 5069 பிலவங்க ஆண்டு வைகாசித் திங்கள் 14-ம் நாள்
(28-5-1967)

வெளியீடு — 17

உ

சிவமயம்.

சிவசண்முக மெய்ஞ்ஞான தேசிகன் திருவடி வாழ்க.



# கோவல் ஆதீனக் குருமணி.

திருக் கயிலாய பரம்பரைத்

திருக்கோவலூராதீன முதற் குரு மூர்த்திகள்

ஸ்ரீலஸ்ரீ

## ஆறுமுக மெய்ஞ்ஞான சிவாசாரிய சுவாமிகள்

(ஞானியார்)

## வரலாறு.

இஃது

இம் மடாலய ஐந்தாமுறைத் தலைவர்களாய்

எழுந்தருளியிருந்த

ஸ்ரீலஸ்ரீ சிவசண்முக மெய்ஞ்ஞான சிவாசாரிய சுவாமிகளின்

அணுக்கத் தொண்டரும் மாணவருமாகிய

திருப்பாதிரிப்புலியூர்

திருப்புகழ் ரத்தினம் - வித்துவான் - க. பா. வேல்முருகன்

அவர்களால் எழுதப் பெற்றது

❋

திருக்கோவலூராதீனம், திருப்பாதிரிப்புலியூர்

ஸ்ரீமத் ஞானியார் மடாலய வெளியீடு

கலி 5069 பிலவங்க ஆண்டு வைகாசித் திங்கள் (1967)




# பொருளடக்கம்

## தோன்றாத்துணைவன் ஆலயம்.



திருச்சிற்றம்பலம்.

" மாயமெல்லா முற்றவிட் டிருள்நீங்க மலைமகட்கே
நேயநிலாவ இருந்தான் அவன்றன் திருவடிக்கே
தேயமெல்லா நின்றிறைஞ் சுந்திருப்பா திரிப்புலியூர்
மேயநல்லான் மலர்ப்பாதம் என்சிந்தையுள் நின்றனவே "

—திருநாவுக்கரசர்.

சீர்திருக்கோவ லூரினில் ஆறுமாமுக தேசிகர் என்னப்
பேரிசை சீவகருணை வயிராகம் பிரமஞானம் சிவபக்தி
ஈரிரண்டு ஈதோர் மேனிகொண் டென்றன் எண்ணிலி
யூர்களும் பெயர்கள்

ஆர்உருவமும் தீர்த்து ஆண்டமா குருவே ஆறுமா முகதயாநிதியே.



பிரதம குரு மூர்த்திகள் -
ஸ்ரீலஸ்ரீ ஆறுமுக மெய்ஞ்ஞான சிவாசாரிய சுவாமிகள்



திருப்பாதிரிப்புலியூர் ஸ்ரீமத் ஞானியார் மடாலய ஸ்ரீ சுப்பிரமணிய சுவாமி ஆலய தோற்றம்.

உ

வேலுமயிலுந்துணை.

திருக்கோவலூராதீனம், திருப்பாதிரிப்புலியூர்
ஸ்ரீமத் ஞானியார் மடாலயம்.

சிவசண்முக மெய்ஞ்ஞான தேசிகன் திருவடி வாழ்க.

---

# பதிப்புரை.

---

திருவும் சீரும் சிறக்க வாழ்வதே வாழ்வாகும். வாழ்வினை அவலமாக்கிக் கொள்வதும் சிறப்பின தாக்கிக் கொள்வதும் அவ்வவர் மனப் பண்பே. மனப் பண்பு கல்வி கேள்விகளால் மட்டுமே தூய்மையடையும். இதனாலேயே கல்வி கற்பித்தல் எத்தகைய அறத்தினும் மேலதாகக் கருதப்படும். நம் நாடு பற்பல அரசியல் மாறுபாடுகளைக் கண்ட நாடு. அப்போதெல்லாம் மக்கள் நன்னெறி பற்றி ஒழுகச் செய்வதையே தம் நாட்டுத் தொண்டாகக்கொண்டு வாழ்ந்திருந்த சமயம் வீரசைவ சமயமே. இது வரலாறு கூறும் உண்மை. இத்தகைய தூய தொண்டுகளைக் கைக்கொண்டு ஒழுகியோர்க்கு அவ்வப்போது பல நலங்களை உலகம் அளித்து வந்தது. வீரசைவர் சிவபெருமான் எழுந்தருளியுள்ள கோயிற் பூசனைகளை முட்டின்றி ஆற்றியும், தம் ஆன்ம லிங்க பூசனை முதலிய ஒழுக்கங்களால் பல்லோரும் போற்ற ஏற்றமுடன் வாழ்ந்தனர். வையத்துள் வாழ்வாங்கு வாழ்ந்தனர்.

இந்தியத் துணைக் கண்டத்துள் எம்மொழி வழங்கும் தேயத்தில் வாழ்ந்தாலும் சமஸ்கிருத வல்லுநராயும், அவ்-வத் தேய மொழியிற் போதிய புலமை பெற்றும் வாழ்ந் திருந்து சிவத்தொண்டும், கல்வித் தொண்டும் ஆற்றி வந்தனர். இறைவன் பூசனையை மேற்கொண்டொழுகி-யமையால் ஆராத்திரியர் எனப்பட்டனர். 'சொற் பாவும் பொருள் தெரிந்து தூய்மை நோக்கி' எதனையும் செய்ய வேண்டுமென்றும் கொள்கை யுடையவர்களாதலால் தாம் பூசிக்கும் சிவலிங்கத்தின் தன்மை, பூசனையின் பலன்கள், பூசா விதிகள் முதலியவற்றை விளக்கும் வேத, ஆகம, சாத்திர, தோத்திரங்களில் வல்லவராயிருந்தனர். அவ்-வண்ணம் தெலுங்கு நாட்டிலே கர்நூல் மாவட்டத்தைச் சேர்ந்த ஆத்மகூரில் வாழ்ந்தவர் சோமநாத ஆராத்திரியர். அவர் சிறந்த அறிஞர். ஞான நூல்களையும் வேதாகம-புராண இதிகாசங்களையும் ஓதி யுணர்ந்தவர். வழி யாகவே சிவ பரஞ்சுடரினைப் பூசிக்கும் பேறு பெற்றவர். பூசனை முறைகள், பயன் முதலியவற்றை யெல்லாம் நூல் வடிவில் எழுதியுள்ளார். அது வீரசைவர் ஒவ்வொருவரும் கற்றுணருஞ் சிறப்பினது. அதனைச் சோமநாத ஆராத்தியர் பத்ததி என்றே கூறுப. அதற்கு சிறப்புடைய சோமநாத ஆராத்திரியர் வழிவந்தவரே எம் முதற் குருநாதராகிய ஸ்ரீலஸ்ரீ ஆறுமுக மெய்ஞ்ஞான சிவாசாரிய சுவாமிகள்.

எங்கள் மடாலயம் சற்றேறக் குறைய முந்நூறு ஆண்டுகளாக இலங்குவது. இதன் முதற் குருநாதரது வர-லாற்றினை இரண்டாம் குருமூர்த்திகள் 'சிவகுரு லீலை' என்ற நூலாகப் பாடினர். அதன் 77 பாடல்கள் மட்டுமே இன்று கிடைத்தன. எஞ்சியவை எங்கு ஒளித்தனவோ! உள்ள பாடல்களைக் கொண்டு சுவாமிகளின் வரலாற்றினை முழுதும் அறியக்கூடவில்லை. ஆனல் திருவருள் வயமாக எம் ஐந்தாம் குருமூர்த்திகள் தம் திருக் கரத்தால் எழுதிய சில குறிப்-புகள், இம் மடாலய அன்பரும் அவ்வடிகளாரின் மாணவரு மாகிய உயர்திரு. வித்வான் க. பா. வேல்முருகனரிடம் உள. சில ஆண்டுகட்குமுன் இம் மடாலய வெளியீடாக வெளி-யிடப்பெற்ற சதுர்லிங்க சதகோத்திர சதகம், தன் அனுபவங்

கனை வீரட்டேசுவர மஹா குருவாகிய சிவலிங்கப் பெருமானை விளித்து ஸ்ரீலஸ்ரீ ஆறுமுக மெய்ஞ்ஞான சிவாசாரிய சுவாமிகளாம் முதற் குருநாதரால் இயற்றப்பட்ட நூல். அவற்றின் துணைகொண்டும் தக்கார் வாய்க் கேட்டறிந்த பல செவி வழிச் செய்திகளின் துணைகொண்டும் இந்நூல் குருவருட்-டுணையால் வெளி வருகின்றது.

பற்பல ஆண்டுகளாகக் கொண்டிருந்த எண்ணம் ஸ்ரீ மஹா குருமூர்த்திகள் திருவருளால் இப்போது நிறை வேறுகின்றது. இதனைச் செம்மையுற எழுதியளித்த உயர்-திரு. வித்துவான் க. பா. வேல்முருகன் அவர்கட்கு நெடி-தாயுள், நோயில் உடல் முதலிய நலங்கள் அருளுமாறு எம் இறை முருகவேளையும், ஸ்ரீமத் மஹா குரு சுவாமிகளையும் வேண்டுகிறேம்.

இந் நூலைச் செப்பமுற அச்சியற்றி யுதவிய, திருப் பாதிரிப் புலியூர்ச் சரஸ்வதி அச்சக உரிமையாளர் திரு. T. V. தேவராசர்க்கும், பிழை திருத்தம் ஒப்பு நோக்கல் முதலிய செய்துதவிய அன்பர் யாவர்க்கும் நலம் பலவும் விளைகவென வாழ்த்துகிறேம்.

சுவாமி நாதனும் எம் குகப் பெருமானும், எம் ஆதீன முதற் குருநாதராம் ஸ்ரீலஸ்ரீ ஆறுமுக மெய்ஞ்ஞான சிவா-சாரிய சுவாமிகளும் திருக்கோயில் திருப்பணி வாயிலாக எம்மை யாட்கொண்டமைக்கு அவரடி மறவாது வந்தித்த-லல்லாது யாம் செய்யுஞ் செயல் யாது ?

எம் மடாலய ஐந்தாங் குருநாதராகிய ஸ்ரீலஸ்ரீ சிவ சண்முக மெய்ஞ்ஞான சிவாசாரிய சுவாமிகள் திருவடி நீங்காச் சிந்தையுடன் இந்நூல் சிறந்தொளிரும் என நம்பு கிறேம். இந்நூலுக்கு அணிந்துரைகள் வழங்கிய அன்பர்கள் யாவர்க்கும் அறுமுகப் பரம்பொருளின் திருவருளும் ஸ்ரீலஸ்ரீ மஹா குருமூர்த்திகள் திருவருளும் நலம்பலவும் நல்கு-மாகுக.

மாரி பெய்க! மநுநெறி ஓங்குக!
பாரில் ஒண்சிவ பக்தர்கள் மல்குக!
சீரின் மல்குஞ் சிவன்புகழ் வெல்குக!
வீர சைவம் விளங்குக! எங்குமே.

— *சிவப்பிரகாச சுவாமிகள்.*

இங்ஙனம்,
**ஸ்ரீலஸ்ரீ சிவசண்முக ஆறுமுக மெய்ஞ்ஞான**
**சிவாசாரிய சுவாமிகள்,**
*7-ஆம் முறைத் தலைவர்.*



ஏழாம் குருமூர்த்திகள்
ஸ்ரீலஸ்ரீ சிவசண்முக ஆறுமுக மெய்ஞ்ஞான சிவாச்சாரிய சுவாமிகள்.
(தற்போது எழுந்தருளியுள்ளவர்கள்)

உ

வேலுமயிலுந்துணை.

சிவசண்முக மெய்ஞ்ஞான தேசிகன் திருவடி வாழ்க.

# பணிவுரை.

" பெறுதற் கரிய பிறவியைப் பெற்றும்நின் சிற்றடியைக்
குறுகிப் பணிந்து பெறக்கற்றிலேன் மதகும்ப கம்பத்
தறுகட் சிறுகட் சங்க்ராம சயில சரசவல்லி
இறுகத் தழுவுங் கடகாசலபன் னிருபுயனே."

— கந்தரலங்காரம்.

" எய்தற் கரியது இயைந்தக்கால் அந்நிலையே
செய்தற் கரிய செயல்."

— தமிழ் மறை.

" அரும்பெறல் யாக்கையைப் பெற்ற பயத்தாற்
பெரும்பயனு மாற்றவே கொள்க — கரும்பூர்ந்து
சாறுபோற் சாலவும் பின்னுதவி மற்றதன்
கோதுபோற் போகு முடம்பு."

—நாலடியார்.

'செல்வன் கழல் ஏத்தும் செல்வம் செல்வமே' என்னுந் துணிவொன்றையே கடைப்பிடித்து, பெறுதற்கரிய இப்பிறப்பைப் பயனுள்ளதாக்கிக் கொள்ளலே அறிவுடையார் கடன். ஆன்றோர் ஒழுகிய வண்ணம்–அவர் போதித்த வண்ணம் – வாழ்வதே மனிதப் பிறவி எய்தினர் கைக்கொள்ளத் தக்கதொன்று. ஆகவே ஆன்றோர் அருளிய அருள் நூல்களைக் கற்பதோடு அவ்வான்றோர் கடைப் பிடித்த நெறிகளையும் பின்பற்றுவது நம் இயல்பாகின்றது.

நம் செந்தமிழ் நாட்டிலேதான் சிறந்த மெய்ஞ்ஞான நூல்கள் மலிந்துள. அவற்றுள் ஒன்று ' நிட்டானுபூதி சாரம் ' அதனை இயற்றிய ஸ்ரீலஸ்ரீ ஆறுமுக மெய்ஞ்ஞான சிவாசாரிய சுவாமிகளே எளியனையும் ஆட்கொண்டருளிய குருநாதரின் மடாலய முதற் குருநாதராவர்.

எளியேற்குக் குருவாய் வந்து ஆட்கொண்டருளிய ஸ்ரீலஸ்ரீ சிவசண்முக மெய்ஞ்ஞான சிவாசாரிய சுவாமிகள் புலவர் இடைநிலைத் தேர்வு மாணவர் பயிலற்குரிய நூல்க-ளுள் ஒன்றாக இம் மடாலய முதற் குருநாதர்மீது அவர்களின் மாணவராய அவிநாசி நாதரியற்றிய ' நெஞ்சு விடுதூது ' எனும் சிறந்த நூலினையும் அமைக்கச் செய்திருந்தார்கள். அந்நூல் 1940 முதலாய ஆண்டுகளில் மேற்கூறிய தேர்-வினுக் குரிய பாட நூலாக அமைந்திருந்தது- அந் நூலை-யும் அவிநாசி நாதர் இயற்றிய பிறநூல்களையும் 1939 ஆம் ஆண்டில் எம் ஐந்தாங் குருநாதர் தாம் எழுதிய அருங் குறிப்புகளுடன் வெளியிட்டார்கள். அதன் நூலாசிரியர் சரிதச் சுருக்கத்தின் இறுதியில் ' இதன் விரிவைத் திருக் கோவலூர் ஞானசாரிய சுவாமிகள் சரிதத்திற் காணலாம் ' எனக் குறிப்பிட்டுள்ளார்கள்.

அடியேன் எம் குருநாதரிடம் அணுக்கனாகி யிருந்த உரிமையால், பன்முறை அவர்களை இம் முதற் குரவர் வர-லாற்றினை வெளியிடுமாறு வேண்டியதுண்டு. அவர்கள் ' சிவகுரு லீலை ' என்ற நூலிலும் பிற நூல்களிலும் கண்டும் தம் முன்னோர் வாய்க்கேட்டும் அறிந்திருந்த சில செய்தி களைத் தொகுத்து எழுதத் தொடங்கினார்கள். ஆறு பக்க அளவில் சுவாமிகளது பிறப்புவரை எழுதினார்கள். எனி-னும் அவர்கள் மேற்கொண்டிருந்த தொண்டுகளின் காரண மாக அடிக்கடி வெளியிற் செல்ல நேரிட்டமையால் முற்ற-வும் முடியாமலேயே அவ்வளவில் நின்றது.

கடந்த இருபந்தைந் தாண்டுகட்கு மேலாக அடி-யேன் அந்தப் பொன்னெழுத்துகளைப் போற்றி வைத்தன் பயன் இப்புத்தக வெளியீட்டால் நிறைவெய்தத் திருவருள்

கூட்டி வைக்கிறது. அவர்கள் எழுதித் தந்த வரலாற்றுச் சுருக்கம் நிழற்படமெடுக்கப் பெற்று இந்நூலின்கண் இணைக் கப்பட்டுள்ளது.

இன்று இம்மடாலய ஏழாம் குருநாதராக விளங்கும் எம் அடிகளார் அடியேனையும் ஆட்கொண்டருளத் திருவருள் பாலித்து இம்மடாலய முதற் குருநாதரின் வரலாற் றினை எழுதித் தருமாறு பணித்தார்கள். திருவருள் வயத்தால் கடந்த 1958 ஆம் ஆண்டில் வெளிவந்த இம் மடாலயப் பதின்மூன்றும் வெளியீடாகிய ' சதுர்லிங்க சதகோத்திர தசகம் ' வரலாற்றினை எழுதுதற்குப் பெருந் துணையாக அமைந்தது. அதில் தம் அநுபவங்கள் பலவற்றை ஆசிரியர் தற்புகழ்ச்சியின்றி இட்ட இலிங்கத்திற்குச் சமர்ப்பணம் செய்கினுர்கள். அவர்களது நிட்டானுபூதி சார நூலும், இம் மடாலய இரண்டாங் குருநாதரின் தனியன்கள் சிலவும் இந் நூலினை எழுதப் பெருந்துணையா யிருந்தன.

இந்நூலிற் கூறப்படும் செய்திகள் யாவும் ஆன்ருேர் அமுத மொழிகளைத் தழுவியனவே. மிகைக் கூற்று ஒன்றுமே இல்லை. எம் மஹா குருசுவாமிகள் ஆற்றிய அருஞ் செயல்கள் மிகப் பலவாக இருக்கலாம். அவரது சீடராய அவிநாசிநாதர் பாடல்களால் இவ்வாறு முடிவு செய்ய இட முண்டு. எனினும் விளக்கமுறத் தெரிந்தவை எவையோ அவற்றின் அடிப்படையிலேயே இந்நூல் அமைந்துள்ளது.

இவ்வாறு எளியேனையும் எழுத வல்லவனுக்கிய எம் குருநாதராம் ஐந்தாம் குரு மூர்த்திகளின் திருவடிகளை நாயினேன் மறக்க ஒண்ணுமோ? எளியேனை இத்தொண்டினில் ஈடுபடுத்திச் சான்ருேர் வரிசையில் ஓரளவு அணுகற் குரியனுக்கிய இம் மடாலய ஏழாம் குருநாதர் திருவடிகட்கும் என் தாழ்ந்த வணக்கங்கள் உரியன. சான்ருேனுக்குமாறு என் அறியாமையைப் போக்குதற் குரிய சிறந்த ஞானுசிரியர்பால் ஈடுபடுத்திய என் பெற்ருேர்க்கும் வணக்கங்கள் செலுத்தி இந்நூலினை ஆன்ருேர் முன் வைக்கின்றேம். குற்றங்கள் உளவேல் அறிவித் தருளுமாறு வேண்டுவல்,

இம் மடாலயச் செயலுரிமை பெற்றுத் திகழும் உயர்திரு. ஆ. சோமசுந்தர அய்யரவர்கள் இப் புத்தகத்தின் அச்சுப் பிரதிகளைப் பிழை திருத்தம் முதலிய செய்து உதவி-னார்கள். அவர்கட்கு எல்லாம் வல்ல ஸ்ரீ மஹா குருசுவா-மிகள் குருவருளால் நலம் பலவும் விளைக.

இந் நூலினை அச்சியற்றிய சரசுவதி அச்சகத்தின் உரிமையாளர் திரு. T. V. தேவராஜ் அவர்கள் கடந்த முப்பத்தைந்தாண்டுகளாகவே இம் மடாலய எம் அடிகளாரிடம் நீங்காத பக்தி பூண்டவர்கள். அவர்கட்கும் ஸ்ரீ மஹா குரு சுவாமிகள் திருவருள் முன்னின்று நலம்பலவும் விளைவிக்குக.

இன்னணம்,
அடிமை – **க. பா. வேல்முருகன்**

உ

வேலுமயிலுந் துணை.

சிவ சண்முக மெய்ஞ்ஞான தேசிகன் திருவடி வாழ்க.

---

# உரிமை.

---

அகிலமும் புகழ்கோவல் ஆறுமுக குருவடி
அறுமுகச் செவ்வேளிறை
அன்பமை திருவடி தைவரும் உறுதியால்
ஆன்றமை கல்விகேள்வி

முகிலெனச் சொன்மாரி யாற்றமிழ் தெய்வதம்
முற்றுணர் வூட்டுமம்மான் !
மூதுலகில் ஞானியார் ? எனவினு யினர்க்கிவர்
முதுஞானி யாரென்னுசீர்

நெகிழுமன் பாற்றமிழ் ஏவருங் கற்றுணர்
நீணெறி ஆக்குவித்தோய் !
நிகழ்திரு வேங்கடங் குமரிமுனை யிடைசிவிகை
நேர்மையால் ஊர்ந்தெவரையும்

மகிழ்நெறி ஆர்க்குசிவ சண்முக மெய்ஞ்ஞான
மாதேசி கக்கொண்டலே !
வரு'கோவ லாதீன நற்குரு மணிநூல்'நின்
மாணடிக் குரிமை தேவே !

ஸ்ரீலஸ்ரீ சிவ சண்முக ஆறுமுக மெய்ஞ்ஞான
சிவாசாரிய சுவாமிகள்.

*ஏழாம் முறைத் தலைவர்,*
*ஸ்ரீமத் ஞானியார் மடாலயம்.*

அடிமை — க, பா. வேல்முருகன்

உ

வேலுமயிலுந் துணை.

சிவத்திரு சிவஞான பாலய தேசிகன் திருவடி வாழ்க.

ஸ்ரீமத் ஞான இராஜதானியான பொம்மய பாளையம் திருக்கயிலாய பரம்பரைப் பெரிய மடம், சிவகஞ்சி மயூரா சாலநிவாச யதீச்சுர கர்த்தரான, மயிலம் தேவத்தான ஆதீனப் பரம்பரைத் தர்மகர்த்தத்துவம், 19 ஆம் பட்டம் ஸ்ரீலஸ்ரீ சிவான பாலய சுவாமிகள் மகா சந்நிதானம் அருளிய

# அணிந்துரை.

" பூவாய் நெடுங்கோட் டுறுபசுந்தேன் கைகால் முடங்கு பொறியிலிதன்
நாவாய் ஒழுகிற் றெனவுலகம் அளந்த மாலும் நான்முகனும்
காவாய் எனநின் றேத் தெடுப்பத்தானே வுவந்தெங் கரதலத்தின்
மேவா வமர்ந்த மாமணியைத் தொழுது வினைக்கு வினைகொடுப்பாம் "

எல்லாம் வல்ல சிவபெருமான் ஆன்மாக்கள் தன்னை வழிப்பட்டு உய்யும் பொருட்டு அவைகட்கு இவ்வுலகத்தை-யும், வேண்டிய பொருள் இன்பங்களையும் உண்டாக்கிக் கொடுத்தான். ஆன்மாக்கள் எண்ணற்றன. அவைகள் யாவும் ஒரே நிலையில் இல்லாமல் தத்தம் மனம்போன போக்கிலே இயங்குவன ஆயின. நல்லன எண்ணி நல்லன சொல்லி நல்லனவற்றையே செய்து உய்வனவும் உண்டு. தீயன எண்ணித், தீயன சொல்லித் தீயன வற்றையே செய்து உழல்வனவும் உண்டு. இரண்டும் செய்து அவ்வக் காலங்களுக்கு ஏற்ப உழல்வன பெரும்பாலும் உண்டு. அதனுல் ஒரு காலத்தில் நல்லன மிகுதியாகவும், ஒரு காலத்-தில் தீயன மிகுதியாகவும் நிகழ்வதும் உண்டு. தீயன மிகுதியாக நிகழும் காலத்தில் இறைவன் திருவருள் முன் னின்று அவற்றைக் குறைக்கும். அப்படிக் குறைப்பதற்குத்

திருவருள் மேற்கொள்ளும் வழிகளுள் தக்க குரு மூர்த்தங்களை உலகுக்குத் தந்தருள்வதும் ஒன்ருகும். அவ்வாறு தந்து வந்த குரு மூர்த்தங்களின் பரம்பரையினர் உள்ள இடங்களே திரு மடங்களாகும்.

அத்திரு மடங்களுள் திருக் கோவலூர் ஆதீனம் ஸ்ரீமத் ஞானியார் மடாலயமும் ஒன்ருகும். அத் திருமடம் வீர-சைவ சமயத் திருமடமாகும். திருவண்ணமலை குகை நமச்சிவாயர் பரம்பரை அழியாதவாறு காக்கவந்த ஆதீனத் திருமடமாகும். இவ்வாதீன ஆதி ஞானியாரடிகள் திருக் கோவலூரில் தோன்றி அங்கேயே திருமடம் அமைத்து எழுந்தருளியதனுலும், ஸ்ரீ குகை நமச்சிவாயர் பரம்பரை ஆருவது பட்டத்துச் சுவாமிகளால் சிவலிங்க தாரணமும், தீட்சையும், உபதேசமும் பெற்றவராயினும் தாம் பழனி-யாண்டவர் திருவருளினுல் தோன்றியவராதலினுலும் இவர் முதலாகவரும் பரம்பரையானது திருக் கோவலூர் ஆதீனம் எனப்பட்டது.

தென்னுட்டு வீர சைவ திரு மடங்களின் ஆதி குருமூர்த்தங்களுக்கு ஒரு தனிச் சிறப்புண்டு. அது சிவ பரம்பொருளின் திருவருட்பேறு மட்டுமன்றித் திரு முருகனின் அருட்-பேறும் பெற்றதேயாம். எங்கள் மயிலம் – பொம்மபுர ஆதீனத்தின் ஆதி குருமூர்த்திகளும், இரண்டாம் குருமூர்த்திகளும் நேரே முருகனருள் பெற்றவர்களே யாவர்.

"அறிவனத அறிந்தார் மூவர் அறுமுகக் குரவன் தன்பால்
முறைவரு வருண முற்று முக்கணுன் குருவென் றன்பு
செறிகிலன் மலய வெற்புச் செஞ்சடை முனிவன் யாக்கை
குறியவன் குறுகி லானெங் கோன்சிவ ஞானி தானே"

என ஸ்ரீ சிவப்பிரகாச சுவாமிகள் சிவஞான பாலய சுவா-மிகள் கலம்பகத்தில் கூறியது காணலாம்.

அம்மாதிரியே திருக் கோவலூர் ஆதி ஞானியாரடிகளும் முருகனருள் பெற்றவராவர். அவர்களுக்கு "ஆறு முக குரு" எனச் செந்திலாண்டவனே திருநாமம் சூட்டியதாக வரலாறு கூறும். (பக் 16) அவர்கள் செஞ்சியை

அடுத்த அனந்தபுரத்துக்கு அண்மையில் உள்ள சிவகுன்றத்துக் குகையில் 16 ஆண்டுகள் தவமிருந்தபோது வழக்கம்போல் முருகன் திருவுருவத்தைப் பூசித்தார்கள்.

இவ்வாறு முருகனருள் மட்டுமன்றி, ஆதி ஞானியாரடிகள், உமையம்மையால் சூக்கும பஞ்சாட்சரமும் சிவபிரானுல் ஆராத்திரியர் வடிவில், காரண பஞ்சாட்சரமும், வீரபத்திர கடவுளால் மகா காரண பஞ்சாட்சரமும் உபதேசிக்கப் பெற்ருர்கள். (வரலாறு பக். 29, 36, 37). திருக் கோவலூரிற் கடுந்தவம் ஆற்றியிருந்த காலையில் முருகன் எதிர் தோன்றிப் பிரணவத்தினை உபதேசித்து ஐந்துமுறை தன் திருவடிகளை முடிமேற் சூட்டி இம் மந்திரத்தினுஞ் சிறந்த தொரு மந்திரம் இல்லையென்று உணர்த்திய நாள் முதல் அம் மடாலய உபாசன மூர்த்தியாக முருகனே விளங்குகிருன்.

இத்தகு சிறப்புவாய்ந்த ஆதி ஞானியாரடிகள் வரலாற்றினை அன்பர் வித்துவான், திரு. வேல்முருகஞ் செட்டியாரவர்கள் எழுதியுள்ளார்கள். நல்ல தமிழில் படிக்கச் சுவையுடையதாகப் பொருட் செறிவுடன் எழுதி யிருப்பது சிறப்பாகும். அவர்கள் மேற்படி ஆதீன ஐந்தாம் பட்டத்துச் சுவாமிகள் மாணவராவார்கள். அச் சுவாமிகளை அறியாதார் அறியாதாரே. அச்சுவாமிகளின் மாணவர் தாம் என்பதை நூலில் யாவரும் உணரும் வகையில் எழுதியுள்ளார்கள். பக்த பஞ்சாட்சரத்தின் சிறப்பினை விளக்கு மிடத்தில் ‘ஞான சம்பந்தர்’ என்ற திருநாமம் பாண்டியனுக்கும் “திருநாவுக்கரசர்” என்பது அப்பூதி யடிகளுக்கும் பக்த பஞ்சாட்சரமாகப் பயன்பட்டதைச் ஸ்ரீ சிவப்பிரகாச சுவாமிகள் பாடிய “உற்ருனவன்தவம்” என்ற பாடலை மேற்கோள் காட்டி விளக்கிய செயல் ஐந்தாம் பட்டத்து ஸ்ரீ ஞானியாரடிகளையே நினைப்பிக்கின்றது. (பக். 16) திருக் கோவலூர் என்பதற்குக் காட்டிய பொருள் விளக்கம் உணர்ந்து மகிழ்வதற் குரியது. (பக். 21) வரலாற்றின் இடை யிடையே காட்டப்பட்ட மேற்கோள்கள் ஆசிரியரின் புலமைக்குச் சான்று. பொதுவாக இவர் எழுதிய இந்த

ஆதி ஞானியாரடிகள் வரலாறு படிப்போர்க்கு வ ர லா று தெரிவிப்பதோடு தமிழறிவும், ஒரு சொற்பொழி வாற்றும் திறமையும் உண்டுபண்ணும் என்னலாம்.

'ஆசிரியர் அளித்த இந்த வரலாற்று நூலை அன்பர்கள் படித்து பயன் பெறுவார்களாக' எனக் கூறி 'ஆசிரியரும், நல்ல புகழும் பொருளும் இறையருளும் பெற்று இனிது வாழ்க' என எங்கள் முருகப் பெருமானையும் சிவ ஞா ன பாலய சுவாமிகளையும் வணங்குகின்றோம்.

---

ஓம்.
ஸ்ரீ சற்குரு சரணம்.

ஸ்ரீமத் ஞானனந்தகிரி சுவாமிகள்,
சித்திலிங்கமடம்.

ஸ்ரீ ஞானநந்தபுரி (தபோவனம்)
திருக்கோவலூர்.

# அணிந்துரை.

---

'இருள்சேர் இருவினையும் சேரா இறைவன்
பொருள் சேர் புகழ்புரிந்தார் மாட்டு.'

'ஆரா இயற்கை அவாநீப்பின் அந்நிலையே
பேரா இயற்கை தரும்.'

என்ற திருவள்ளுவரின் நுணுகிய கருத்தினை அனாதி கால முதலாகவே கடைப் பிடித்தொழுகுவது நம் இந்திய நாடு. அவ்வப்போது சிறந்த குருமார் தோன்றி மக்களைப் பிறவிப் பெருங் கடலிலிருந்து கரையேறச் செய்வதும் நம் பாரத நாட்டில் தொன்றுதொட்டே நிகழ்ந்து வருவது. அங்ஙனம் கரை யேற்றிய மூதறிஞர் வரலாறுகளை நாம் அறிந்தால் நம் முன்னேற்றத்திற்கு அவை சிறந்த தூண்டுகோலாக அமையும். அருஞ்செயல் புரிந்தார் வரலாறுகளை எழுதிவைக்காத குறை நம் நாட்டிலே மிகுதியும் உண்டு. இனியும் அவ்வாருய குறை நேராத வண்ணம் காப்பதோடு, இயன்றவரை கிடைக்கும் ஆதாரங்களைக் கொண்டு பெரியோர் வரலாறுகளை எழுதி வைத்தால் இந்நாளைய உலகிற்கு மிகவும் இன்றியமையாத சிறந்த தொண்டாகும்.

நடு நாட்டிலே திருக் கோவலூர் பன்னெடுங் காலமாகவே சிறப்புடைய ஊராகும். இங்கு வாழ்வது நமக்குக் கிடைத்த பெரும் பேருகும். தவமுதியோர் இறைவனருளால் தம் திருக்கு ஓவச் சிவநெறி பெற்றனர். இன்னும் அந்தப் பெருமை நம் நகருக்கு உண்டு. நாம் நம் திருக்கு (மன அழுக்கு) கள் ஓவ (கெட்டு ஒழிய) மேற்கொள்ளும் முயற்சிகள் இந்த திருத்தலத்திலே விரைவில் பெரும் பயனளிக்கும்.

இந்த மேலாம் பதியிலே சுமார் 300 ஆண்டுகட்கு முன்னே தோன்றி இறைவன் திருவருளையே சிந்தித்திருந்து அவனைப் பலமுறை நேரிற் கண்டும், அவனருளிய நிட்டானுபூதி நூலைப் பெற்றும் சிறந்து விளங்கிய பெரியார் ஸ்ரீலஸ்ரீ ஆறுமுக மெய்ஞ்ஞான சிவாசாரிய சுவாமிகள் ஆவர், அவர்கள் இறைவனருளிய நிட்டாநுபூதி நூலைத் தமிழ்ப் பாடல்களாக இயற்றியுள்ளார்கள். மேலும் பல நூல்களை-யும் இயற்றி யருளியிருக்கிறார்கள். அத்தகைய தவ முதியோர் வரலாறு இப்போது வெளிவருவது வரவேற்கத்தக்க தொன்-றாகும்.

இப்போது அம் மடாலய ஏழாம் பட்டத்தில் எழுந்தருளியுள்ள சுவாமிகள் இந்நூலை வெளியிடுவதால் தமிழ் நாட்டிற்கு ஓர் சிறந்த தொண்டினை ஆற்றுகிறார்கள். இங்ஙனம் பல தொண்டுகளை மேற்கொண்டு ஸ்ரீமத் ஞானி-யார் மடாலயம் மக்கள் நல் வாழ் வாழ்வுக்கு வழி வகுத்துச் செழித்து வளருமாக.

இந்நூலைத் தக்க ஆதாரங்களுடன் எழுதியவர், இவ்-வூர்க் கழக உயர்நிலை ஆண்பள்ளித் தலைமைத் தமிழாசிரியர் உயர் திருவினர் – வித்துவான் க. பா. வேல்முருகன் ஆவர். அவரது நடை இனிமை செறிந்ததாய்ப் பழந் தமிழ் நூல் மேற்கோள்களுடன் சிறப்புற விளங்குகிறது. இந் நூலைப் படிக்குங்கால் தேவார, திருவாசக, திருப்புகழாதி பல நூல்களின் சொற்களும் சொற்றொடர்களும் இனிமை பயக்கின்-றன. இந்நூல் பள்ளிக் கூடங்களிற் பாடமாக வைக்கப்படுமானால் மாணவர்கள் பல வகையில் முன்னேறுவர் என்பது திண்ணம்.

யாண்டும் சமய நெறி ஓங்கி யாவரும் நலம் பல பெறுக என வாழ்த்தித் திருவருளை இறைஞ்சுகிறோம்.

ஸ்ரீ ஞானானந்தகிரி சுவாமிகள்.
தபோ வனம்,
திருக் கோவலூர்.

உ

சிவமயம்

சிவ சண்முக மெய்ஞ்ஞான தேசிகன் திருவடி வாழ்க.



ஸ்ரீலஸ்ரீ சிவசண்முக மெய்ஞ்ஞான சிவாசாரிய சுவாமிகள்,
ஐந்தாம் பட்டத்துச் சுவாமிகள்.

உ

குருவே துணை.

திருவா மாத்தூர்
கௌமார மடாலயத் தலைவர்
தவத்திரு. தி. செ. முருக தாச ஐயா அவர்கள்

# அணிந்துரை.

## வெண்பா.

கோவல் ஆ தீனக் குருமணியாய் ஆறுமுக
மேவருட்பேர் கொள்ளுமுதல் மெய்ஞ்ஞான – தேவன்
திருவார் சரிதையுணர் சீரியோர்க் கெல்லாம்
பெரு வாழ்வுண் டாகும் பெரிது. 1.

கோவலூர் ஆறுமுகக் கோமான் அருள்மேவு
தேவனும் சண்முகப்பேர் சேர்ஞானி — தாவில்
திருப்பா திருப்புலியூர்ச் சீர்மடந்தா பித்தான்
குருப் பான்மை வேலனருள் கொண்டு. 2.

தண்டபா ணிப்பேர்த் தவன்மெய் யருட்சிறப்பார்
தண்டமிழ்ச்சீர்ப் பாவலவர் தம்சரிதை — கொண்ட
புராணத்தில் ஆறுமுகப் பூமான் புகழை
விராவ வுரைத் துள்ளார் மிக. 3.

தொண்டனுயி ரைத்தன்பால் தோயவைத்து [நல்லோர்தாம்
கொண்டிடத்தந் தெய்தும் குழவியிணை – மண்டுரித்தால்
வேல்நாட்டம் சண்முகப்பேர் மேவநல்கி ஞானியாம்
சால் பளித்தார் ஆறுமுகர் தாம். 4.

கோவலூர் ஆதீனம் கொண்ட குருமணிசீர்
ஆவலூர் உள்ளத்தால் ஆக்கினுன் — சேவலூர்
கைக்குமரற் கன்பு கவின்வேல் முருகநண்பண்
மிக் குரித்தால் ஈதுரைத்தல் மேல். 5.

ஆறுமுகப் பேர்ஞானி ஆளவரு சண்முகப்பேர்
வீறுபெறக் கொண்டவிரும் மெய்ஞானி — தேறுபுகழ்
மன்னு பரம்பரையில் வந்தஜந்தாம் ஞானியிடம்
துன்னுபுல மைத்திறல் பெற் ருேன், 6.

ஆதிகுரு வான ஆறுமுக ஞானிகதை
நீதியுரை நூலா நிகழ்த்திஞன் — மேதினியில்
வீரா கமச்சீர் விரவவரும் அக்குருதன்
சீராரும் தேர்ந்திட வென் றே. 7.

சித்தாந்த நற்கருத்து சீர்தோய் குருமாண்பு
வித்தார மேவும் விளையாடல் — கைத்தாங்கு
நெல்லிக் கனிபோல் நிலவளடுத் துக்காட்டால்
சொல்லித்தந் தான் இத் தொகுப்பு. 8.

அந்த மடத்தில் அவிர் - ஏழாம் பட்டத்தில்
வந்த பெருமை மலிபெரியோன் — சொந்த
மடத்தின் வெளியிடா மன்ன அளித்தார்
படித்தறிவார் கொள்வார் பயன். 9.

---

S. நடராஜ நாடார்,
ஓய்வுபெற்ற மாவட்ட நீதிபதி.

20, பெசண்ட் ரோடு,
சொக்கிகுளம், மதுரை – 2.

# அணிந்துரை.

திருக்கோவலூர் ஆதீனம் திருப் பாதிரிப் புலியூர் ஸ்ரீமத் ஞானியார் மடாலயத்தின் ஐந்தாம் குரு மூர்த்திகளான ஸ்ரீலஸ்ரீ சிவசண்முக மெய்ஞ்ஞான சிவாசாரிய சுவாமிகளுடன் நாங்கள் பழகியது வெகு சிலகாலமேயாயினும் அவர்களது கேண்மை உள்ளத்து ஆழமாக வேரூன்றி என்றும் பேரின்பம் பயப்பதாக அமைந்துள்ளது. அவர்களது அன்பும், அருளும், தமிழ் மக்கள் சமயநெறியில் விழிப்புடன் முன்னேற பெருந்துணையாக விளங்கியது.

அவர்களது அடிச்சுவட்டினைப் பின்பற்றி மடாலயத்து பின் பட்டத்து வந்துள்ள தலைவர்களும் மக்களுடன் நெருங்கிய தொடர்பு கொண்டு மேன்மைகொள் சைவ நெறி விளங்க, அரிய சேவைகள் பல செய்து வருகிறார்கள்.

“ நவில் தொறும் நூல்நயம் போலும் பயில்தொறும்
பண்புடையாளர் தொடர்பு ”

என்ற வள்ளுவர் வாக்கிற் கிணங்க பெரியோர்களுடன் தொடர்பு கொள்ளுதல் மிகுந்த இன்பம் பயப்பதுடன், நமது வாழ்க்கைப் படகு செவ்வனே செல்ல உறுதுணை யாகவும் அமையும். எனினும் பண்புடைய பெரியோர்களுடன் நெருங்கிப் பழகவும், எடுத்துக் காட்டாக விளங்கும் அவர்களது வாழ்க்கை வரலாறுகளை முற்றும் அறிந்து மகிழவும் எல்லோருக்கும் வாய்ப்பு கிடைத்தல் அரிது. தமிழகத்தில் பக்தியிலும் தொண்டிலும் மேம்பட்ட சான்றோர்கள் பலர்

வாழ்ந்து, அரிய நூல்கள் பல இயற்றியுள்ளார்கள். எனினும் அவர்களது வரலாறுகள் உரிய காலத்தில் திரட்டி வெயிடப் படாமையாலும், அவர்களது நூல்கள் அவ்வப்போது பிரசுரிக்கப் படாமையாலும், கால வெள்ளத்தில் ஆழ்ந்து அழிந்து போயின, போய்க் கொண்டிருக்கின்றன.

அத்தகைய குறை ஒன்று தங்களது முதற் குருமூர்த்தி விஷயத்தில் ஏற்படா வண்ணம், தற்போது ஞானியார் மடம் ஏழாவது குருமூர்த்தியாக விளங்கும் மகா சன்னிதானம் அவர்கள் ஸ்ரீலஸ்ரீ ஆறுமுக மெய்ஞ்ஞான சிவாசாரிய சுவாமிகள் அவர்களது தெய்வீக வரலாற்றினை மடாலயத்தின் பதினேழாம் வெளியீடாக வெளியிட திருவுள்ளங் கொண்டார்கள்.

சிறிய புத்தகமாயினும் பெரிய எழுத்துக்களில் எளிய நடையில், காலத்திற்கு ஏற்ற வகையில் அருமையாகத் திரட்டப்பட்டுள்ளது. தோற்றுவாய், நாட்டுச் சிறப்பு, நகரச் சிறப்பு முதலியன எடுத்த எடுப்பிலே நூலுக்கு பொருத்தமாக அணி செய்கின்றது. ஞானியார் வரலாற்றைக் கூறுமுகத்தான் சமய உண்மைகள் பல தெற்றென விளக்கப்பட்டுள்ளது. ஐந்தெழுத்து, ஆறெழுத்து மகிமைகள் இறைவன் தன்னை அடைந்தார்க்கு தலையாய அருள் நல்கும் பான்மை, மக்கட்பேறு வேண்டி அன்பொடு வழிபடுவோருக்கு கிடைக்கும் பேறு முதலியன படிப்போர் உள்ளத்தை மிகவும் கவர்கின்றன.

முதற் குருமணி அவர்கள் பழநி ஆண்டவன் அருளால் பாரில் உதித்தது, செந்தில் குமரன் மலர்வாயால் பெயர் சூட்டப்பெற்றது, உமையம்மைபால் உபதேசம் பெற்றது. இறைவன் திருக் கரத்தினின்று திருநீறு, உருத்திராக்க மாலை பெற்றது முதலியன நெஞ்சை நெகிழ்விக்கும் அற்புதச் செயல்களாகும். அடிகளாரது தவ ஒழுக்கமும், அவர்கள் மாணுக்கர்களுக்கு அன்புடன் உபதேசித்து திருவருள் பாலித்தமையும் மிகவும் சுவைபடக் கூறப்பட்டுள்ளது. சுவாமிகளது பாடல்களான சதுர்லிங்க சதகோத்ர சதகத்தி-

லிருந்து மேற்கோள்கள் எடுத்து ஆளப்பட்டுள்ளது தகுந்த அகச்சான்ருக அமைந்திருக்கிறது. மற்றும் தேவாரம், திரு-வாசகம், பெரிய புராணம் முதலிய பல நூல்களிலிருந்தும் பல பாடல்கள் செம்பொன் அணியில் வயிரம் பதிக்கப் பெற்றதுபோல் அழகுபட எடுத்தாளப் பட்டிருக்கின்றன.

"அடிகளார் வரலாறு" முதலிலிருந்து முடிவு வரை சிவமணம் கமழும் ஒரு செவ்விய நூல். அதில் சுவாமிகள் வரலாறு தவிர அவர்களது மாணுக்கர்களாக விளங்கி அவர்-களது தெய்வப் பணியை திறம்பட வளர்த்த பல அன்பர்கள் சரிதங்களும் அறியக் கிடக்கிறது. இஃது அன்பர்கள் படித்து இன்புற வேண்டிய நூல் மாத்திரமல்ல. பள்ளிகளில் பாடநூலாக வைத்து தமிழகத்தின் சான்ருேர்களுடன் மாண வர்கள் உறவாட இளமையிலே பயிற்சி கொடுக்க சிறந்த நூல்.

இத்தகைய நூல்கள் பல வெளிவந்து தமிழகத்தில் இலைமறை காய்போலும், குடத்திலிடப்பட்ட விளக்குப் போலும் இதுவரை வெளி வராதிருக்கும் பல அறிஞர்களது வாழ்க்கை வரலாறுகள் மக்களுக்கு கிடைக்க உதவிபுரிய வேண்டும். திருக் கோவலூர் ஏழாவது மகா சன்னிதானம் அவர்கள் இந்நூலை நல்ல முறையில் வெளியிட்டமைக்கு தமிழகத்தின் நன்றி அவர்கட்கு என்றும் உரித்தாகும்.

இங்ஙனம்,
R. நடராஜ நாடார்
புஷ்பம் நடராஜன்

டாக்டர் அ. சிதம்பரநாதன்,
எம். ஏ., எம். எல். சி.,
முதல்வர்,
தியாகராசர் கல்லூரி, மதுரை – 9.

# முன்னுரை.

திருக் கைலாய பரம்பரைத் திருக் கோவலூராதீனம் திருப் பாதிரிப் புலியூர் ஸ்ரீமத் ஞானியார் மடாலய முதற் குருமூர்த்திகள் அருட்டிரு ஆறுமுக மெய்ஞ்ஞான சிவாச்சாரிய சுவாமிகள் வரலாற்றினைத் திருமடத்தின் ஐந்தாம் குரு அவர்களுடைய மாணவரும், என் நண்பருமாகிய வித்துவான் திரு க. பா. வேல்முருகன் அவர்கள் இயற்றி வெளிப்படுத்துவதற்கு ஏற்பாடு செய்துள்ளார். ஏறத்தாழ முந்நூறு ஆண்டுகளுக்குமுன் புகழொடு தோன்றி, ஒளி மிக்கவராய் வாழ்ந்து, அடியவர் குழாங்களுக்கு அருள்புரிந்த பெருமையுடையவர் ஆறுமுக மெய்ஞ்ஞான சிவாச்சாரிய சுவாமிகள். அவர்களுடைய பிறப்பும், வாழ்க்கையும் பற்றிய வரலாற்றினை இனிய நல்ல தமிழில் திரு. வேல்முருகன் இயற்றித் தந்துள்ளார். திருமுனைப்பாடி நாட்டின் சிறப்பும், திருக் கோவலூர் நகரச் சிறப்பும் படிப்போர் இன்புறும் வண்ணம் அமைத்துத் தரப்பட்டுள்ளன. திரு. முருகப் பெருமானின் பெருமையும், திருவைந்தெழுத்தின் மாண்பும், ஆறெழுத்தின் அரும் பொருளும் தெளிவாக இப் புத்தகத்தில் விளக்கப் பட்டுள்ளன.

இப் புத்தகத்தைப் படிக்கும்பொழுது தேவார திருவாசகங்களின் நினைவும், திருத்தொண்டர் புராண நினைவும் எழுகின்றன. சதுர்லிங்க சதகோத்ர தசக நூலிலிருந்து பல மேற்கோள்கள் விளக்கங்களுடன் கொடுக்கப் பட்டிருக்கின்றன. இப் புத்தகத்தில் நிட்டானுபூதி நூலுக்கும், பாவனாதீத

ஒரு வார்த்தைக்கும் சிறந்த விளக்கங்கள் தரப்பட்டிருக்கின்றன. இந் நூலினை அன்பர்கள் படித்துப் பயனுறுவார்கள் என்று எதிர் பார்க்கிறேன்.

சைவத்தையும், தமிழையும் பல்லாண்டுகளாக வளர்த்துவரும் திருக் கோவலூர் ஆதீனத்தாரின் சிறந்த தொண்டுகள் மேன் மேலும் சிறப்புறுதற்கு இறைவன் அருளுக என வழுத்துகின்றேன்.

அ. சிதம்பரநாதன்

' தமிழ்பெரும் புலவர் ' பேராசிரியர்
வித்துவான் சரவண ஆறுமுக முதலியார்,
எம். ஏ., பி. ஓ. எல். எல்டி.,
(ஓய்வுபெற்ற அரசினர் கல்வித்துறை முதல்வர்),
முதல்வர்,
ஸ்ரீ பழனியாண்டவர் இந்தியப் பண்பாட்டுக் கல்லூரி, பழனி.

# அணிந்துரை.

இவ்வுலகின்கண் ஓரறிவு முதல் ஆறறிவும் நிரம்பப் பெற்ற உயிரினங்கள் கோடிக்கணக்காகத் தோன்றி மறைகின்றன. அவற்றுள் மக்கள் இனம் ஒன்று மட்டுமே தனக்கு உண்டாகும் இன்னல்களைத் தவிர்த்து தூய இன்பத்தைப் பெருக்கிக்கொண்டு இறுதியில் வீடு பேற்றையும் அடையும் பெற்றியுள்ளதாகிறது.

இத்தகைய மக்கள் இனத்தை நல்லவழியில் செலுத்த அவ்வப் பொழுது பல பெரியார்கள் நாட்டில் தோன்றி நலம் பல புரிந்து வருகிறார்கள். அவர்களுள் ஒருவராகிய திருக் கயிலாய பரம்பரைத் திருக் கோவலூராதீனம் திருப் பாதிரிப் புலியூர் ஞானியார் மடாலய முதற் குருமூர்த்திகளாகிய தவத்திரு ஆறுமுக மெய்ஞ்ஞான சிவாசாரிய சுவாமிகளை அறியாதவர்கள் இல்லை.

உண்மைக்கு உறைவிடமாகிய அம் மூர்த்திகளது வரலாற்றை இத் தமிழக மக்கள் நன்கு அறிந்து அவர்களது மெய்யுணர் வுரைகளை மேற்கொண் டொழுகி நன்னிலை யுறுதல் இன்றியமையாததாகும். இதுவரை வெளி வந்திராத அவர்களது வாழ்க்கை வரலாற்றை இம் மடாலய ஐந்தாம் பட்டம் தவத்திரு சிவசண்முக மெய்ஞ்ஞான சிவாசாரிய சுவாமிகளின் மாணவரும், திருக் கோவலூர் கழக உயர் நிலைப் பள்ளித் தலைமைத் தமிழாசிரியருமாகிய வித்துவான்

க. பா. வேல்முருகன் அவர்கள் எழுதி முடித்துள்ளமை பெரிதும் பாராட்டிற்குரியதாகும்.

திரு. க. பா. வேல்முருகன் அவர்கள் எழுதியுள்ள வரலாற்றுப் பகுதியில் சுவாமிகளது தோற்ற வரலாற்றையும், வாழ்க்கை முறைகளையும் மிக்க நயமாகவும், சொல், பொருள், செறிவு உடையன வாகவும் அமைத்துள்ளார். மேலும் சுவாமிகள் மடாலயக் குருமூர்த்திகளாக அமைந்து தமிழகத்தில் சைவ சமயத்திற்கும் தமிழுக்கும் அவர்கள் ஆற்றிய பெரும் பணிகளையும் மெய்யுணர்வுரைகளையும் முருகப் பெருமானிடத்தில் அவர்களுக்கு இருந்த ஈடுபாட்டினையும் அதற்கு ஒப்ப முருகப் பெருமான் ஆங்காங்கே சுவாமிகளுக்கு அருள் புரிந்து இறுதியில் அவர்களை ஆட்கொண்ட முறைமையினையும் தெள்ளத் தெளிய எடுத்தியம்பியுள்ளார். இந் நூலைத் தமிழ் மக்கள் ஒவ்வொருவரும் படித்துப் பயனுற எல்லாம் வல்ல முருகப் பெருமான் அருள் புரிவாராக.

பழனி. S. ஆறுமுக முதலியார்,
முதல்வர்.

உயர்திரு, S. சச்சிதானந்தம் பிள்ளை அவர்கள்,
B. A., L. T.,
சென்னை.

# அணிந்துரை.

திருக் கயிலாய பரம்பரைத் திருக் கோவலூர் ஆதீன முதற் குரு மூர்த்திகள் ஸ்ரீலஸ்ரீ ஆறுமுக மெய்ஞ்ஞான சிவாசாரிய சுவாமிகள் வரலாறு என்னும் இந்த அரிய நூல் அச்சுவாமிகளின் ஆலய ஜீரணோத்தாரண கும்பாபிடேக மலராக வெளி வருகின்றது. இதனை இயற்றியவர் இம்மடாலய ஐந்தாம் குருமூர்த்தியின் மாணவராகிய வித்துவான் திரு. க. பா. வேல்முருகன் அவர்கள். வெளியிட்டருளுபவர்கள் திருப் பாதிரிப் புலியூர் ஸ்ரீமத் ஞானியார் மடாலயத்தின் தலைவரா யிருக்கும் சுவாமிகள்.

இந் நூலின் 'தோற்றுவாய்' என்னும் தொடக்கப் பகுதியே நுண்பொருள்கள் சிலவற்றைக் குறிக்கின்றது. நடுநாட்டுச் சிறப்பு, திருக் கோவலூர் நகரச் சிறப்பு என்பன பற்றி அறிவித்தபின், திருக் கோவலாதீன முதற் குருமணியின் சரிதம் கூறத் தொடங்குகின்றது. அவர்களின் பெற்றோர்கள் புகழ்பெற்ற ஆத்மகூர் ஸ்ரீ சோமநாத ஆராத்திரியர் என்னும் வீர சைவ ஆசாரியர் மரபில் வந்த பெருமை, மகப் பேறு கருதித் தவங்கிடந்து பலதலங்களைத் தரிசித்துத் திருக் கோவலூரை அடைந்தமை, பின்பு, கலி 4774ல் (கி, பி. 1770ல்) இந்நூலின் தலைவர் அவதரித்தமை முதலிய அரிய செய்திகள், நூலின் முற்பகுதியில் கூறப்படுகின்றன.

பின்பு, இச் சுவாமிகளின் பிள்ளைப் பருவம் அவர் நித்த நியமங்கள், துறவுநிலை, அம்பிகையிடம் உபதேசம் பெறுதல், மனோலயம் உண்டாக்க இயற்றிய கடுந்தவம், இறைவன் இவருக்கு நிட்டானுபூதி நூலும், பாவனாதீத ஒரு

வார்த்தை உபதேசமும் அளித்தமை, அக்காலத்தில் திருவருணையிலும், திருக்கோவலூரிலும் இருந்த அனுபூதிமான்களின் தொடர்பு முதலிய பல அரிய விவரங்கள் தரப்பட்டுள்ளன.

அதன் பிறகு ஸ்ரீ ஆறுமுக சுவாமிகள் திருக்கோவலூர் ஆதீனத்தைத் தாபித்தமை, பின்பு அவர்கள் திருமுதுகுன்றம், திருப் பாதிரிப் புலியூர், ஆரணி, திருமலை சமுத்திரம் முதலிய பல தலங்கட்கு யாத்திரை செய்தமையும், மடங்கள் நிறுவினமையும், சிவ குன்றத்தில் பல ஆண்டுகள் தவம் புரிந்தமையும் பற்றிய விவரங்கள் தரப்பட்டுள்ளன. பின்பு, முருகக் கடவுளிடமிருந்து தாம்பெற்ற பிரணவ உபதேசம் பற்றிய மிக நுட்பமான விளக்கங்களும் அளிக்கப் பட்டுள்ளன,

மாபெருஞ் சிவாநுபூதிச் செல்வராகிய இச் சிவாசாரிய சுவாமிகட்கு நேர் மாணவர்களாயிருக்கும் பேறுபெற்ற பலருள் சிலர் அருமைவாய்ந்த நூல்களை அருளிச் செய்துள்ளார்கள். இவர்களைப்பற்றிய சில விவரங்களும் தரப்பட்டுள்ளன.

இக் குருமூர்த்தியவர்களே 31 நூல்களை அருளிச் செய்துள்ளமையும், இவற்றுள் நிட்டானுபூதி சாரம் * தனிப் பெரும் சிறப்பினை யுடையதாய்த் திகழ்வதையும் "நிட்டானுபூதி வரலாறு" பாவனுதீத ஒரு வார்த்தை என்ற தலைப்புக்களின் கீழ் குறிக்கின்றார்.

நுட்பமாகிய ஞான அநுபூதி உண்மைகளை முதற் குருமூர்த்திகள் விளக்கி யருளியுள்ளதை, இப்போது வெளி

* தனிச்சிறப்புடைய இவ்வநுபூதி நூல் வாதுலாகம உத்தர பாகத்தில் உள்ளதோர் படலத்தின் தமிழ் மொழிபெயர்ப்பாகும். இது 91 செய்யுட்களை உடையது. இதற்கு 1845 அல்லது 1847ல் முத்து கிருஷ்ண பிரம்மம் என்னும் பேரறிஞர் வரைந்துள்ள உரை அற்புதமானது. சிவாநுபூதி நாட்டமுடையார்க்கு ஞான விளக்கென உதவும். இவ்வுரைக்கு சிதம்பரம் இராமலிங்க சுவாமிகள் உள்ளிட்ட 20 பேர்கள் சாற்றுக்கவிகள் தந்துள்ளனர்.

வரும் நூல் தெரிவித்து உதவுகின்றது. இதனைப் படிப் போர்க்கு ஆன்மா அடைதற்குரிய ஆதி உன்னதக் குறிக்– கோளாகக் காட்டி, அதை அடைவதில் ஆர்வம் பெருக்கும் முறையில் எழுதப்பட்டுள்ளது.

பிறகு முதற் குருமணியவர்கள் இவ்வுலகில் நடமாடும் தெய்வமாய் உலவி, நாடி வந்தோர்க் கெல்லாம் நலம் பல விளைத்தமை, தாம் முருகக் கடவுளிடமிருந்து பிரணவ உப- தேசம் பெற்றமை, அதனால் அளவிலா ஆனந்தம் அடைந் தமை முதலிய பல அரிய நிகழ்ச்சிகள் கூறப்பட்டிருக்கின்– றன. இவற்றைத் தொடர்ந்து, இக் குருமணிவயர்களின் சீடர்கள் ஐவரைப் பற்றிய சில குறிப்புகளும் தரப்பட்- டுள்ளன.

ஞானநுபூதிப் பெருஞ் செல்வமொன்றிருப்பதை மறக்க வைக்கும் நவநாகரீக மயக்க உலகில் வாழ்கின்றோம். இச் சமயத்தில், ஞான நிஷ்டையில் நிலைத்து நின்று, சிவத்- தோடு கலந்த சீர்சான்ற இம் முதற் குருமணியின் வரலாற்று நூலை, அவர்கள் தோற்றுவித்த மடாலயத்தின் தலைவராக இப் போது அமர்ந்திருப்பவர்கள், வெளியிட்டருளுவது போற்ற தக்கதோர் சிவ புண்ணியச் செயலாகும்.

இந் நூலின் ஆசிரியர், அதிற் போற்றப்பட்டுள்ள ஸ்ரீமத் ஞானியார் மடாலய முதற் குருமூர்த்தியின் சீட பரம்- பரையைச் சேர்ந்தவர். தமிழ்ப் புலமையும் சைவ சீலமும் உடையவர். வித்துவான் பட்டம்பெற்று ஓர் உயர்நிலைப் பள்ளியில் தலைமைத் தமிழ் ஆசிரியராய் நற்பணி புரிபவர். இந்த அருமைவாய்ந்த நூலைச் சமய உலகிற்கு இவர் அளித்- திருப்பது மிகவும் போற்றி வரவேற்கத் தக்கது. அங்ஙனமே இதனைப் பொருத்தமானதோர் நாளில் வெளியிடும் தவத்– திருவுளங்கொண்ட ஸ்ரீமத் சுவாமிகட்கும் சமய நம்பிக்கை உடைய நல்லோர் அனைவர் நன்றியும் உரியதாகும்,

(ஒப்பம்) ச. சச்சிதானந்தம் பிள்ளை,
சென்னை.

கி. இராமலிங்கம், எம். ஏ.,
ஓய்வுபெற்ற ஆட்சிமொழித் தனி அலுவலர்.
சென்னை.

# அணிந்துரை.

திருவார் திரு. ஞானியார் அடிகளாரின் அகங்கனிந்த அன்பினுக்கு உரியவரானவர்களில் நானும் ஒருவன். 1916ல் முதன் முதலில் வாலாசாபாத்தில் அவர்களைச் சேவிக்கும் வாய்ப்புப் பெற்றேன். 1928ல் திருப் பாதிரிப் புலியூரிலேயே உதவிப் பதிவாளனுக அலுவலாற்றியபோது அன்ருடம் திருமடத்தில் அவர்களை வணங்கும்பேறு பூண்டேன். அவர்கள் சென்னையில் தொடர்ந்து திருவாய் மலர்ந்த அருட் பேருரைகள் பலவற்றைச் செவிமடுத்து இன்பமும் இரு பயனும் எய்தியவன். பிறகும் 1940—42ல் விழுப்புரத்தில் நகராட்சி ஆணையனுக இருந்த காலம்வரையில், அவ்வப்போது ஆங்காங்கே அவர்களது அருளுரைகள் கேட்டுப் பயன்பெருகி, அவர்களது அடிமலர்கள் பேணி கடைக்கணிக்கப் பெற்றவன்.

தமிழ் நாடெங்கணும் எழுந்தருளி, ஆங்காங்கே அருளுரை மாரிபெய்து, மக்கள் திருநெறியில் ஒழுகிச் செந்தமிழைப் போற்றுதற்கு வித்திட்டு வளர்த்துவந்த அரும் பெருந்தகையார், திருக் கோவலூர் ஆதீனத்தின் ஐந்தாம் பட்டமாக அருள் அரியணை யமர்ந்திருந்த திருவார் திரு. சிவ சண்முக மெய்ஞ்ஞான சிவாசாரிய சுவாமிகள் அவர்கள் என்பதை எல்லோரும் அறிவர். அவர்களைச் சேவிக்கும் போதெல்லாம்,

"தக்கார் தகவிலர் என்பத வரவர்
எச்சத்தால் காணப் படும்"

என்னும் பொய்யா மொழியின்படி, இவ்வளவு மேன்மை-யோடு மிளிரும் இவர்கள் ஞான முதல்வர் அவர்களின் அரும் பெருந்தன்மைகள் எவ்வளவு உயர்ந்தனவா யிருந்திருக்க வேண்டும் என்று எண்ணுவதுண்டு.

ஒரு முறை திருக் கோவலூர் திருமடத்தில் அடிகளார் தங்கியிருந்தபோது, அங்கு அவர்களை வணங்கச் சென்றி-ருந்தேன். அஞ்ஞான்று அடிகளார் தமக்கு இடைவிடாது அருளுணர்வு சுரந்தளித்து வரும் ஆதீன முதல்குரவர் அவர்களின் திருக் கோவிலுக்கு அழைத்துச் சென்று, ஆற்றுப் படுத்தி, அக் குருபிரானுர் அருளிச் செய்த 'நிட்டானுபூதி சாரம்' முதலிய அரிய மெய்யுணர்வு நூல்களைப் பற்றிய செய்திகளை எடுத்துரைத்தார்கள்.

அவ்வண்ணம் வழிபடுவதற் குரியவர்களான கோவல் ஆதீன முதல் குருமணியாம் திருவார்திரு. ஆறுமுக மெய்ஞ் ஞான சிவாசாரிய சுவாமிகள் அவர்களின் அருள் வர-லாற்றை இந் நூல்வடிவில் கண்டபோது மட்டிலா மகிழ்ச்சி யடைந்தேன். இதில், அப் பெருமானுரின் அருள் தோற்ற-மும், அற்புத வளர்ச்சியும், அருந்தவச் சிறப்பும் அனுபவ-மாண்பும் அருமையாகவும் சுருக்கமாகவும் விளக்கப் பெற்-றிருக்கின்றன.

கருவிலேயே திருவுடையவர்களாகத் தோன்றிய வர்கள் இவ்வருந்தகையார், திருவண்ணமலை குகை நமச்சி-வாயர் திருமடத்தின் ஒன்பதாம் பட்டமாக அமர்ந்த ஒரு நல்லாருக்கு ஞான உணர்வு ஊட்டுவதற்கு ஓர் அருட் குர-வரைத் தோற்றுவிக்கக் கருதிய திருவருளானது, ஞானம் பெருக்கும் நற்குழந்தை பிறக்க வேண்டும் என்று இக் குரு-பரனுரின் பெற்றோரைத் தவங்கிடக்கச் செய்தலும், அருள் வயத்தால் ஞானகுரு கருவுறுதலும், கருவிலுள்ளபோதே இறைவனுல் பெயர் சூட்டப்பெறலும், பிறந்ததுமே அன்னை அத்தனுர் அகன்றுவிட பிறவித் துறவியாதலும், ஐந்தெழுத்-தின் ஐந்து படிகளின் அநுபவ நிலைகளைப் படிப்படியாக, இளமையிலேயே அருட் பாங்கால் உணர்த்தப் பெறுதலும், ஆற்றுதற்கரிய அருந்தவமியற்றி நிறையருளுணர்வு கைவரப்

பெறுதலும், அவ்வுணர்வினைப் பல அருள் நூல்களில் பொதிந்து உலகம் உய்ய வெளியிடுதலும், 93 ஆண்டுகள் அருட் செங்கோல் செலுத்தி நேரில் தொடர்புகொண்ட பல நல்லோர்களுக்கு அருளுணர்வளித்தலும், மிகமிக வியக்கத்-தக்க நிகழ்ச்சிகளாக, இந் நூலில் அமைந்துள்ளன.

இந்நூலைச் சுவையுற எழுதியுதவியவர் 5 ஆம் பட்டத்து அருட்பெருங் குரவர் அவர்களின் மாணவராகிய 'வித்துவான் திரு. க ப. வேல்முருகனுர் என்பது அறிய மகிழ்ச்சி மிகு-கிறது. அடிகளாரின் எச்ச மாண்பிற்கு ஓர் எடுத்துக் காட்டாக விளங்குகிருர் இவ்வாசிரியர். இவரது இச் சிறந்த பணியைப் பாராட்டி யுவக்கின்றேன்.

ஆதீனத்தின் ஏழாம் குரவராக வீற்றிருக்கும் திருவார் திரு. சிவசண்முக ஆறுமுக மெய்ஞ்ஞான சிவாசாரிய சுவாமிகள் அவர்கள் இந்நூலை எழுதுவித்திருக்கிருர்கள். திரு மடத்தின் பெருமை விளங்குவதற்கு இவர்கள் செய்துவரும் அரும்பணிகள் போற்றற் பாலன. திருமடத்தின் வெளியீடு களாக இதுவரையில் அரிய நூல்கள் வெளிவர ஏற்பாடுகள் செய்து உதவியருளும் இவர்கள் புகழ் இனிது ஓங்குக! ஐந்தாம் குரவர் அவர்கள் காலம் முதலே இவர்கள் அடி-யேன்பால் அன்புடையவர்கள். இந்த அணிந்துரையை வரைந்து தருதல் வழியாக, இந்நூலின் வெளியீட்டில் நானும் பங்குகொள்ள வாய்ப்பளித்த அடிகளார் அவர்களின் அருட் பாங்கிற்கு வணக்கம் செலுத்தி, என் உளமார்ந்த நன்றி யறிதலைத் தெரிவித்துக் கொள்ளுகிறேன்.

"தமிழ் மணம்"
சென்னை-30 — நீ. இராமலிங்கம்

சித்தாந்த கலாநிதி, பேராசிரியர், உரைவேந்தர்,
ஔவை. சு. துரைசாமிப் பிள்ளை,
தியாகராசர் கல்லூரி, மதுரை,

# அணிந்துரை.

---

நமது நாட்டின் பொது வரலாறு காண்பதே அரிது. சமுதாயம், வாணிகம், அரசியல் முதலிய கூறுகளின் வளர்ச்சி முறைகளை வரலாற்று முறையில் வைத்து மேலை நாட்டவர் எழுதி வைத்ததால் இன்று அவர்கள் இடைக் காலத்தில் உண்டான வளர்ச்சி வீழ்ச்சிகட்குரிய காரணங்-களை அறிந்து அவற்றிற் கேற்பத் தமது எதிர்கால ஆக்கப் பணிகளை வகுத்து முறையே முயன்று மேன்மையுற்று வரு-கின்றார்கள். நமது நாட்டில் அத்தகைய வரலாறுகள் இல் லாமையால் பல துறைகளில் நமது முயற்சி இடையூறும் இடையீடும் எய்தித்தடையுற்று இடர்ப்படுவதைக் காண்கி கிறோம்.

வாழ்க்கைக்கு நேரிய பொருளாதாரத் துறையிலேயே இத்தனைக் குறைகள் என்றால் சமயத் துறைகட்குச் சொல்ல வேண்டுவது இல்லை. நமது நாட்டில் சமயத்துறையில் அவ்வக் காலங்களில் எத்தனையோ சமயக் கொள்கைகள் தோன்றின. சான்றோர்களும் மிகப் பலர். இன்று சமய நிலையில் புத்தர், சங்கரர், இராமாநுசர், மாத்துவர் என்ற பெரு மக்களின் வரலாறும், இராமகிருஷ்ண பரமஹம்சர், விவேகா-னந்தர் ஆகியோர் வரலாறும் கல்வி கற்போரிடையே நிலவுவதுபோல, சைவ சமய குரவர்களான ஞானசம்பந்தர், நாவுக்கரசர், சுந்தரர், மாணிக்கவாசகர் முதலியோர்களின் வரலாறும், மெய்கண்டார், அருணந்திசிவம், உமாபதிசிவம் முதலியோர்களின் வரலாறும் மக்களிடையே பரவவில்லை.

சைவத் துறையிலேயே பாசுபதம், காபாலம், மாவிரதம், காளாமுகம் முதலாகப் பல சமயங்கள் ஒரு காலத்தில் தோன்றி நாட்டில் பரவியிருந்தன. அவற்றைத் தோற்றுவித்த சான்றோர்களின் வரலாறும் அவர்கள் மேற்கொண்ட கொள்கைகளும் இன்று அறிபவர் இல்லை; அவற்றைக்கூறும் நூல்களும் அருகிவிட்டன.

இவ்வாறே, சமயக் கொள்கைகளை நாட்டில் பரப்பும் வகையில் ஞானசிரியர்கள் பலர்தோன்றி மடாலயங்கள் நிறுவிச் சமயப்பணி புரிந்துள்ளனர். அம் மடாலயங்களின் தலைவர் வரலாறும், அவர்கள் செய்தருளிய சமயப்பணிகளும் இன்று நாம் வரலாற்று நெறியில் காணும் வாய்ப்பில்லாமல் இருக்கிறது.

இந்நிலையில், திருக் கோவலூர் ஆதீனம் திருப் பாதிரிப் புலியூர் ஸ்ரீமத் ஞானியார் மடாலய முதற் குரவரின் வரலாறு இன்று நாமெல்லாம் நன்கு தெரிந்துகொள்ளும் வகையில் சைவத்திரு. வித்துவான், க. பா. வேல்முருகன் அவர்களால், அழகிய இனிய எளிய செந்தமிழில் எழுதி வெளியிடப் பெறுவது பெரிதும் விரும்பிப் போற்றத் தக்கது.

மடாலய முதற் குரவர் ஸ்ரீலஸ்ரீ ஆறுமுக மெய்ஞ்ஞான சுவாமிகளின் வரலாற்றை இந் நூலாசிரியர் அகச்சான்றும் புறச்சான்று மாகிய சான்றுகள் பலவற்றையும் கொண்டு அழகுற எழுதியிருக்கின்றார். அவரது உரை நடையில் திருப்புகழ், தேவார திருவாசகங்கள் முதலிய பெரு நூல்களின் கருத்துக்களும் சொற்களும் சொற்றொடர்களும் பொன்னிடைப் பதித்த நன்மணிகள்போல் தோன்றி ஒளிசெய்கின்றன.

இவ்வாறே, இந்நூலாசிரியர் மற்றைய குருமூர்த்திகளின் வரலாறுகளையும் ஆராய்ந்து வெளியிடுதல் வேண்டும்; திருவருள் துணை செய்யும் என்று துணிகின்றேன்.

"ஞாலம் நின்புகழேமிக வேண்டும், தென்
ஆலவாயில் உறையும் எம் ஆதியே"

அன்பன்,

**ஔவை சு. துரைசாமி**

# அணிந்துரை.

(திரு. ந ரா. முருகவேள், எம். ஏ., எம். ஓ. எல்.)
ஆசிரியர், " திருக்கோயில் " சென்னை.

---

தொகையாலும் வகையாலும் சொல்ல மேற்கொள்
பொருள் விரித்துத் துலங்குதற்கா
நகையோடு பொருள் செறிந்த நல்லுவமை
நன்மேற்கோள் நயமும் காட்டித்
தகையாய வழக்கோடு சாத்தி ரத்தின்
நுணுக்கங்காள் தகவிற் காற்றித்
திகையாவும் சிவம்பரப்பும் திருப் புலிசை
ஞானியர்தாள் சிந்தை செய்வாம் !

'*திருப் பாதிரிப் புலியூர்*' என்னும் தலத்தின் பெயரைக் கேட்ட அளவில், தமிழ் அன்பர்களுக்குக் கெல்லாம் *ஞானியார் அடிகள்*, பற்றிய நினைவே முதற்கண் எழும். இந் நூற்றாண்டில் செந்தமிழும் சிவநெறியும் செழித்தோங்கு தற்குப் பல்லாற்றானும் தொண்டாற்றிய பெருமக்கள் பலருள், ஞானியார் அடிகள் தலைசிறந்த ஒருவர் ஆவர் ! ஞானியார் அடிகளின் முழுப்பெயர், *சீலத் திரு. சிவசண்முக மெய்ஞ்ஞான சிவாசாரிய சுவாமிகள்* என்பது.

ஞானியார் அடிகள் தென் சொற்கடல் கடந்தவர்; வடசொற்கு எல்லை தேர்ந்தவர். தெலுங்கு கன்னட மொழிகளிலும் தேர்ச்சி பெற்றவர். ஆங்கிலமும் அவருக்கு நன்கு தெரியும். இசைத் துறையிலும் பயிற்சியுண்டு !

இவரைப் புலமையில் *திருஞானசம்பந்தர்*; தொண்டில் *திருநாவுக்கரசர்*; உலகியலுணர்விலும் கலையுணர்விலும் *சுந்தரர்*! அன்பிலும் உருக்கத்திலும் *மாணிக்கவாசகர்*; பக்திநெறி பரப்புதலிற் *சேக்கிழார்*; தவநெறி ஒழுக்கச்சால்பிற் *சிவஞான முனிவர்* எனப் பல வகையில் போற்றிப் புகழ்தல் பொருந்தும்.

தமிழ்நாடு முழுவதும், மூலை முடுக்கர் எங்கணும் திருவுலாச் சென்று, ஆயிரக் கணக்கான தம் அரும்பெரும் சொற்பொழிவுகளால் ஞானஒளி பரப்பி, தம் வாழ் நாளில் அரை நூற்றுண்டுக்கு மேலாக நாட்டிற்குப் பெருந்தொண்டு ஆற்றியருளினுர், ஞானியார் அடிகள். *டெமாஸ்தனீஸ், ஸிஸரோ, எட்மண்ட்பர்க்* போன்ற உலகப் புகழ்பெற்ற பெரு நாவலர்களின் வரிசையில் வைத்துப் பெரிதும் மதிக்கத்-தக்கவர் நம் ஞானியார் அடிகள். அவர் தம் அரிய இனிய சொற்பொழிவுகளைக் கேட்டுக் கேட்டே, எத்தனையோ நூற்-றுக்கணக்கான பலர் கல்வி நலனும் புலமை நலனும் எய்திச் சிறப்புற்றனர். இவரைப்போன்ற ஒரு பெரும் சமயச் சான்-ருேரை, ஒப்புயர்வற்ற சமயச் சொற்பொழிவாளரை, இனி ஒருகால் காண்டல் இயலுமோ, என்பது ஐயமே!

அத்தகைய பெருஞ் சிறப்பு வாய்ந்த ஞானியார் அடிகள் ஐந்தாம் முறை அருட்பெருங் குரவராக அமர்ந்து அணிசெய்யப் பெற்றது *திருக்கோவலூர் ஆதீனம்!* அதனை ஏறத்தாழ 300 ஆண்டுகட்கு முன்னர் நிறுவிய முதற்பெருங் குரவர் சிவத்திரு ஆறுமுக மெய்ஞ்ஞான சிவாசாரிய சுவா-மிகள் என்னும் அருளாளர் ஆவர்.

இவர்கள் திருவண்ணுமலை ஆரும் முறைக் குகை நமச்சிவாயரிடம், சமய தீட்சை பெற்றவர். திருப்போரூர்ச் சிதம்பர சுவாமிகள். திருமுதுகுன்றம் குமாரதேவர், சிதம்பரம் குரு நமச்சிவாயர் ஆகிய சான்ருேர்கள் பலரின் சமயகாலத்தவர். *நிட்டானுபூதிசாரம்* முதலிய பல நூல்களை இயற்றியவர். இவருக்குப் பூங்கோட்டு அம்பலவாண சுவாமிகள், சம்பூரணப் பிரகாச அடிகள், அவிநாசிநாத சுவாமிகள், மதுரைச் சட்டைமுனிகள் போன்ற பலர் மாண-வராக விளங்கினர்.

இவர் தம் சிறந்த இனிய வரலாற்றைத் திருக்கோவ-லூர்க் கழக உயர்நிலைப் பள்ளித் தலைமைத் தமிழாசிரியரும், சீலத்திரு சிவசண்முக மெய்ஞ்ஞான சிவாசாரிய சுவாமிகள் அவர்களின் மாணவர்கள் பலருள் சிறந்த ஒருவருமாகிய

பெரியார், புலவர், திரு. க. பா. வேல்முருகனர் அவர்கள், இந் நூல் வடிவில் செம்மையுற எழுதியளித்திருக்கின்ருர்கள்.

எளிய இனிய தெளிவான நடையில், பல நூற்பயிற்சி-யும் பக்தியுணர்வும் ததும்பும் முறையில், அமைந்துள்ள இந்நூல் அன்பர்கள் அனைவருக்கும் பெரிதும் பயன்படுவதாகும். இப்போதுள்ள ஏழாம் முறைக் குரு மூர்த்திகள் ஆகிய *சீலத்திரு* **சிவசண்முக ஆறுமுக மெய்ஞ்-ஞான சிவாசாரிய சுவாமிகள்** அவர்களின் தண்ணளிபெற்று, முதற் குருமூர்த்திகளின் கோயிற் குடமுழுக்கு விழாவில் இந்நூல் வெளிவருவது மிக்க பொருத்தமும் சிறப்பும் உடைய தாகும்.

வாழ்க குருவருள்! வளர்க திருவருள்!

(ஒப்பம்) ந. ரா. முருகவேள்

உயர்திரு, வித்துவான்,
க, வெள்ளைவாரணனுர், அண்ணுமலைப் பல்கலைக் கழகம்,
ஆராய்ச்சித்துறை, அண்ணுமலைநகர்.

# அணிந்துரை.

இவ்விருபதாம் நூற்ருண்டின் முற்பகுதியில் தமிழ் நாட்டில் ஊர்கள்தோறும் எழுந்தருளித் தம் இனிய செந்தமிழ்ச் சொற்பொழிவுகளாலும் நற்றவச் செயல்களாலும் செந்தமிழும் சிவ நெறியும் வளர அயராதுழைத்த அருளாசிரியர், திருப் பாதிரிப் புலியூர் ஸ்ரீலஸ்ரீ சிவ சண்முக மெய்ஞ்ஞான சிவாசாரிய சுவாமிகளாகிய ஞானியார் சுவாமிகளாவர். அடிகளாரவர்கள் திருக் கயிலாய பரம்பரை திருக் கோவலூராதீனத்தின் ஐந்தாம் குருமூர்த்திகளாவர். திருக் கோவலூர் வீரட்டேசர் திருவருளை நிரம்பப்பெற்ற சிவஞானச் செல்வராய் இவ்வாதீனத்தைத் தோற்றுவித்தருளிய முதற் குருமூர்த்திகள் ஸ்ரீலஸ்ரீ ஆறுமுக மெய்ஞ்ஞான சிவாசாரிய சுவாமிகள் ஆவார்கள். இவர்கள் தோன்றிய காலம் கலியாண்டு 4774-க்குச்சரியான கி.பி. 1688 ஆகும். இவர்களுடைய முன்னோர்கள் தெலுங்கு நாட்டில் கர்நூல் மாவட்டத்தைச் சேர்ந்த ஆத்மகூரில் வாழ்ந்தவர்கள்; வீரசைவர்கள் முருகப் பெருமானிடத்து இடையருப் பேரன்பினராகிய சுப்பிரமணிய ஐயரும் அவருடைய மனைவியார் சுப்பம்மாவும் தமிழ் நாட்டிலுள்ள பழநி, திருச்செந்தூர் முதலிய தலங்களை வழிபட்டுத் திருக் கோவலூரை யடைந்தபொழுது சுப்பம்மாள் அவர்கள் கருவுற்றுப் பத்துத் திங்கள் நிரம்பியிருந்தமையால் தங்கள் யாத்திரையைத் தொடர்ந்து மேற்கொள்ள இயலாத நிலையிலிருந்தனர். திருக் கோவலூரில் வீரட்டேசர் திருக்கோயிற் சந்நிதியை யடுத்துள்ள திருமடத்திலிருந்த வீரசைவ அன்பர் குமரையரும் அவர் மனைவியார்

வள்ளியம்மையாரும் அவ்விருவரையும் தமது மடத்தில் தங்கும்படி செய்து அன்புடன் உபசரித்தனர். சுப்பம்மை-யார் கலி 4774 ஆநந்த ஆண்டு கார்த்திகை மாதம் கார்த்திகை நாளில் ஓர் ஆண் மகவைப் பெற்று நான்காம் நாளில் இறைவனடி சேர்ந்தார். தாயில்லாக் குழந்தை-யாகிய அதனைக் குமரையரும் அவர் மனைவியார் வள்ளி-யம்மையாரும் அன்புடன் வளர்த்தனர். ஆறுமுகம் என்னும் பெயருடைய அக்குழந்தைக்குத் திருவண்ணாமலை குகை நமசிவாயர் திருமடத்தின் ஆரும் குருமூர்த்திகள் சிவலிங்க தாரணமும் தூல பஞ்சாக்கர உபதேசமும் செய்தனர்.

திருவருணைக் குகை நமசிவாயரிடம் அணுக்கத் தொண்டராய் வளர்ந்த ஆறுமுக இளைஞர் இளம் பருவத்தி-லேயே துறவுநிலை யுடையராய்த் திருக் கோவலூர் வீரட்டா னேசர் திருக்கோயிலின் அருகே பெண்ணையாற்றங் கரை-யில் கபிலக் குன்றின் கீழ் நாள்தோறும் சிவபூசை செய்து அம்மையப்பரருளால் அருமறைப் பொருள் உபதேசம் பெற்றுச் சிவயோகத் தமர்ந்து தம்மை நாடிவரும் அன்பர் களுக்குச் செம்மையேயாய சிவபதம் அளிக்கவல்ல சிவ-ஞானச் செல்வராகத் திகழ்ந்தார்கள். சிவாநுபூதிச் செல்வ ராகிய ஆறுமுக மெய்ஞ்ஞான சிவாசாரிய சுவாமிகள் தம்மை யடைந்த பக்குவமுடைய மாணுக்கர்கட்குச் சமய உண்மை-களை உபதேசித்தார்கள். வழிபட்ட அன்பர்களின் துன்பம் அகற்றி நோய் நீக்கி நலஞ் செய்தார்கள். பல்லாண்டுக-ளாகச் சிவயோகத்தில் அமர்ந்திருந்த அக் குருமூர்த்திகள் கோவல் வீரட்டப்பெருமான் திருவருளால் வாதுளாகமத்தின் இருபத்தெட்டாம் படலமாக அமைந்த நிட்டானு பூதியை நிட்டானுபூதிசாரம் என்ற பெயருடன் தமிழ்ச் செய்யுளாக மொழிபெயர்த் தளித்தார்கள் இவ்வாறு சுவாமிகள் இறை-வனருளால் தாம்பெற்ற திருவருள் நலங்களை யெல்லாம் தாம் பாடிய சதுர்லிங்க சதகோத்திர சதகநூலில் தெளிவாகக் கூறியுள்ளமை காணலாம்.

கோவலாதீன முதற் குருமூர்த்திகளாகிய இவர்களது வரலாறு, கி. பி. பதினேழாம் நூற்றுண்டில் நம் தமிழ்நாட்டில்

சிவ யோகிகளாகிய சிவஞானிகள் சிலர் ஆங்காங்கே எழுந்தருளியிருந்து சிவாநுபவ உண்மைகளைப் பரப்பிய சிறப்பினையும் அவ்வநுபவ உண்மைகளை நாட்டவர் பலரும் பெற்று மகிழ்தற்குரிய நெறிமுறைகளையும் அறிவுறுத்தும் முறையில் அமைந்துளது.

திருக்கோவலூராதீனத்தின் ஏழாம் பட்டத்தில் இப்பொழுதுள்ள ஸ்ரீலஸ்ரீ சுவாமிகள், தமது ஆதீனத்தின் முதற் குருமூர்த்திகளாகிய ஆறுமுக மெய்ஞ்ஞான சிவாசாரிய சுவாமிகளது வரலாற்றினை யாவரும் உணர்ந்து பயன் பெறுதல்வேண்டும் என்னும் நன்னோக்கத்துடன் "கோவல் ஆதீனக் குருமணி" என்னும் இந் நூலினைத் தக்க புலவர்களைக் கொண்டு நன்காராய்ந்து வெளியிட்டுள்ளார்கள். இந்நூல், இவ்வாதீன முதற் குருமூர்த்தியின் வரலாற்றை விரித்துரைப்பதுடன் அவர்கள் இறைவனருளாற் பெற்ற உபதேச உண்மைகளையும் அவர்களது பரம்பரையில் வந்த பெருமக்கள் நாட்டிற் பரப்பிய சிவஞான வுண்மைகளையும் ஆர்வமுடன் புரிந்த திருப்பணிகளையும் இனிது புலப்படுத்தும் முறையில் இனிய எளிய செந்தமிழ் நடையில் எழுதப் பெற்றுளது! புனைந்துரை சிறிதும் கலவாமல், குருமூர்த்திகள் அருளிய நூல்களிலமைந்த செய்திகளை அகச்சான்றுகளாகக் கொண்டு அவர்கள் அருளிய உபதேச வுண்மைகளை யறிவுறுத்தும் தத்துவ நூல் இது எனப் பலரும் பாராட்டும் முறையில் சிந்தைக்கும் செவிக்கும் இன்பந்தரும் பொருள் நுட்பமும் சொல்நயமும் பெற்றுத் திகழ்கின்றது.

'ஞானமுண்டாக்குதல் நலமாகும் நாட்டிற்கே' என்னுங் கருத்துடன் இந்நூலைத் தக்க புலவர்களைக்கொண்டு வெளியிட்டுதவிய திருப்பாதிரிப் புலியூர் ஸ்ரீமத் ஞானியார் மடாலயத் தலைவர் அருள்மிகு சுவாமிகளது தமிழ்த்தொண்டு தமிழ் மக்களாற் பாராட்டத் தக்கதாகும்

க. வெள்ளைவாரணன்.

௳

இறைவன் துணை.

உயர்திரு. வித்துவான்,
திரு. அடிகளாசிரியர்,
விரிவுரையாளர்,

கரந்தைப் புலவர் கல்லூரி,
கரந்தை, தஞ்சை.

# அணிந்துரை.

திருக் கோவலூர் ஆதீனம் ஞானியார் மடத்து முதற் குருமூர்த்திகளாகிய **ஸ்ரீலஸ்ரீ ஆறுமுக மெய்ஞ்ஞான சிவாசாரிய சுவாமிகளை** நினைக்கும் பொழுதெல்லாம் நமக்கு அவர்களுடைய உயர்ந்த ஒழுக்கமும், சிறந்த தவமும், நிஷ்டானுபூதியும், மெய்ஞ்ஞானமும் ஆகிய இவைகளே மனக்கண் முன் நிற்கின்றன. அனுபூதியிற் சிறந்த இவர்கள் அருளிச்செய்த நூல்கள் முப்பத்தொன்ருகும். அவற்றுள் *நிஷ்டானுபூதி சாரம், மேன்மைப் பதிகம், சதுர்லிங்க சதகோத்திரதசகம்* என்னும் மூன்று நூல்களே இதுவரை அச்சாகியுள்ளன. "*ஆசைச் சோடச மாலை*" என்னும் நூலைச் செப்பனிட்டு இப்பொழுது அச்சிட அனுப்பியுள்ளேன். இவர்கள் செய்தருளிய எல்லா நூல்களையும் ஆராய்ந்து "ஞானியார் அருள் நூற்றிரட்டு" என்னும் பெயரால் வெளியிட்டால் அவ்வெளியீடு அனுபூதிமான்களுக்கும் பெருவிருந்தாயிருக்கும் என்று கருதுகிறேன். இவர்களுடைய பாட்டெல்லாம் படிப்பதற்கு எளிமையா யிருப்பதைப்போல் தோன்றினும் நுணுகிய அனுபவத்தை எடுத்துக் கூறும் அறிவுக் கருவூலமாகவே விளங்குகின்றன.

எடுத்துக் காட்டாக,

"உண்ணப்பா வென்றீர்ந்தார்
உண்டறிந்த ஊனதனைக் ;

கண்ணப்பர் அன்பினுக்குக்
கடவுள் அருந்தினரே. ''
(அருள்வாம உண்மை விளக்கம் 42)

என்னும் பாட்டைப் படித்துப் பார்க்க.

இங்ஙனம் சிறந்த இவர்களுடைய வரலாற்றை அறிவிக்கும் உரைநடை நூல் இதுவரை வெளியிடவில்லை. இக்குறையைப் போக்குதற்காக, இவ்வாதீனத்தைச் சார்ந்த திருப் பாதிரிப் புலியூர் ஸ்ரீமத் ஞானியார் மடத்தில் ஏழாவது குருமூர்த்தமாக இப்பொழுது எழுந்தருளி யிருக்கும் **ஸ்ரீலஸ்ரீ சிவசண்முக ஆறுமுக மெய்ஞ்ஞான சிவாசாரிய சுவாமிகள்** முயற்சியால் ''**ஸ்ரீலஸ்ரீ ஆறுமுக மெய்ஞ்ஞான சிவாசாரிய சுவாமிகள் வரலாறு**'' என்னும் வரலாற்று உரைநடை நூல் வெளிவருகின்றது. இத்தகைய முயற்சியில் இப்பொழுது பட்டத்திலிருக்கும் சுவாமிகளின் திருவுள்ளம் நன்கு பதிந்து செயற்படுகிறது. இச் செயல் நம்மனோர் உய்வதற்குக் காரணமா யிருக்கிறது.

இங்ஙனம்
அடியன்.
**திரு. அடிகளாசிரியர்,**
கரந்தை.

உ

சிவமயம்

சிவ சண்முக மெய்ஞ்ஞான தேசிகன் திருவடி வாழ்க.

# கோவல் ஆதீனக் குருமணி

திருக்கயிலாய பரம்பரைத் திருக்கோவலூராதீன
முதற் குருமூர்த்திகள்

## ஸ்ரீலஸ்ரீ

## ஆறுமுக மெய்ஞ்ஞான சிவாசாரிய சுவாமிகள்

## வரலாறு.

" அருபரத் தொருவன் அவனியில் வந்து
குருபர னாகி யருளிய பெருமையைச்
சிறுமையென் றிகழாதே "

திருவாசகம், போற்றித் திருவகவல். 75-77.

" சிவனே சிவஞானி யாதலாற் சுத்த
சிவனே யெனஅடி சேரவல் லார்க்கு
நவமான தத்துவ நன்முத்தி நண்ணும்
பவமான தின்றிப் பரலோக மாமே "

— திருமூல நாயனார்.

### தோற்றுவாய் :

உலகத்து உயிர்கள் நால்வகைப் பிறப்பினையும் எண்பத்துநான்கு நூறுயிர வேறுபட்ட தோற்றத்தினையும் உடைய என மூதறிஞர் அறுதியிட்டு உரைத்தனர். இவ்வளவு வேறுபட்ட உயிர்ப் பொருள்களையும் உயிரற்றனவாய பல பொருள்களையும் உயர்திணை, அஃறிணை என இரு கூறு படுத்து இலக்கணம் வகுத்தனர். மக்களாய்ப் பிறந்த யாவரையுமே ஆறறிவு படைத்த உயர்திணைப்பாற் படுத்தன

ரென நாம் எளிதில் எண்ணிவிடக் கூடும். ஆனால் அறிஞர் உலகு அதனை ஏற்காது. தொல்காப்பியனாரும் மக்கள் மாக்கள் என இருகூறுபடுத்தியே உயர்திணையாம் மக்களைச் சுட்டினர். மக்கள் தன்மை உடையாரே உயர்ந்தோர். அஃதில்லார் மாக்களே என்பது அவர் காலத்துக்கு முன்-னரே உலகில் முகிழ்த்துவிட்ட கொள்கையாம். இது பற்றியே, 'மாவும் மாக்களும் ஐயறிவினவே' என்ற நூற்பா அவர் வாக்கினின் றெழுந்தது. 'ஐயறிவின என அஃறிணை முடிபு கொடுத்ததோடன்றி, விலங்குகளோடு ஒருங்கு வைத்தமையால் பகுத்தறிவிற் குறைந்த மக்களை அறிவுடை மக்களோடு ஒருங்குவைத் தெண்ண அவர் ஒருப்பட்டாரல்ல ரென்பது அறியப் படுகின்றது. அவர் காலத்துக்கு முற்-பட்ட சான்றோர் கொள்கையும் அதுவே யாதல் வெளிப் படை. 'உலகெனப் படுவது உயர்ந்தோர் மேற்றே' என்ற அவரது வாக்கும் இக்கருத்தினை வலியுறுத்தல் காணலாம்.

நோற்பார்: மக்களுந்தாம் பலபல செயல் கொண்டவர்; பலபல எண்ண முடையவர். எந்த எண்ணம் பிறப்பினாற் பெற்ற பயனைத் தருமோ அவ்வெண்ணமே கொண்டார் பல ரல்லர். இதனைக் கருதியே உலக கவிஞரும், "நோற்பார் சிலர் நோலாதார் பலர்" என அறிவித்து, முன்னைப் பிறவி களில் நோற்றதன் பயனாகவே ஈண்டைக்குச் செல்வமோ அறிவோ உடையார் சிலராகவும் இல்லாதார் பலராகவும் கொண்டு இவ்வுலகு இயல்கின்றது எனக் கூறிச் செல்கிறார்.

"இருவேறு உலகத் தியற்கை திருவேறு
தெள்ளியர் ஆதலும் வேறு"

என்றதால், செல்வ நலமும், தெளிந்த அறிவு நலமும் பெற்றவர் இருசாரார் ஆவரென்பதைத் திருவள்ளுவரும் கருதிக் கூறியிருப்பது நோக்கற்பாலது.

நுண்ணுணர்வு: அறிவின்மையும் வறுமையே. நூல் கற்பிக்கத் தகாதவர் இன்னின்னாரெனக் கூறியவிடத்து இலக் கண நூலோர், அறிவிற் குறைபாடு உடையாரைக் குறிக்க, 'ஏழை' என்ற சொல்லையே எடுத்தாண்டனர். வறுமை இன்னதெனக் கூறிய ஓர் பெரியார், 'நுண்ணுணர்வின்மை

வறுமை' என நாலடியாரிற் கூறுகிறுர். இஃது மிக ஆழ்ந்த கருத்துடைய வாக்கு. உணர்வு என வாளா கூருமல் நுண்ணுணர்வு எனக் கூறியிருப்பதுகொண்டு அவ்வாசிரியர் கருத்து யாதாயிருத்தல் வேண்டுமென்பதை உணர்தல் கூடும். "நுண்மாண் நுழைபுலம்" என வள்ளுவஞர் கூறியதும் இக் கருத்தே பற்றியதாதல் வெளிப்படை.

**நூலுணர்வும் நுண்ணுணர்வும் :** நுனித்த உணர்வு என்பது யாது? நூலுணர்வு மட்டுமே எனின், அதனை ஆன்ருேர் ஒப்புக் கொண்டாரல்லர். "கற்ருரை யான் வேண்டேன் கற்பனவும் இனி அமையும்" என்ற வாதவூரடிகள் வாக்கும்,

'அலகு சால் கற்பின் அறிவுநூல் கல்லாது
உலகநூல் ஓதுவ தெல்லாம் – கலகல
கூஉந்துணை யல்லாற் கொண்டு தடுமாற்றம்
போஒந் துணையறிவார் இல்'

என வரும் நாலடியார் வாக்குப் போன்றவையும் நூலுணர்வினைச் சிறப்பில வாக்கியமை காணலாம். "நுணங்கிய கேள்வியர்' என வள்ளுவராற் சுட்டப் பட்டவர் யாரெனத் துணிந்து கொள்வதும் ஈண்டைக்குப் பொருந்துவ தொன்ரும்.

நுண்ணுணர்வு என்பது இன்னதென ஒரு முடிவாய்க் கூறல் சாலாது. புறவுலகை நாம் கண்ணுற் காண்கின்ருேம். ஆனுல் காண்டற் கருவியாகிய கண்ணே தானே காணக்கூடிய வன்மை படைத்ததன்று. ஏன்? அது தன்னையே காணுந் தன்மையும் இல்லாதது. அது சூரியன் முதலாய ஒளிகளின் துணைகொண்டே புறப்பொருளைக் காண வல்லது. கண்களும் ஒளியும் உண்டெனினும் கண்ட பொருளை மனம் அறிந்து தன்னிடத்தே அத் தோற்றத்தை நிறுத்திக்கொள்ள ஆன்மபோதம் என்னும் உயிரறிவு இன்றியமையாது வேண்டும். இதனை, 'ஆன்மா காட்டக் கண்டிடுந் தன்மையுடைய கண்' என வருஞ் சிவஞான சித்தியார் முதலாய ஞான நூல் வாக்குகளா லறியலாம்.

குரு : நமக்கு இருளில் ஒளி தேவையாயிருக்கிறது. எண்ணெய், அகல், திரி, தீக்கடைகோல் (அல்லது தீப்பெட்டி) ஆகிய யாவும் உளவேனும், அவற்றையமைத்துச் சுடரைப் பொருத்த அறிவர் ஒருவர் வேண்டுமன்றே ? அது போலவே, நம் மன இருளை அகற்ற ஆன்ருேர் இயற்றியருளிய மெய்ஞ்ஞான நூல்களும், இறையருளுக்குப் பாத்திரராகி அவனேடு இரண்டறக் கலக்க வேண்டுமென்னும் அவா மேலோங்கிய உள்ளமும் உளவெனினும், உள் மாசு போக்கி மெய்ஞ்ஞான விளக்கம் செய்விக்க ஓர் அறிவர் வேண்டும். அவரே 'குரு' எனப்பட்டார். (குரு என்னும் சொல், அறியாமையை அகற்றி மெய்யறிவினை விளக்குபவர் என்ற பொருளுடன் வழங்கப்படுவது.) "யான், எனது என்னும் செருக்கு அறுக்க இயலாமல் "மனை, மக்கள், சுற்றம் எனும் மாயா வலை" யிற் சிக்கி உழலும் மக்களுக்கு

" மூள்வாய தொழிற்பஞ்சேந் திரிய வஞ்ச
முகரிகாண் முழுதுமிவ் வுலகை யோடி
நாள்வாயு நும்முடைய மம்ம ராணை
நடாத்துகின்றீர்க் கமையாதே யானேல் வானேர்
நீள்வான முகடதனைத் தாங்கி நின்ற
நெடுந்தூணைப் பாதாளக் கருவை யாரூர்
ஆள்வானைக் கடுகச்சென் றடைவேன் நும்மால்
ஆட்டுணேன் ஓட்டந்தீங் கலையேன் மின்னே ".

(திருநாவுக்கரசர்)

என்பன போன்ற சூளுரைகளால் அவற்றை ஓட்ட-வல்ல மனத்திண்மை படைத்த அருளொளி வீசும் அறிவர் இன்றியமையாது வேண்டுமென்பதை எம்மதத்தினரும் ஒப்புக்கொள்வர். அத்தகைய பெரியார் மானுடச் சட்டை தாங்கி வரினும் தெய்வமே யெனக் கொண்டனர். மூதறிஞர். அவர் இல்லையேல் தெய்வ ஒளிக்கு வழி ஏது ?

மாணிக்க வாசகப் பெருந்தகை சிவனையே குருவாகப் பெற்ருர்.

மன்னவன் மகன் ஒருவன். மிகமிகச் சிறு பருவத்திலே காட்டு வேடரிடம் அகப்பட்டான். அவர்கள் தலைவனுல்

தன் மகனுகவே வளர்க்கப்பட்டான். அவனது ஊண் உடை முதலிய யாவும் வேட்டுவ மரபிலேயே அமைந்து விட்டன. வயது ஏற வேற அழகுடன் ஆண்மையும் வளர்ந்தது. வேடர் வழக்கப் படியே வேட்டையாடச் செல்வான் அவ்வழகனும் காளை. ஒருநாள் தற்செயலாக, அவன் வேட்டையாடிக் கொண்டிருந்த அதே காட்டிற்கு அவன் தந்தையாம் மன்னவனும் வர நேர்ந்தது. மன்னவன் அக்காளையைக் கண்டான். வேட்டுவக் குமரனுக்கு இத்துணை யழகு எங்ஙனம் வந்தது ? எனக் கூர்ந்து நோக்கினுன். சில அடையாளங்களால் அவன் சிறு பருவத்திலே தன்னைவிட்டு நீங்கிவிட்ட தன் மகனுக இருக்கலாமெனக் கருதினுன். அக்காளையின் முகத்திலே காணப்பட்ட மறு மன்னவன் ஐயத்தினைப் போக்கிற்று. உண்மையை மகன் உணருமாறு எடுத்துக் கூறினுன் மன்னவன். வேட்டுவக் குழுவினின்றும் பிரித்து அழைத்துச் சென்ருன் தன் நாட்டிற்கு. மணி முடியும், வெண்கொற்றக் குடையும் சிங்காதனமுங் கொடுத்து நாட்டுரிமையை அவனுக்கே வழங்கினுன்.

சீவன் சிவனிடத்திலிருந்து பிரிந்து வந்தது. ஐம்புல வேடரின் மயங்கிற்று. இகவுலகப் பெருங் காட்டுள் மாயையால் மூடப்பட்டுத் தன்னையும் அறியாமல் உழலும்போது, ஆணவம், கன்மம் என்னுங் கொடிய விலங்குகளால் அலைப் புண்கிறது. 'மல பரிபாகம் வருமளவிற் பன்னுள் அலமருதல் கண்ணுற் றருளி'ய பரம தந்தை, சீவனிடத்து வருகிருன். தன் மகனை 'மாய மல பிண்ட நோய் இடு குரம்பை. யிற் பட்டு உழலாமல் மீட்டுத் தனது சாரூப்ய முதலாய வற்றைத் தந்து, சாயுச்ய முத்தியில் அவ்வான்மாவாம் மகனை நிலைக்கச் செய்கிருன். மேற்கூறிய கதையில் இச் சித்தாந்தக் கருத்துகளே உருவகிக்கப் பெற்றுள்ளன.

அருணந்தி சிவாச்சாரியார், சிவஞான சித்தியாரின் எட்டாம் சூத்திரத்தின் முதற் பாட்டிலே இக் கதையைக் கூறுகிருர்.

"ஐம்புல வேடரின் அயர்ந்தனை வளர்ந்தெனத்
தம்முதல் குருவுமாய்த் தவத்தினில் உணர்த்தவிட்டு
அன்னியம் இன்மையில் அரன்கழல் செலுமே."

என்னும் சிவஞானபோத எட்டாம் சூத்திரத்தின் விளக்கத்-துள் ஓர் பகுதியே அக்கதையின் தோற்றம். போதத்தின் எட்டாஞ் சூத்திர விசேடவுரையில் மாதவச் சிவஞான முனிவர் சிறப்பான விளக்கங் கூறுகிறுர். அதனை ஊன்றிப் படித்தல் ஒவ்வொருவரது கடமையுமாகும்.

' சிவனென யானுந் தேறினன் காண்க '

என மணிவாசகப் பெருந்தகையார் கூறியதும்,

' குருவே சிவனெனக் கூறினன் நந்தி '

எனத் திருமூல நாயனுர் கூறியதும், சிவபெருமானே சிவ குருவாய் வந்து 'மலம் அகற்றித் தானுக்கி மலரடிக் கீழ் வைப்பன்' என்பதை வலியுறுத்தும்.

மக்கள் உய்யுமாறு மானுட வடிவாய்த் தோன்றி இறை-வன் திருவருள் பாலித்து மறைதலும், மான் காட்டி மான் ஈர்க்குந் தன்மைபோல், மானிடரிடையே மானுட வடிவாய்த் தோன்றிப் பலரும் உய்யும் வண்ணம் உய்யு நெறிகாட்டி யாட்கொண்டருளுதலும் தொன்று தொட்டே நிகழ்வன.

இறைவனைப் பலமுறை நேரிற் கண்டும் அவன் திரு-வாய்மொழி உபதேசம் பெற்றும், அவனருளிய திருநீற்றுப்-பையும் அக்கமணி மாலையும், புத்தகச் சுவடியும் பெற்றும், அவனருளாலே அவன் தாள் தலைமீது சூட்டப் பெற்றும், இறைவனேடு மாறு எண்ணத் தகாதவர்களாகிய இந்நூலுக் குரியாராகிய இம்மடாலய முதற் குருமூர்த்திகளின் வரலாறு, தனித்ததோர் சிறப்பு வாய்ந்த தொன்று.

மேற் கூற்றுகளெல்லாம் அவர்களே தம் வாக்கினுல் அருளிச் செய்துள்ளார்கள். ஆங்காங்கு அவ்வருள் வாக்குகள் எடுத்தாளப் பெற்றுள.

## நாட்டுச் சிறப்பு.

தேனினும் இனிய தீந்தமிழ் நாட்டுள் நடுநாடாம் திரு-முனைப்பாடி நாடு, மிக மிகச் சிறப்பு வாய்ந்த நாடு. அப்ப மூர்த்திகளை அளக்கர்க் கரையேற விட்ட தோன்றுத் துணை-வன் முதலாக, நினைக்க முத்தியளிக்கும் அண்ணு மலையான்

சுருகப் பல திருநாமங்களுடன் இறைவன் எழுந்தருள இடமாயது. சமய குரவர் நால்வரில் இருவர் தோன்றித் தமிழையும் சமயத்தையும் வளர்த்த பெருமையது. அறுபான் மும்மை நாயன்மார்களுள் எழுவர் தோன்றிச் சிவமாயின நாடு இது.

" அறந்தருநா வுக்கரசும் ஆலால சுந்தரரும்
பிறந்தருள உளதானல் நம்மளவோ பேருலகில்
சிறந்ததிரு முனைப்பாடித் திறம்பாடும் சீர்ப்பாடு ?"

எனச் சேக்கிழார் கூறுவதால், அவராலேயே கூற இயலாத பெருமைகள் பல வாய்ந்த நாடு இது.

சந்தான குரவருள், 'பொய் கண்டார் காணுப் புனிதமெனும் அத்துவித மெய்கண்ட நாதன்' திருவருள் பெற்றுச் சிவ ஞான போத நூல் அருளிச் செய்ததும், அருணந்தி சிவமும், மனவாசகங் கடந்தாரும், பிறரும் தோன்றிப் போத நூலின் வழிநூற் சார்பு நூல்களை இயற்றியதும் இந் நாட்டகத்தேதான்.

**ஆறுகள் :** இந்நாட்டைச் செழிப்பிப்பன பெண்ணை நதி, வெள்ளாறு, கெடிலம் ஆம் மூன்றுமாம். அவற்றுள் சிறிய ஆறே யெனினும் வளந்தருவதிலும் சிவ ஞானச் செழுமை நிரப்புவதிலும் முன்னிற்பது கெடில நதியே. தன் கரையிற் பிறந்தார், 'கேடு இலம்' ('சிவமாந் தன்மை யெய்துதற் குரியராயினேம்') என வீறுடன் சொல்லக் காரணமாயது இந்நதி. திருநாவுக்கரசரும், சுந்தர மூர்த்தி நாயனுரும் கெடில நதிக் கரைக்கண் அமைந்த திருவாமூர், திருநாவலூர் என்னும் ஊர்களில் முறையே தோன்றினர். அந் நதிக் கரையில் உள்ள திருவதிகைத் தலத்திலேதான் அப்பர் வாக்கின் மன்னராயினர். 'கூற்றுயின வாறு' என்றெடுத்துப் 'பதிகம் ஏழெழு நூறு, பகரும் மாகவி யோகி' ஆயினர். அந்நதி தன்னை வலஞ் சூழ்ந்து வர மகிழ்ந்து வீற்றிருந்தருளும் தோன்ருத் துணைவன் துணை நிற்க, வாக்கின் மன்னரைச் சேர்ந்தடை கருங்கலே சிவிகையாயிட (வருணன்) ஏந்தியே கொண்டெழுந்தருளுவித்தனன், பூந்திருப் பாதிரிப் புலியூர்ப் பாங்கரில். பெருமை

சீர் திருத்தொண்டத் தொகை விரித்த பேரருளின் பெருமா-ளாம் சுந்தரர் அதன் கரையிலமைந்த நரசிங்க முனையரைய-யன் தலை நகரிலே, 'மன்னவர் திருவும் தங்கள் வைதிகத் திருவும் பொங்க' வளர்ந்தருளினர்.

சிவ பெருமானின் வில்லின் வழித் தோன்றியதால் 'பிநாகினி' எனப் போற்றப்பெறும் தென் பெண்ணை நதியும் இந் நடு நாட்டினைச் செழிப்பிக்கின்றது. இந் நதியின் வளமார் கரையிலேதான் பெரிய புராணத் தோற்றத்திக்குக் காரணராய சுந்தரமூர்த்தி சுவாமிகள் 'பித்தா பிறை சூடி எனப் பெரிதாந் திருப் பதிகம், இத்தாரணி முதலாம் உல கெல்லாம் உய எடுத்தார்'. அவ் வெண்ணெய் நல்லூர்ப் பதியே சிவஞானபோத நூலளித்த மெய்கண்ட தேவர் வளர்ந்ததும் குருவருள் பெற்றதும், போதப் பெருநூலை அளித்ததற் கிடமாயதும் ஆகும். அந்நூலின் வழிநூலாம் விரிவார்ந்த சிவஞான சித்தியார் இயற்றிய அருணந்தி சிவமும் திருவெண்ணெய் நல்லூர்க்குக் கிழக்கே சுமார் 10 மைல் தொலைவில் உள்ளதும் பெண்ணைநதிக் கரையில் அமைந்துளதுமான திருத்துறையூரை வாழ்விடமாக் கொண் டவரே. மேலும் அந்நதியின் கரைக்கண்ணதாம் திருக்-கோவலூர் பற்றிப் பின்னர் விரித்துரைக்கப் படுகிறது.

ஆகவே, சைவ தோத்திர – சாத்திர ஆசிரியர்களுட் பெரும் பாலரும் காலத்தான் முதன்மை பெற்றுரும் தோன்றி அருள் நூல்களையளித்த பெருமை இத் திருமுனைப் பாடி நாட்டிற்கே யுரியதாகிறது.

## நகரச் சிறப்பு.

நடு நாடு, திருமுனைப்பாடி நாடு சேதி நாடு என வழங்கப்பெறும் இந் நாட்டகத்தே திருக்கோவலூர் மிகப் பழந் தலமாகும். இத்தலம் சிவபெருமான் அந்தகாசுரனை யடர்த்த பெருமையுடையது. அட்ட வீரட்டத் தலங்களுள் இரண்டாவதான பெருமையுடையது. மெய்ப்பொருள் நாயனர் அரசாண்ட மேலாம்பதி. கோவலனுந் திருமால் எழுந்தருளி முதலாழ்வார் மூவர்க்கும் மழை நிறைந்த

நள்ளிரவில் இடைகழி நாதனுக்குக் காட்சியளித்து அம் மூவர் பாடலும் பெற்று உகந்து வீற்றிருந்தருளும் விழுமிய பதி. வள்ளல் காரியும் தெய்வீகனும் இருந்து அரசோச்சிய ஈடிலா நகர்.

கலைமகளின் அவதாரமாம் ஔவையாரும், புலனழுக்-கற்ற அந்தணாளனும் கபிலனும் சில காலம் இருந்து அருந் தமிழ் வளர்த்த பெரும்பதி. பாரியின் பிரிவாற்றாமையால் வருந்தி அவர் மகளிரை அழைத்து வந்து ஔவை மூதாட்டி-யாரிடம் ஒப்படைத்த பிறகு பெண்ணையாற்றின் நடுவண் அமைந்துள்ள ஓர் பெரும் பாறையின் மீதமர்ந்து வடக்-கிருந்து உயிர்விட்டான் கபிலன் எனின், இலக்கியத் துறை யிலே பெருஞ் சிறப்புப்பெற்ற அவன் தன் பூதவுடலை நீத்துப் புகழுடல் எய்தத் தேர்ந்தெடுத்த இவ்வூரின் சிறப்பு கருத்திற் கெட்டாததென்பது கூறாமலே அமையும்.

திருக்கோவலூர்ப் புராணத்திலே 'கபிலச் சருக்கம்' என ஓர் பகுதியுண்டு. கபிலன் ஓர் இலிங்கந் தாபித்துப் பூசித்ததும், தன் பெயரால் ஒரு தீர்த்தம் அமைத்ததும் அச் சருக்கத்திற் கூறப் பெறுகின்றன. மேலும் இந் நூல் நுதலும் குரு நாதர் தாமியற்றிய 'சதுர்லிங்க சதகோத்தர தசகம்' என்ற நூலிலே,

" கபிலர் அருச்சிக்க லிங்கமே
கபில புரமென்க லிங்கமே
அபயம் அவர்க்கருள் லிங்கமே
அடிமையை ஆண்டருள் லிங்கமே "

என 35-ஆம் பாடலிற் கூறுகிறார்கள். கபிலபுரம் என்ற பெயரேயன்றி மேலும் இருபத்திரண்டு பெயர்கள் அவர்-களாற் கூறப்பட்டுள.

பின்னாட்களிலே தமிழ் நாட்டிலே வாழ்ந்த தன் அடிய-வர்க்குத் திருவருள் பாலித்துக்கொண்டு எழுந்தருளி வந்த 'ரகோத்தமர்' என்ற மத்வ குரு, பெருஞானச் செல்வ மட்டுமோ? வீட்டுலகையும் அளிக்கவல்ல விழுமிய நகர் திருகோவலூரே என்பதைத் தன் மெய்யுணர்வால்

உணர்ந்து, தென் பெண்ணை நதியுடன் துரிஞ்சலாறு என்னும் சிற்ருறு கூடும் சங்கமத்திலே ஆற்றின் வடகரையிலே நிட்டைகூடி நிமல ராயினுர். 'பிருந்தாவனம்' எனப் போற்றப்படும் அவ்விடத்தை யடைந்து தூய்மையுடன் ஒருமித்த சிந்தையராய் வழிபடுவோர் பிள்ளைப்பேறு, நோய் நீக்கம், செல்வ முதலிய எண்ணிய நலங்களெவையும் எய்தப் பெறுகிருர்கள்.

நாடோறும் தன்னை அண்டிவரும் அடியவர் யாவர்க்கும் திருவருணேக்கம் செய்துகொண்டு எழுந்தருளியிருக்கும் தவத்திரு. ஞானுநந்த அடிகளார், திருக்கோவலூரையே சிறந்த இடமாகத் தேர்ந்தெடுத்துத் 'தபோவனம்' என்ற தூய இடம் அமைத்துக்கொண்டு தென் பெண்ணையின் கரையிலேதான் எழுந்தருளியிருக்கிருர்கள். அவர்கள் சங்கர பகவத் பாதரின் சீடராய சிவரத்நகிரி சுவாமிகளிடம் தொண்டுபூண்டு ஒழுகியவர்கள். இமயச் சாரலிற் பல்லாண்டு அருந்தவம் புரிந்தவர்கள். உடல் நோய் தீர்க்கும் அரு மூலிகைகள் பல அறிந்தவர்கள். இன்று பல்லாயிரக் கணக்காயவர்களின் உள நோயுந் தீர்க்க எழுந்தருளி யிருக்கிருர்கள்.

இத்தகைமையதாய்ப் பொன்ருப் பெருமைகள் என்றென்றுஞ் சிறந்து ஒளிரும் திருக் கோவலூர்ப் பதியிலே இற்றைக்கு 290 ஆண்டுகளுக்குமுன் தோன்றி மெய்ஞ்ஞான ஒளி பரப்பிய பெரியாரே ஸ்ரீலஸ்ரீ ஆறுமுக மெய்ஞ்ஞான சிவாசாரிய சுவாமிகளாவார்கள்.

**தோற்றம் பற்றிய முன்னறிவிப்பு:** சிவஞானம் பாலிக்கும் தெய்வத் திருநாடு நடு நாடே. அந் நாட்டிற்குக் கண் எனத் தகும் திருத்தலம் திருவண்ணுமலை. அது "பவக் கடல் கடந்து முத்தியங் கரையிற் படர்பவர் திகைப்பற நினைத்தே, தவக்கலம் நடத்த உயர்ந்தெழு"ந் தொளிர்வது. அத்தலத்திலே நெடுங் காலத்திற்குமுன் குகை நமசிவாயர் என்பார் சிறந்து விளங்கி தன்னையடைந்தவர்க்கு அநுக்கிரகித்து வந்தார். திருவருளிற் கலந்து பேராநந்தப் பெருவாழ்வு எய்தத் திருவுளம் பற்றிய போழ்து, தூய சிவசிந்தை

யுடன் கல்வி, கேள்விகளிற் சிறந்தார் ஒருவரை இரண்டாம் குரு நமசிவாயராக எழுந்தருளச் செய்து, அவருக்கு ஞானோபதேசம் செய்வித்து, அவரை நோக்கி, "இவ்வகையே அடுத்து வரும் தேசிகர்க்கு அவரவரும் உபதேசிக்க" எனத் திருவாய் மலர்ந்தருளினர். அங்ஙனமே எட்டாம் குருமூர்த்திகள்வரை தடையில்லாமல் மரபு தழைத்து வந்தது. ஆனால் எட்டாம் குருமூர்த்திகள் அடுத்து ஒருவரை நியமித்து ஞானோபதேசஞ் செய்விக்காமல் முத்தியடைந்தனர். இவ்வகை நிகழுங் காலத்திலே அம் மடத்தின் ஆரும் குருமூர்த்திகள் சீவந்தராய் எழுந்தருளி யிருந்தார்கள். உபதேச முறை தடைபட்டதெனப் பெரிதுங் கவலைகொண்டார் அவர். தான் முன்னரே ஒருவர்க்கு உபதேசம் செய்ய, அவர் அடுத்தவர்க்கு உபதேசம் செய்து விட்டுத் திருமேனி கரந்தருளினர். ஆயின் எட்டாம் குருநாதர் எவர்க்கும் உபதேசிக்காமலே திருவருள் நிலை எய்தி விட்டார். வாழ்ந்திருந்த ஆருவது குருநாதர் தன் முதற் குருவின் கட்டளைப்படி தனக்குப் பின் வரும் ஒருவரைத் தவிர மற்றொருவருக்கு உபதேசிக்கலாகாது. அங்ஙனம் செய்தால் குருவின் ஆணையை மீறியவராவர். இவற்றை எண்ணி யெண்ணி அவ்வாருங் குரு நமசிவாயர் பெருங் கவலை கொண்டார். அவ்வாறே அக் குருமரபு அழிந்து போகுமே என மறுகினர்.

மேற் கூறிய கவலை மேலீட்டினல் தனது முதற் குரவரைத் தியானித்துக்கொண்டே யிருந்தார். ஒரு நாள், துயில் கொள்ளத் தொடங்குமுன் குகை நமசிவாயராம் தம் முதற் குருநாதரை உள்ளம் உருகத் தியானித்துத், "தங்கள் திருவுள்ளம் யாதோ? இக் குரு பரம்பரை இத்துடன் அழியத் திருவுள்ளமோ ? என்று கேட்டுத் துயிலத் தொடங்கினர். அன்றிரவு அவர் கனவிலே அம் மடாலய முதற் குருமூர்த்திகள் தோன்றினர்கள். "அன்பனே! கவலைகொள்ள வேண்டாம்; நமது குரு பரம்பரை அழியாது; அதனைத் தழைப்பிக்கத் திருக்கோவலூரில் 'ஆறுமுகர்' என்னும் பெயருடையார் தோன்றுவர்" என அநுக்கிரகித்தார்கள். ஆநந்தங்கொண்ட அக் குரு நமசிவாயர், "அவர் எப்போது

வருவார் ? அந்த நாளைச் சொல்லியருளல் வேண்டும்.'' என வேண்ட, ''ஆநந்த ஆண்டு அருணை நுனியிற் சோதி வளர்நாள் வருவர்; குமரையர் – வள்ளியம்மை அன்பு செய்வர் '' என அருளினர். அதனல் மகிழ்ந்த பெரியார், ''அங்ஙனம் தோன்றும் அறுமுகவர்க்கு யான் என் செய்வது?'' என வினவ, அம் முதற் குரவர், ''அன்பனே ! தூல பஞ்சாக்கரம் உபதேசிக்க; இட்ட லிங்கத்தை அவர் கையில் அமர்த்துக; பதினெரு வயதில் மற்றை நலங்களெல்லாம் அவர்க்குத் தானே வந்தடையும் '' என மறுமொழி யளித்தார்.

தன் கனவிலே தனது ஞானத் தந்தை எழுந்தருளித் திருவருள் பாலித்தமைக்காக அந்த ஆரும் குரு நமசிவாயர் அகமிக மகிழ்ந்து, அடிக்கடி திருக்கோவலூர்க்கு ஆளனுப்பி விசாரித்து வரச்செய்வார். ஆனந்த ஆண்டு ஐப்பசி மாதத்திலே திருக்கோவலூர் மடத்தில் வதிந்திருந்த குமரையர்க்கும் அவர் மனைவியாம் வள்ளியம்மைக்கும் ஓர் ஆண் மகவு உதித்ததையும் அம் மகவுக்கு வீரட்டநாதன் எனப் பெயர் சூட்டப் பட்டிருப்பதையும் ஆள்கள் மூலம் செவிப் பட்டிருந்தார். மேலும் தக்க ஆள்களையனுப்பிக் கார்த்திகை மாதக் கார்த்திகை நாள்வரை காத்திருக்கச் செய்தார்.

இவ்வண்ணம் நிகழ நம் கோவலாதீனக் குருமணியின் முன்னேர், மரபு முதலிய செய்திகளைக் காண்போம்.

முன்னேர் : ஓங்கும் நல் தெலுங்கு தேசத்திலே கர்நூல் மாவட்டத்தில் திகழ்வது ஆத்மகூர் என்னும் சிறப்புடைய ஊர். அவ்வூரிலே அறுபத்து நான்கு சீல சம்பந்நராய் விளங்கியவர் சோமநாத ஆராத்திரியர். அவர் ''சிவனடியே சிந்திக்கும் திருப்பெருகு சிவஞானம்'' கைவரப் பெற்றவர். வீர சைவர், அவர் மரபிலே தோன்றிச் சிவ நெறிச் சீலராய் வாழ்ந்தவர் மல்லைய தேவர் என்பவர். அவர், பிரமர குந்தளாம்பிகை என்னும் கற்பிற் சிறந்த தன் மனைவியுடன் வாழ்ந்து வந்தார். ஆத்ம கூருக்குத் தென் திசையிலே காங்கேயம் என்னும் நகரில் அவ் வாராத்திரியர்களுக்குச் சீடர் உண்டு. இறையன்பு நிறைந்து தூயராய் வாழ்ந்த

மூன்று கவுண்டர்கள் தம் குருமரபினராய மல்லைய தேவரைத் தம் ஊர்க்கு வருமாறு விரும்பியழைத்தார்கள். அவர்களது வேண்டுகோளுக் கிணங்கி மல்லையத் தேவர் தன் மனைவியோடு வந்தார். காங்கேயத்தை யடைந்தார். தன்னை விரும்பியழைத்த கவுண்டர்களுக்குச் சிவநெறி போதித்தார். ஊரவர் யாவர்க்கும் புராண வாயிலாக நன்னெறிகளைப் போதித்தார். அவ்வூரவர் யாவரும் அவர்களிடம் அன்பு பூண்டு அவர்களைப் பலகாலம் ஆதரித்தனர். அது காறும் பிள்ளைப் பேறு இல்லாத அவர்களை அக் குறை வாட்டியது. மல்லைய தேவரும் பிரமர குந்தளாம்பிகையும், "வேண்டும் அடியர் புலவர் வேண்ட அரிய பொருளை வேண்ட வெருது உதவு பெருமான்" ஆகிய முருகன் திருவடி நீங்காச் சிந்தையராயினர். பழநியுறையும் பண்ணவனையே கண்டு தொழுது குறையிரக்க முடிவு செய்தனர்.

பழநி : பண்டு ஒருகால் நான் முகன் தவறு செய்ய அவனை இறை முருகன் சபித்தான். பிரமன் பூமியின்கண் பிறந்தான். அல்லல்கள் பல அடைந்தான். அவனுடைய அல்லல்களைப் போக்கச் சிவபெருமானும், திருமாலும், இந்திரனும் மற்றைத் தேவர் முதலாயினுர் புடைசூழச் சபித்த முருகப் பெருமானைச் சாபநீக்கம் புரிந்தருளுமாறு வேண்டிக் கொள்வதற்காக எழுந்தருளி வந்த சிறப்பினை யுடையதும், என்றும் யார்க்கும் எவ்வகைப் பேறும் தந்துகொண்டு முருகன் விளங்குவதும் ஆதலாலே "அதிசயம் அநேகமுற்ற பழநிமலை" எனப் போற்றப் பெறுவதுமாகிய பழநித் திருத்தலத்தை மல்லைய தேவரும் பிரமர குந்தளாம்பிகையும் அடைந்தனர். அறுமுகத் தொருவன் திருவடி பணிந்தனர். தமது குறையினைக் கூறி முறையிட்டனர். அண்ணல் திருவடி நீங்காச் சிந்தையராய் மீண்டு ஆத்மகூர் அடைந்தனர். அவ் விருவர்க்கும் பின்னர் இரு பிள்ளைகள் தோன்றினர். மூத்த பிள்ளை சுப்பிரமணியம்; இளைய பிள்ளை மல்லையர். இருவரும் கல்வி கேள்விகளிற் சிறந்து விளங்கினர். தான் "கற்றதனுல் ஆய பயன் வாலறிவன் நற்ருள் தொழ"லே எனத் துணிந்த இளையரான மல்லையர், சிவ சிந்தையே பெருஞ் செல்வமெனக் கொண்டு துறவு பூண்டு

ஸ்ரீசைலம் சென்று தங்கிப் பிறவாப் பேரின்ப நிலைக்கு முயல்வாராயினர்.

மூத்தவராம் சுப்பிரமணிய அய்யருக்கு அவரது அம்மான் மகளாகிய சுப்பம்மாவைத் திருமணம் செய்வித்தனர் பெற்றோர். அவர், தூய உள்ளத்துடன் இல்லற வாழ்வில் ஈடு பட்டிருப்பதைக் கண்டுகளித்த மல்லைய தேவரும் பிரமர குந்தளாம்பிகையும் நெடுங்காலம் வாழ்ந்து முதுமை மேவிச் சிவன் திருவடி யெய்தினர்.

சுப்பிரமணிய அய்யரும் சுப்பம்மாவும் "எவரேனும் தாமாக இலாடத்திட்ட திருநீறும் சாதனமும் கண்டால் உள்கி, உவராதே அவரவரைக் கண்டபோது உகந்தடிமைத் திறநினைந் தங்கு உவந்து நோக்கி, இவர் தேவர் அவர் தேவர் என்று சொல்லி இரண்டாட்டாது ஒழிந்து ஈசன் திறமே பேணி", இல்லறம் போற்றி வாழ்ந்து வந்தனர். காலம் பல கடந்தது. அவரும் பிள்ளைப்பேறு வாய்க்கப் பெற்றாரல்லர். பிள்ளைப் பேறில்லாப் பெருங் குறையை உணர்ந்து வருத்தங்கொண்டனர். சுப்பிரமணிய அய்யர் தான் பிறந்தது பழநியாண்டவர் திருவருளாலேயே என அறிந்திருந்தாராதலால் தாமும் அவனடி பரவிக் குறையிரக்க முடிவு செய்தார். ஆத்ம கூரினின்றும் புறப்பட்டார். "படிக் கின்றிலை பழநித் திருநாமம் படிப்பவர்தாள் முடிக்கின்றிலை"; எனத் தன் நெஞ்சத்தை விளித்துக் கூறி, அத் திரு நகரை நோக்கி மனையாளுடன் வழிக்கொண்டார். இருவரும் பழநித் திருத்தலத்தையடைந்தனர். சண்முக நதியிலும் வையாபுரியிலும் படிந்தனர். மனந் தூயராய் மலைமீதேறினர். "மயிலேறி அயில் எடுத்து வரும் செவ்வேளை" ஆண்டியாகக் கண்டனர். "ஐந்து பேரறிவுங் கண்களே கொள்ள" அகத்திலே அவனது அருட்டிரு வுருவத்தைப் பதித்தனர். அவ்வுருவம் நீங்காத உள்ளத்தினராய் அப்பதியிலே சிலநாள் தங்கி நாடோறும் நாதனை நாவாரத் துதித்துத் தம் குறையை ஒரு நாள் விண்ணப்பித்தனர். அக்காலை தைப்பூசப் பெருவிழா தொடங்கிற்று. இருந்து இறைவனின் திருவோலகக் காட்சி கண்டனர். கண்பெற்ற பேறு பெற்றனர். தைப் பூசத்து முன்னாளாகிய புனர் பூசத்து இரவிலே இருவர் கன-

விலும் பழநி யாண்டவன் தோன்றினன். திருநீறு அளித்-தான். "உங்கட்குப் பரம் என விளங்கும் ஓர் நற் புதல்வன் இன்னும் ஓர் திங்களில் உண்டாவன் எனத் திருவாய் மலர்ந்தருளி மறைந்தான். அவர்களது கனவு விடியற் காலத்திலே தோன்றியதாதலின் அதிசயித்துத் துயில் நீத்து ஒருவர் மற்றவர்க்குக் கனவைக் கூறிக் கூறி, இறைவன் திருவருளை எண்ணி யெண்ணி மகிழ்ந்தனர்.

தைப் பூசம்: விடிந்தால் தைப்பூச நன்னாள். இரு-வரும் அதி காலையிலே புறப்பட்டுச் சண்முக நதி யடைந் தனர். இறைவன் திருவருளிலே மூழ்கித் திளைத்தவராகிய அவர்கள் சண்முக நதியின் தண்ணெனும் நீரிலும் மூழ்கினர். கரையேறிச் சிவ பூசை முடித்தனர், இருப்பிடம் சேர்ந்தனர், வீரசைவ முறைப்படி கணராதனை புரிந்தனர். உபவாசத் துடன் மலையேறிப் பழநியாண்டவன் திருமுன்னர் அடைந்-தனர். கனவிலே எழுந்தருளி வந்து திருக்கையால் திரு நீறும், கனிவாயால் அருள் வாக்கும் அருளிய திருவருள் திறத்தை நினைந்து நினைந்து கண்ணீர் வார, மெய்ம்மயிர் பொடிப்ப, நெக்கு நெக்குருகித் தோத்திரம் செய்து தொழு தனர். சிலநாள் பழநியிலேயே தங்கினர்.

நாட்கள் சில சென்றன. சுப்பிரமணிய அய்யரும் சுப்பம்மாவும் ஆறு திருப்பதிகளையுங் கண்டு அறுமுகத் தொருவனைத் தொழக் கருத்திற் கொண்டனர். மதுரை யடைந்தனர். திருப்பரங்குன்றில் அமர்ந்த தேவசேன பதியைத் தொழுதனர். பழமுதிர்சோலைப் பரமகுருவின் பாதமும் பணிந்தனர். திருச்சீரலைவாயிற் செவ்வேளைக் கண்டு தொழக் கருதினர். அவ்வாறே சென்று திருச்செந்-திலைக் குறுகினர். செந்திற் குமரன் சேவடி பரவினர். அந் நாள் அங்கு மன்ருடி மைந்தனுக்கு மாசிப் பெருவிழா தொடங்கிற்று. விழாக் காணும் வேட்கை மிக்கவராய் அப்-பதியிலேயே தங்கினர்,

செந்திலாதிபனே திருநாமஞ் சூட்டல்: மல மாசுகளை நீக்கித் தூய்மையடைந்தாரைப் பேராநந்தப் பெருவாழ்வில் திளைத்து என்றும் பிரியா இணையடிக் கமலத்தின் கீழ் இருத்-

துவேம் என்பதை ஆன்மாக்கட்கு அறிவுறுத்தவே குமாரக் கடவுள் சூர்மா மடியத் தனிவேல் ஏவினன். முன்னைத் தவத்தால் இருவினை மும்மலமும் நீங்கும் பரிபாகம் வந்தெய்த ஞானவேலின் தொடர்பு பெற்றமையால் மல இருளகன்று உய்ந்து வந்த சூரபதுமனைச் 'சேவலும் மயிலுமாக்கித் தன்னைத் தொழும் அடியவரெல்லாம் அவனையும் தொழச்செய்து எழுந்தருளி அருள் பாலிக்கும் செந்திற் கந்தனைக் கண்டு அடிபரவினர் ஆத்மகூர்த் தம்பதிகள். அவனது திருவிழாக் கோலங் கண்டு அகமிக மகிழ்ந்தனர். நாள்தோறும் பல பல திருக் கோலங்களிலே பன்னிரு கரத்தானைக் கண்டு பரவசமெய்தினர். அவன் திருவடி நீங்காத சிந்தையராய் நாடோறும் துயிலில் அமர்வர். ஓர் நாள் இரவிலே செவ்வேட் சேய் இருவர் கனவிலும் தோன்றினான். திருநீறு அளித்தான். சுப்பம்மாவின் கருவிலிருப்பவர் 'ஆறு முக குரு' எனத் திருவாய் மலர்ந்தருளி மறைந்தான்.

அதிகாலை வேளையிலே கண்ட கனவொழிந்து நனவு நிலையடைந்த தம்பதியர் இருவரும் ஒருவரோடொருவர் தம் கனவிற் குருபரன் எழுந்தருளியமையைக் கூறிக்கொண்டு அவனருளிய திருப் பெயரினைக் கருதித் தமக்குத் தோன்றவிருக்கும் குழவி தெய்வத் திருக் குழவியே யென்பது தெளிந்து தம் முன்னைத் தவமே இத்தகைய வாய்ப்புக்களை யருளியதெனத் தெளிந்து முருகனடி நீங்கா உளத்தராயினர்.

பக்த பஞ்சாட்சரம் : சிவபரஞ் சுடருக்குரிய திருமந்திரம் ஐந்தெழுத்து. ஆன்றோர் அருளிய நெறி கடைப்பிடித்து அவ்வைந் தெழுத்துகளை உள்ளத்தடைத்து இடையறுமலும் வெளியே பிறர்க்கு – ஏன்? தனக்குங் கூடக் கேளாமலும் – உச்சரித்துக் கொண்டிருப்போர் சிவமாந் தன்மைப் பெருவாழ்வு எய்துவர் என்பது ஒருதலை. அஃதேபோல் குரு, இலிங்க, சங்கம பூசனை மேற்கொண்டு சிவமாந் தன்மைப் பெருவாழ்வில் திளைத்திருப்போர் தம் பெயரையும் அரன் திருப் பெயரெனவே உளத்தடைத்துக் கூறி இறையாயினரும் உளர்.

ஞான போனகராம் ஆளுடைய பிள்ளை, கூன் பாண்டி-யன் மனைவி மங்கையர்க் கரசியாராலும் அமைச்சர் குலச்-சிறையாராலும் அழைக்கப்பெற்று அக்கால அமண் சார்பில் மூழ்கியிருந்த மதுரைத் திருநகர் அடைந்தமையும், அவர் வருகை பொருத சமணர், பிள்ளையார் தங்கியிருந்த திரு-மடத்தைத் தீக் கொளுவியமையும், அத்தீ பிள்ளையார் வேண்டுகோளாற் பையவே சென்று பாண்டியர்க் காகியமை யும் நோய் பொருது அரற்றும் மன்னவன் அருகு சென்ற அம்மை – மங்கையர்க் கரசியார், ஞான சம்பந்தர் " விரும்பி நோக்கில் தீய இப் பிணியே அன்றிப் பிறவியும் தீரும் என்-ருர் " என்று சேக்கிழார் கூறியமையும் நாமறிவோம்.

மங்கையர்க் கரசியார் கூறிய 'ஞானசம்பந்தர்' என்ற அத் திருநாமமே அவன் செவியிலே மந்திரமாகப் புகுந்தது. இதனைச் சேக்கிழார்,

" மீனவன் செவியி னூடு மெய்யுணர் வளிப்போர் கூற
ஞானசம் பந்தரென்னும் நாமமந் திரமுஞ் செல்ல "

என்று கூறி யருளினர்.

அது மட்டுமோ? "காவி யுடுத்தும் தாழ்சடை வைத்தும் காடுகள் புக்கும் – தடுமாறிக், காய்கனி துய்த்துங் காயம் ஒறுத்தும், காசினி முற்றும் – திரியாதே " சிவப்பேறு பெற்-றவர் அப்பூதியடிகள் நாயனர். அவர் வேறு மந்திரம் ஏதும் கூருமல் "திருநாவுக்கரசு" என்னும் திருப் பெயரையேதான் செய்த அறப் பள்ளி, வாவி, குளம், நந்தவனம் முதலிய யாவற்றினும் எழுதி வைத்ததோடு, தன் வீட்டில் மனைவி, மக்கள், அளவைகள் பற்றிக் கூறும்போதெல்லாம் 'திரு-நாவுக்கரசு' என்னும் பெயரையே கூறினர். மனம், மொழி, மெய் ஆகிய வெல்லாம் திருநாவுக்கரசு மயமாகவே ஆயி-னர். அத்தொடர்பே அவரைச் சிவனடி சேர்வித்தது. இத னைச் சேக்கிழார் கூறும் அப்பூதியடிகள் புராணத்திலும், திருநாவுக்கரசர் புராணத்திலும் கூறுகிருர்.

" உற்ரு னலன்தவம் தீயில்நின் ருனலன் ஊண் புனலா
அற்ரு னலன்நுகர் வுந்திரு நாவுக் கரசெனும் ஓர்

சொற்ருன் எழுதியுங் கூறியு மேஎன்றும் துன்பில்பதம்
பெற்ருன் ஒருநம்பி அப்பூதி என்னும் பெருந்தகையே ''

எனச் சிவப்பிரகாச அடிகளார் கூறியதை நோக்குங்கால் அக் கருத்து வெளிப்படையாகக் கூறப்பட்டிருப்பதை யறியலாம்.

இங்ஙனமே 'சுந்தர மூர்த்தி' என்னும் ஐந்தெழுத்துக் களைச் சிந்தித்தும் ஓதியும் சேரமான் பெருமாள் நாயனுர் திருக் கயிலாயத்தையே நண்ணினுர்.

'மணி வாசகர்' என்னும் ஐந்தெழுத்துகளையும் பின்பற்றி இராமலிங்க அடிகளாரும் பெருவாழ்வு பெற்ருர்.

ஈண்டுரைத்த வாறெல்லாம் ஒற்றெழுத்துகளை நீக்கியே ஐந்தெழுத்தாம் என்பது உணரற் பாலது.

தொண்டர் ஆறெழுத்து : சிவ பரஞ் சுடருக்குரிய மந்திரம் ஐந்தெழுத்தே யானுற்போல அவனடியார் பெயர் பலவும் ஐந்தெழுத்தா லமைந்திருப்பதும், அச் சிவமந்திரம் ஓதினுர், " இருவினை மும்மலமும் அற, இறவியொடு பிறவியற ஏக போகமாய் '' இறைவனேடு ஒன்றி யிருத்தல் போலப் பக்த பஞ்சாட்சரம் ஓதினுரும் பொன்ருப் பெரு வாழ்வு பெறுதலும் உறுதி.

கலியுகக் கண்கண்ட தெய்வம் முருகன். அவன் திரு முகங்கள் ஆறு. அவன் குடி கொண்டிருக்கும் ஆறு திருப்பதி கண்டு ஆறெழுத்தும் அன்பினுடன் கூறுமவர் சிந்தை குடி கொள்பவன். அவ்வாறெழுத்துகள் 'சரவண பவ' என்ப. ஆனுல், 'குமாராய நம' 'நம : குமாராய' என்னும் மந்திரமே ஆன்ருேர் கொண்டதாகும். இதனையே ஐம்முகச் சிவன் ஓதி முருகனிடம் உபதேசம் பெற்ருன். இதனை,

" நாதா குமரா நமஎன் றரனுர்
ஓதாய் எனஓ தியதெப் பொருள்தான்
வேதா முதல்விண் ணவர்சூ டுமலர்ப்
பாதா குறமின் பதசே கரனே. ''

என அருணகிரிப் பெயர்கொள் மெய்ஞ்ஞான நாதன் அருளி யிருப்பதுகொண்டு நிச்சயிக்கலாம்.

அறுமுகச் சிவனைப் போற்றும் அன்பர்கள் அவனடியார் பெயர்களாகிய ஆறெழுத்துகளையும் மனம் மொழி மெய் களாற் பற்றிக் கார்த்திகேயன் திருவடிகளிற் கலத்தலுங் கூடும்.

இந்நூல் நுவலும் குருநாதனுக்கு இறைவனே 'ஆறுமுக குரு' என்ற 'ஆறெழுத்தடக்கிய அறுமறைக் கேள்வி'யைத் திருநாமமாகச் சூட்டியருளினன். அந் நல்ல நாமம் நவில வேண்டுவது நம் கடமையாகும்.

மேற் சொல்லப்பட்ட அப்பெயருள் 'முருகு' என்னும் பெரும் பொருள் பொதிந்த மூன்று எழுத்துகளும் அடங்கி-யுள. எனவே, தனிச் சிறப்புடைய அத்திரு நாமத்தினை உள்ளத்திருத்தி உச்சரித்தோர் எண்ணிய எண்ணியாங் கெய்தப் பெறுவது ஒருதலை. 'அரும் பெறல் மரபிற் பெரும் பெயர் முருக' என்றார் நக்கீர தேவ நாயனர். வாழ்க அத் திரு நாமம்! வாழ்க அப்பெயர் சூட்டிய செந்திலாண்டவன் திருவடி!

கோவல் நகர் குறுகியமை: சுப்பிரமணிய அய்யரும் சுப்பம்மாவும் திருச்செந்தூரிலே சில நாள் தங்கிச் செந்தி-லோன் சேவடி பரவினர், பழநி யுறையும் பண்ணவனையும் திருச்செந்தூர்ச் சேவலங் கொடியோனையும் உளத் தடைத்த வாறே வழிக்கொண்டனர். சோழ நாட்டகத்தே, "காவேரி நேர் வடக்கிலே வாவி பூ மணத்த காவார் சுவாமி வெற்பு" அடைந்தனர். தந்தைக்கே உபதேசம் செய்து "தகப்பன் சாமி எனவரு பெருமானடி பரவினர். சிலநாள் அங்குத் தங்கி வேளைதோறும் விமல குருநாதனைத் தொழுது வந்த-னர். சின்னாட் கழித்துப் புறப்பட்டனர். இனித்தமுடைய எடுத்த பொற்பாதங் காணுங் கருத்தினராய்த் திருத்தில்லை மன்றினை நோக்கி வழிக் கொண்டனர், பெரும் பற்றினை நீக்கும் பெரும் பற்றப் புலியூரை யடைந்தனர். "என்று வந்தாய் என்னும் எம்பெருமான்றன் திருக்குறிப்"பிலே

தோய்ந்தனர். "மண்ணிலே வந்த பிறவியே எமக்கு வாலிதாம் இன்பமாம் என்று" உள்ள நிறைவோடு புறப்-பட்டனர்.

தென் புலியூரைக் கண்ட கண்கள் வட புலி-யூரையுங் காண வேண்டுமென்னுங் கருத்தினராய்த் தோன்-ருத் துணைவனாய் வீற்றிருந்து அருள் கொழிக்கும் திருவுருவத்தைத் "தேய மெல்லாம் நின்றிறைஞ்சும் திருப் பாதிரிப் புலியூ"ரிலே கண்டனர். தோகை யம்பிகை துணைமலர்ப் பாதங்களையும் தொழுதனர். மேற்றிசை நோக்கி வழிக் கொண்டனர்.

"அம் பொன் மணிநூல் தாங்காது அனைத் துயிர்க்கும் அருள் தாங்கி, இம்பர் மனைத் தவங்கிடந்து" வீரட்ட நாதனை வேண்டித் தன் அருமைத் தம்பியைச் சைவ நன் னெறியிற் சேர்ப்பித்த திலகவதியார் தொண்டினை யேற்ற வீரட்டநாதன் உறையும் அதிகை வீரட்டம் அடைந்தனர். மற்றை ஏழு வீரத் தானங்களினும் அதிகமான வீரச் செயலை இறைவன் காட்டியருளிய தலமாதலால் அதிகை எனவே விளங்கும் தலத்திலே திரிபுர மெரித்த விரிசடைக் கடவுளைப் பரவினர். "திருநின்ற செம்மையே செம்மையாக் கொண்ட திருநாவுக் கரையன்" திருவடிகளையும், திலகவதி யம்மை யாரின் சேவடிகளையும் போற்றினர். "திருநெடுமால் அன்று வழுத்தியுங் காணு மலரடியிணைகள், வழுத்துதற்கு எளிதாய் வார் கடல் உலகில்" எழுந்தருளியுள்ள "அண்-ணுமலை யானைப் பாடுதும்" என்னும் விருப்பினராய் மேற்கு நோக்கினர்.

ஆவணங் காட்டிச் சுந்தர மூர்த்தியை ஆட்கொண்ட அருட்டுறை யண்ணலை நண்ணினர். "நல்லார் தொழும் வெண்ணெய் நல்லூர்ச் சிவாலயத்துட், பொல்லா"ப் பிள்ளையார் திருவடிப் போதுகளிற் படிந்தனர். பரமன் எதிர் நின்று, 'பித்தா பிறை சூடி' எனத் தொடங்கும் பதிக முதலாயின பாடிப் பரவினர். பெருமணச் சீர் திருத் தொண்டத் தொகை யளித்த பேரருளின் பெருமானையும் தொழுதனர். அத் திருத் தலத்திலேயே கோயில் கொண்-டிருக்கும், "பண்டை மறை வண்டரற்றப் பசுந்தேன்

ஸ்ரீமத் ஞானியார் மடாலயம், திருக்கோவலூர்



ஞானம் பரிந்தொழுகச் சிவகந்தம் பரந்து நாறக், கண்ட இருதய கமல முகைகள் எல்லாம் கண்திறப்பக் காசினிமேல் வந்த அருட் கதிரோன், விண்ட மலர்ப் பொழில் புடைசூழ் வெண்ணெய் மேவும் மெய்கண்ட தேவ"னும் போதப் பிள்ளையின் பொன்னங் கழலடி போற்றினர்.

'அல்' (அஞ்ஞான இருளைப்) போக்கி யருள்வதற் காகவே 'கோ' (அவ்விருளுக்கும் பசுக்கள் யாவற்றினுக்கும்) தலைவனும் வீரட்ட நாதன் வீற்றிருக்கும் இடமாகிய, திருக்கு (மன மாசுகளை யெல்லாம்) ஓவல் (தன் செயல் கெட்டு) அடங்கியிருக்கத் (தவமுதியோர் வீற்றிருக்கும்) ஊரை (அல் கோ எனுஞ் சொற்கள் முன்பின்னாக மாறிக் கோவல் எனவும் திருக்கு + ஓவல் + ஊர் = திருக்கோவலூர் எனவும் வருமாறு தெளிவு) வந்தடைந்தனர் தம்பதிகள்.

பெண்ணைத் திரு நதியின் மூழ்கினர். ஔவைப் பிராட்டியார் வழிபட்டுப் பேறுபெற்ற பெரியானைக் கணபதி யின் பிரச மலர்த்தாள் வீழ்ந்தனர். வீரட்ட நாதனையும் பெரிய நாயகி யன்னையையும் தொழுது வலம் வந்து தோத்திரம் செய்தனர். தலபுராணிகர் வாயிலாகத் தல மகிமையை யறிந்து கொண்டனர்.

திரு அவதாரம் : சுப்பிரமணிய அய்யரும் சுப்பம்மாவும் கோவல் நகர் குறுகியபோது கார்த்திகை மாதம் தொடங்கி யிருந்தது. வயிறு வாய்த்திருந்த சுப்பம்மா பத்து மாதம் நிரம்பப் பெற்றிருந்தமையால் மேலும் பயணம் மேற்கொள்ள இயலாத நிலை வந்துற்றது. ஆகவே திருக்கோவலூரிலேயே தங்கும் கருத்துடைய ராயினர். வசிப்பதற்கு இடங்கொடுத்து உதவும் உண்மைச் சிவநேசர் இங்கு எவரேனும் இருப்பர் எனக் கருதி ஊருட் புகத் துணிந்தபோது, வீரட்டநாதர் சந்நிதியை அடுத்திருந்த திரு மடத்துள் வதிந் திருந்த குமரையர் என்பார் எதிர்ப்பட்டார். கண்டார். சிவ நேயச் செல்வர்களாய் வீரசைவ சின்னங்களுடன் கணவன் மனைவியராய் எதிரில் தோன்றிய இத் தம்பதியரைச் சிவபெருமானும் உமா தேவியுமாகவே மதித்தார். 'அரகர' என அஞ்சலித்தார். "வெள்ள வேணிப் பெருந்-

தகைக்கு யாம் செய் அடிமை மெய் ''யாயிற்று என அகமிக மகிழ்ந்து அவரை எதிர் தொழுதார் சுப்பிரமணிய அய்யர் தன் மனையாட்டியின் நிலைமையை யறிவித்தார். அவர், யாவுங் கூறி முடிக்குமுன், கோவற் குமரையர் அவர்களைத் தன் இருப்பிடம் அழைத்துச் சென்றார். தன் மனைவிக்கு அறிவித்தார். இருவரும், "தங்கள் இல்லமே ஈது; தேவ-ரீர்க்கு அடிமை நாங்கள்" எனப் பரிவுடன் உளமாரக் கூறினர். வந்தோர் தம் உணவுக்கு வேண்டும் தண்டுல முதலிய பொருள்களைத் தந்து உதவிகள் யாவும் செய்தனர். அந்நாட் சிவ பூசை, மாகேசுவர பூசைகளை முட்டின்றி முடித்துக்கொண்ட சுப்பிரமணிய அய்யர், தக்கார் ஒருவரை வீரட்ட நாதன் காட்டியருளிய காரணத்தால் தன் மனைவி-யின் பிள்ளைப்பேறு பற்றிய கவலையின் நீங்கினார். வீரட்ட நாதன் அருளிய தம்பியே இவர் எனக் குமரையரைப் பற்றிக் கருத்திற் கொண்டார். தக்க தருணத்திலே இடமும், உணவுப் பொருள்களும், மனிதர் துணையும் திருவருளாற் கிடைத்தன என உளமகிழ்ச்சி கொண்ட சுப்பிரமணிய அய்யர், நாடோறும் தென் பெண்ணை நதி நீராட்டும், சிவ பூசையும் சிவாலய தரிசனமும் மேற்கொண்டார். இவ்வா-றாக நிகழ்ந்துவரும் காலத்தே கலி 1474 ஆநந்த ஆண்டின் கார்த்திகைத் திங்களிற் கார்த்திகை நன்னாள் நண்ணியது. அன்று கோவல் மாநகரை அடுத்துள்ள அண்ணாமலையானை உளத்திற் பதித்து உபவாசமிருந்தார். மாலை, அருணைத் திருமலையின்மேற் சோதி தோன்றும் வேளை. மக்கள் தத்தம் வீடுகளில் வரிசை வரிசையாக விளக்கேற்றத் தொடங்கி விட்டனர். சுப்பம்மா, உள்மாசு போக்கிப் போத ஒளியினை உலகினுக் கருளவல்ல இள ஞாயிறனைய ஒளியோடு கூடிய 'ஆறு முக குரு' வாம் குழந்தையை ஈன்றெடுத்தார்.

> "ஆயிரநான் கேழுநூ றத்தோ டெழுபதுநான்
> காயகலி ஆநந்த ஆண்டருணைத் – தேயுவொளி
> ஆனதினங் கோவலில்வா றாறுமுக தேசிகனார்
> மானிடர்போல் வந்ததின மாம்."

என்ற இரண்டா முறைச் சுவாமிகள் திருவாக்கால் ஈது உணரக் கிடக்கின்றது.

இத் தெய்வத் திருக்குழவி தோன்றிய நாள், வேளை முதலிய நம் சிந்தனைக் குரிய.

சுப்பிரமணிய அய்யர், தமக் கருளிய ஆறெழுத் தண்ணல் திருவருளைச் சிந்தித்துக் குழவிக்கு, "நீறு திரு நெற்றியில் நிறுத்தி நிறைவித்து." "வேறு பல காப்பு மிகை" யென இருந்தார்.

சுப்பம்மாவுக்குத் தன் குழவியை மூன்று நாட்களே ஊனக் கண்களாற் காணும் வாய்ப்புக் கிட்டியது. சிவப் போரொளி விளங்கும் அக் குழவியைக் கண்டு கண்டு தன் உள்ள மெல்லாம் தெய்வத்தையே நிரப்பிக் கொண்டனர் போலும்! பிள்ளை பிறந்த மூன்றும் நாள் தாய் சுப்பம்மா சிவத்தை மேவினர். கோவல் மடத்திலிருந்த குமரையர் மனைவியார் வள்ளியம்மை ஆறுமுக குருவினுக்குத் தன் தனப்பாலை ஊட்டி வளர்த்தனர்.

பெயர் சூட்டல்; பிள்ளைக்குத் திருநாமமிடும் நாளிலே ஊரவர் பலர் கூடினர். ஆன்றவிந் தடங்கிய கொள்கைச் சான்றோர் பலர், குழந்தையின் அருளொளி வீசும் கண் முதலிய உறுப்புக்களை நோக்கினர். இக் குழவி, சிவத்திருப் பொலிய விளங்கும் எனத் துணிந்தனர். அப்போது சுப்பிரமணிய அய்யர், கடந்த மாசி மாதத்திற் செந்திலாதிபன் கனவிலெழுந்தருளி, 'ஆறுமுககுரு' எனத் திருநாமஞ் சூட்டிய செய்தி யறிவித்தார். கூடியிருந்தோர் யாவரும் அறுமுகப் பரம்பொருளின் திருவருளையும் அத் தெய்வத் திருக் குழவியைக் காணும் வாய்ப்புக் கிடைத்தமையையும் வியந்து அப்பெயரையே சூட்டித் திருநீறணிவித்தனர்.

தந்தையாரும் பிரிந்தார்: முன்செய் தவப்பேறு காரணமாகத் தோன்றிய குழவியைத் தாய் வளர்க்கும் பேறு பெற்றிலரேனும், கோவல் மடத்தினராய குமரையர் மனைவியாம் வள்ளியம்மை, தன் குழந்தையுடன் நாளொரு மேனியும் பொழுதொரு வண்ணமுமாய் வளர்த்து வந்தார். குழவியின் தந்தை சுப்பிரமணிய அய்யர், மனைவியை இழந்த பின் அவனன்றி ஓரணுவும் அசையாதெனத் தேறித் தன்

மன ஒருமைப் பாட்டிற்கான நெறி புகவே இறைவன் திருவருள் வழி காட்டுகின்றதென மனங்கொண்டார். அங்ஙனமே துணிந்தார். ஓர்நாள் கோவல் மடத்துக் குமரையரிடம் தன் வரலாறு முழுதுங் கூறினர். தன் துணிவையுங் கூறினர். தன் பின்னேனைப் போன்றே ஸ்ரீசைலம் செல்ல முடிவு செய்திருப்பதையுங் கூறினர். "இக் குழந்தையை ஈசன் தங்கள் குழந்தையாகவே அளித்துள்ளமையால் அங்ஙனமே வளர்த்துக் கொள்ளுங்கள்" என்றார். அக் குழவிக்குச் சிவலிங்க தாரணம் செய்வித்தற் குரியார் இப் பக்கங்களில் யாவர் உளர்? எனக் கேட்ட சுப்பிரமணிய அய்யர்க்குக் குமரையர், 'திருவருணைக் குகை நமசிவாயரே' என மறுமொழி யுரைத்தார். 'அவர் பெரிய நல் தேசிகரே யாவர்' எனக் கூறி, இறை முருகன் திருவருள் நிரம்பிய இக் குழந்தையைப் பற்றித் தான் கவலை கொள்வது அறியாமையே என உளங்கொண்டு வீரட்ட நாதன் திருவடி தொழுது திருவண்ணுமலை வழியே ஸ்ரீசைலம் நோக்கி வழிக் கொண்டார்.

சிவத்திரு சேர்த்தல்: முன்னர்க் கூறியவாறு திருவருணையில் எழுந்தருளியிருந்த ஆரும் குகை நமசிவாயர், தன் முதற் குரவர் தன் கனவில் எழுந்தருளிக் கூறியவாறு நிகழ்வதையறிய அவ்வப்போது திருக் கோவலூர்க்கு ஆளனுப்பினர். ஆநந்த ஆண்டிற் கார்த்திகைத் திருவிளக் கொளிரும் நல்ல வேளையில், திருக் கோவலூர் மடத்தில் யாத்திரை மேற்கொண்டு வந்த தம்பதியர்க்கு ஓர் ஆண் மகவு உதித்த சேதியறிந்தார். பின்னரும் நிகழ்ந்த யாவும் தக்காரை யனுப்பி அறிந்துகொண்டார். தன் முதற் குரவர் கனவில் தோன்றிக் கூறியவாறே நிகழ்ந்திருத்தலை யறிந்து அக்குரு வருளையும் இறை யருளையும் எண்ணி யெண்ணி வியந்து இறைவனடி நீங்காச் சிந்தையராய் இருந்தார்.

சின்னாட் கழித்துக் குமரையர், ஆறுமுக குருவினைத் திருவருணைக்குக் கொண்டு சென்றார். ஆரும் குகை நமசிவாயர் திருமுன் விட்டார். குழவிக்குச் சிவலிங்க தாரணமும் தூல பஞ்சாக்கர உபதேசமும் செய்வித் தருளுமாறு விண்ணப்பித்துக் கொண்டார். கேட்ட ஆரும் குகை நமசி-

வாயர் தம் குரு மரபை நிலைநாட்டவந்த ஆறுமுக குருவைக் கண்டு கண்டு மனம் உருகினூர். தன் முதற் குரவாற் சுட்டப்பெற்றும், பழநி யாண்டவனருளாற் பாரில் உதித்தும், செந்திற் கந்தன் திருவாயாற் பெயர் சூட்டப் பெற்றும் குழவி யாய்க் கிடக்கும் குருமணியைக் கண்களாற் பருகினூர்,

"செப்பருங் குணத்துச் சிவபரஞ் சுடரே இங்ஙன் வந்து தோன்றியதோ! அன்றித் தன் முதற் குரவரே தோன்றி "அழுது அணை யாடையிற் கிட"க்கின்ருரோ! என மனத்துட்கொண்டார். பற்பல சிறப்புகளும் பெற்று ஒளிர இருக்கும் இப் பாலனுக்குச் சிவலிங்க தாரணமும் மந்திரோபதேசமும் செய்விக்கத் தனக்குத் தகுதி யுண்டோ?" என எண்ணி யெண்ணித் துணியா உள்ளத்த ராயினூர். எனினும் தன் முதற் குருநாதர் கனவில் தோன்றித் தனக்கு இட்ட ஆணையைக் கடக்க அஞ்சி ஓர் நல்ல நாளிலே சிவலிங்க தாரணமும் தூல பஞ்சாக்கர உபதேசமும் செய்தருளினூர்.

"குகையுறும் ஆறக்க ரலிங்கம்
கொடுத்தருள் என்னிட்ட லிங்கமே
அகம் அழல் மெழுகென லிங்கமே
அதன்படி மைக்கருள் லிங்கமே

நம்முதல் ஐந்தையும் லிங்கமே
நங்குரு வாய்அருள் லிங்கமே
அம்மனு வைச்செபம் லிங்கமே
அடிமை செபிக்கருள் லிங்கமே"

எனச் சுவாமிகள் தனது சிவலிங்க தாரணம், தூல பஞ்சாக்-கர உயதேசங்களைப் பற்றித் தாம் அருளிச் செய்த சதுர்-லிங்க சதகோத்தர சதகம் என்ற நூலின் முதல், இரண்டாம் செய்யுட்களிற் கூறுகின்ருர்கள்.

இவ்வாறே இவர்கள், தாம் பெற்ற உபதேசங்கள், அவை களைக் கடைப்பிடித்தமை, தவயோகம், உணவு முதலியன பற்றி அந் நூலில் ஆங்காங்கு கூறுகின்ருர்கள். அவை இவ் வரலாற்றில் ஆங்காங்கு காட்டப் பெறுகின்றன.

குகை நமசிவாயர் மடத்தின் ஆரும் குருதேவர், எம்மை நலமும் பாலிக்க உதித்தருளிய செம்மைப் பாலகனைத் தம் நேர்ப் பார்வையிலே சிலநாள் இருக்கச் செய்து மகிழ்ந்தார்.

**பிள்ளைப் பருவம்** : கோவற் குமரையரும், அவர் மனைவியாரும் ஆத்மகூர்ச் சுப்பிரமணிய அய்யர் வாயிலாக இத் தெய்வக் குழவியின் அருமை பெருமைகளை அறித்திருந்தனர். திருவருணை ஆரும் குகை நமசிவாய தேவர், தம் ஞானத் தந்தையின் கனவையும் அவ்வண்ணமே யாவும் நிகழ்ந்தமையையும் கூறக் கேட்டபின் இறைவன் தம் மாட்டுக் கருணைகொண்டு பெறலரும் பேறும் இதனைத் தந்துளான் என மகிழ்ந்து மிகமிக ஆதரவுடன் குழவியை வளர்த்து வருவாராயினர். அருணைக் குகை நமசிவாயர் விரும்பிய போதெல்லாம் எடுத்துச் செல்வர்.

வழிவழியாகச் சிவனடித் தொண்டு பூண்டு ஒழுகும் திருக்குலத்தில் தோன்றி, அங்ஙனமே சிறந்து விளங்கும் பெரியோரால் வளர்க்கப்பெற்று, தெய்வ குருமரபில் வந்த பெரியாரின் உபதேசமும் கண்காணிப்பும் பெற்றுருளிரும் நம் ஆறுமுக குரு மேலாய ஞான உணர்வுடன் வளர்ந்து கற்பன கற்றுங் கேட்டும் அறிவிற் சிறப்பெய்தினுர்கள்.

**நித்த நியமங்கள் :** மிகச் சிறு பருவத்திலேயே இட்டலிங்க பூசை, சிவாலய தரிசனம், சிவபுராண படனம் ஆதியவற்றை யெல்லாம் அடிகளார் தொடங்கிவிட்டார்கள். நாடோறும் கதிரவன் தோன்று முன்னரே உடற்றூய்மை முதலியவை செய்துகொண்டு தன் குரு நாதர் உபதேசித்தவாறே தூல பஞ்சாக்கர உருச் செபித்துக் கொள்வார்கள்.

“ உதயமுன் யாமத்தி லிங்கமே
ஓரைந் தெழுத்தையும் லிங்கமே
இதயத் திருக்கருள் லிங்கமே
எழுந்துடற் சுத்தியாய் லிங்கமே ”

என்னும் சதுர்லிங்க சதகோத்ர சதக நூலின் 3-வது பாவினுல் இதனையறியலாம்.

இறைவியின் அருள்கொழித்து ஓடுவதெனத் தகுமாறு நீர் சுரந்து ஓடிவரும் பெண்ணை நதியிலே நீராடி இறைவனது ஐந்தெழுத்தை மனத்திருத்தி உச்சரித்துத் திருநீற்றினை இறைவனுக் கர்ப்பித்துச் சிரம் முதலிய அவயவங்களிலே தரித்துக் கொள்வாரென்பது,

" நின்னைத் தரிசித்து லிங்கமே
நீறுனக் கர்ப்பித்து லிங்கமே
சென்னிய தாதியாய் லிங்கமே
திருநீ றுறஅருள் லிங்கமே. "

(சதுர்லிங்க. 4)

என்னும் வாக்காலறியக் கிடக்கின்றது.

துறவு நிலை : சிறு பருவத்திலேயே திருவருணைக் குகை நமசிவாயரிடம் அணுக்கத் தொண்டராகி இறைவனை உளத் தடைத்து யோகநிலை கொள்ளவும் தொடங்கி யிருந்தார். தன் குருநாதரையடுத்துத் தன் மனம் இறைவன்பால் ஒன்றி நிற்கத் தொடங்கியதை உணர்த்தினர். அவரும் மாணவரது பரிபக்குவ நிலையறிந்து அவருக்குக் கல்லாடையளித்துக் கடைக்கண் ணோக்கஞ் செய்தருளினர்.

சில காலம் திருவண்ணுமலையில் தங்கிக் குருவருள் நிரம்பப் பெற்றவராய்த் திருக் கோவலூரை யடைந்தார். பெண்ணைநதி நீராட்டு முதலியன முறையே தொடர்ந்தன. நீராடிச் சுத்த வெண் கோவணந்தரிப்பார்கள். தூய கல்லாடை புனைவார்கள். கர சுத்தி முதலிய செய்துகொண்ட பின் திருநீறணிவார்கள். உருத்திராக்க மணி பூண்டு கொள் வார்கள். கோட்டுப்பூ, கொடிப்பூ, நிலப்பூ, நீர்ப்பூ என்னும் நால்வகைப் பூக்களையும், பூசனைக்கு வேண்டும் பிற பொருள்கள் யாவற்றையும் சேமித்துக் கொள்வார்கள். பெண்ணையாற்றின் நடுவண் அமைந்துள்ள 'கபில ஈச லிங்கம்' எழுந்தருளியுள்ள குன்றத்தின் நிழலிலே அமர்ந்து இட்டலிங்க பூசனை மேற்கொள்வார்கள்.

இவற்றை,

" கழிக்கும் விதிசெய்து லிங்கமே
கரமாதி சுத்தியா லிங்கமே
பழுப்பொழி காட்டத்தை லிங்கமே
பார்த்துனக் கர்ப்பித்து லிங்கமே "

" சுத்திபற் செய்தமேல் லிங்கமே
தோயம் படிந்தபின் லிங்கமே
சுத்தவெண் கோவணம் லிங்கமே
தூயகற் றேய்கலை லிங்கமே "

" அணிகர சுத்தியா லிங்கமே
அணிபூதி அர்ப்பித் திலிங்கமே
அணியும் விதிப்படி லிங்கமே
அணிகண் மணிகளும் லிங்கமே "

" தரித்துனைப் பூசிக்க லிங்கமே
சதுர்விதப் பூவில்வம் லிங்கமே
சரித்ததை எடுத்தாய்ந்து லிங்கமே
சர்வோப கரணமும் லிங்கமே "

" ஆற்றிற் கபிலீச லிங்கமுன்
அடிக்குன்ற நீழலில் லிங்கமே
யேற்றுஞ் சிவலிங்க பூசனை
யான்செயுங் காலத்தி லிங்கமே "

(சதுர். 6, 7, 8, 9, 10)

என்பவாதிய திருவாக்குகளால் உணரலாம்.

சித்த சுத்தியும் அர்பிகை உபதேசமும்: 'எல்லாம் சிவனென்ன நின்றாய் போற்றி' – என்ற அருள் வாக்குக் கொப்ப, பற் கொம்பு முதலிய எப்பொருளையுமே சிவனுக் கர்ப்பித்துச் சித்த சுத்தியுடன் நாளும் சிவ பூசை மேற்கொள் ளும் நம் ஆறுமுக குரு பத்தாண்டு நிரம்பப் பெற்றார். அது வரை தன் குருநாதராகிய அருணைக் குகை நமசிவாயர் உப- தேசித்த தூல பஞ்சாக்கரத்தையே உருச் செபித்து வந்தார்கள்,

பதினோராம் வயதிலே ஓர் இரவில் துயில்கொண்டிருந்த- போது, உமையம்மையார் அருளொளி வீசும் கண்களுடன் பச்சை மரகத வண்ணங்கொண்டு அவர்கள் கனவில் எழுந்- தருளிச் சூக்கும பஞ்சாக்கரத்தை உபதேசித் தருளினர். 'இன்று முதல் இதைச் செபி' எனவும் திருவாய் மலர்ந்தருளி மறைந்தாள். இச் செய்திகள்,

" பெரிய உமையவள் லிங்கமே
பேரருள் என்சொல் இலிங்கமே
பெரிய வயதெதில் லிங்கமே
பேசெனப் பேசுநாள் லிங்கமே "

" தாய்சொலி னன்றென்க லிங்கமே
சாற்றிய மேலெதி லிங்கமே
தாயை யனுப்பிட லிங்கமே
தாயரு ளாய்வந்து லிங்கமே "

" அரிய உமையவள் லிங்கமே
அருளாய்க் கனவினில் லிங்கமே
தெரிய இறைமுனய் லிங்கமே
செப்பினள் சூக்குமம் லிங்கமே "

(சதுர்லிங்க 56, 57, 58)




எனுந் திருவாக்குகளாலும் அந்நூல் 59, 60 ஆம் செய்யுட் களாலும் அறியப்படுவன.

அன்று முதல் சுவாமிகள் 'அனுதினம் சூக்குமம் லிங்கமே, அளவில் உருச்' செய்திருந்தார்கள்.

" வைத்த பொருள்நமக் காமென்று சொல்லி மனத் தடைத்துச்
சித்தம் ஒருக்கிச் சிவாயநமவென் றிருக்கி னல்லான்
மொய்த்த கதிர்மதி போல்வா ரவர்பா திரிப்புலியூர்
அத்த னருள்பெற லாமோ? அறிவிலாப் பேதை நெஞ்சே!

என்னும் பொன்மொழி அவர்கள் உணர்ந்ததன்றோ ?

நாள்தோறும் பெண்ணை நதியில் நீராடிக் கபிலர் குன்றின் கீழ் அமர்ந்து இட்டலிங்க பூசனை புரிவர். பூசை முடியப் பகல் 25 நாழிகை (பிற்பகல் 4-00 மணி) யாகி விடும். பகல் 25 நாழிகைக்குப் பின், பரம ஆரியபுரம், திருக்கோவலூர், ஆதித்தபுரம், சிவபுரம், விதிபுரம், அச்சுதபுரம், சதமகன்ஊர், சுவாராணகர், உரோமசன்ஊர், காளிபுரம், கவுரிமாபுரம், திருக்கைவேலர்புரம், கணேசபுரம், வியாழபுரம், நாகபுரம், கபிலபுரம், தருமபுரம், பார்க்கவன் ஊர், மிருகண்டுபுரம், இராகவன் ஊர், கிருட்டிணரணியம், (சதுர்லிங்க. 20 முதல் 40 வரை உள்ள செய்யுள்கள் உணர்த்தும்) என்பன வாதிய பல பெயர்களையுடைய திருக்கோவலூரிலே வீரட்ட நாதர் ஆலயம் நண்ணிப் பத்தியுடன் தரிசனம் செய்வார். தரிசனம் இரவு 10 மணிவரை நடைபெறும். அவ்வேளைக்குப் பின் பெண்ணை நதி நீராட்டும் இட்டலிங்க பூசையும் மற்றும் ஒரு முறை நிகழும். இவை யாவும்,

"ஆற்றிற் கபிலீச லிங்கமுன்
அடிக்குன்ற நீழலில் லிங்கமே
யேற்றுஞ் சிவலிங்க பூசனை
யான்செயுங் காலத்தி லிங்கமே"

"நாழிகை ஐயைந்து லிங்கமே
நாளும் அருச்சித்து லிங்கமே
தாழும் பொழுதினில் லிங்கம்உன்
சமர்ப்பணை செய்தருள் லிங்கமே"

"அத்தம னத்திட்ட லிங்கம்நீ
அபிடேகம் கொண்டருள் லிங்கமே
அத்தவீ ரட்டலிங் கண்ணலின்
ஆலயம் சூழ்ந்தருள் லிங்கமே"

"பத்தியால் தரிசித்து லிங்கமே
பத்துக் கடிகைமேல் லிங்கமே
அத்தசா மத்துணை லிங்கமே
அருச்சனை செய்தருள் லிங்கமே"

" நாயேனுக் கிம்முறை லிங்கமே
நாளும் அனுட்டிக்க லிங்கமே
நீயே அருளினை லிங்கமே
நின்னருள் என்சொல லிங்கமே"
(சதுர்லிங்க. 11, 12, 13, 14)

முதலிய திரு வாக்குகளால் அறியப்படுகின்றன.

திரு நீற்றுப்பையும் அக்கமணி மாலையும் இறைவன் அருளப் பெறல்: திருமுறைகளின் தொடக்கப் பாசுரத்திலே திருஞான சம்பந்தர், "காடுடைய சுடலைப் பொடி பூசி என் உள்ளம் கவர் கள்வன்" என்கிறார். "வெண்ணீற்றான்" என்றும், "மெய்யெலாம்வெண்ணீறு சண்ணித்த மேனியான்" என்றும் திருநாவுக் கரசர் குறிப்பிடுகிறார். சிவபிரானது திருமேனியைக் குறிப்பிடுங்கால், "வெண்ணீறு சண்ணித்த மேனி" என்கிறார். "நீற்றுக் கோலம் நிமிர்ந்து காட்டி" என மாணிக்க வாசகர் தனக்கு இறைவன் காட்சியளித்தமையைச் சுட்டுகிறார். இவ்வாறே சமய குரவர் நால்வரும் பிறரும் யாண்டும் இறைவன் வெண்ணீறுடி எனக் கூறுகின்றனர். அவனடியவர்க் குரிய சிவ சின்னங்களுள் முதன்மையாயது அக் கங்காளன் பூசும் கவசத் திருநீறே.

" கருவாய்க் கிடந்துன் கழலே நினையுங் கருத்துடையேன்
உருவாய்த் தெரிந்துன்றன் நாமம் பயின்றேன்
உனதருளால்
திருவாய்ப் பொலியச் சிவாய நமவென்று நீறணிந்தேன்
தருவாய் சிவகதி நீபா திரிப்புலி யூரானே."
– திருநாவுக்கரசர்

" கீளார் கோவணமுந் திருநீறுமெய் பூசியுன்றன்
தாளே வந்தடைந்தேன் தலைவாளனை ஏன்றுகொள்நீ
வாளார் கண்ணிபங்கா! மழபாடியுள் மாணிக்கமே!
கேளா நின்னையல்லால் இனியாரை நினைக்கேனே?"
– சுந்தரமூர்த்தி நாயனார்

என்பன வாதிய அருள் வாக்குகளால் அடியவர் தம் திருமேனி முழுதும் திருவாளன் திருநீற்றைப் பெருவாழ்வு வந்த

தெனப் பெருமகிழ்ச்சியுடன் பூசுவர் என்பதை யறியலாம் நம் ஆறுமுக குருவும் சிறு பருவ முதற்கொண்டே நெற்றி முழுதும் மட்டுமன்றி உடலெங்குமே தூய வெண்ணீருடு-வார்.

" திருநாமம் அஞ்செழுத்தும் செப்பா ராகில்
தீவண்ணர் திறம்ஒருகால் பேசா ராகில்
ஒருகாலும் திருக்கோயில் சூழா ராகில்
உண்பதன்முன் மலர்பறித்திட் டுண்ணு ராகில்
அருநோய்கள் கெடவெண்ணீ றணியா ராகில்
அளியற்ருர் பிறந்தவா றேதோ வென்னில்
பெருநோய்கள் மிகநலியப் பெயர்த்துஞ் செத்துப்
பிறப்பதற்கே தொழிலாகி இறக்கின் ருரே. "

என்று மக்கட்கு உறுதி கூறும் நாவரசர் கூறும் செம்மை நலத்தினை மிகச் சிறு பருவ முதற்கொண்டே கடைப் பிடிப் பவரன்ருே நம் குருநாதர் ?

முழு நீறு பூசிய முனிவர்போல் விளங்கிய ஆறுமுக குரு ஓர் நாள் தென் பெண்ணை நதியில் நீராடினுர். புனித வெண்ணீறினும் ஆட வேண்டி, தான் கரையிலே வைத்துச் சென்ற திருநீற்றுப் பையைத் தேடினுர். காணவில்லை. இறைவனை நோக்கினுர். "இறைவா! என்னே நின் திரு-விளையாட்டு ? 'நீறில்லா நெற்றி பாழ்' அன்ருே? 'நீறிடார்களே நிரய வாணர்' என்பது தொல்காப்பியத் தேவர் திருவாக்கன்ருே ? 'கோது இல் அஞ்செழுத்து ஓதி நீறணிந்து இன்று பாதிரிப் புலிசை சேர்வரேல் **யாவராயி**னும் தேவர் ஆவரே' என்றனன்ருே ஆன்ருேர் கூறினர் ? 'நீறு நெற்றியில் இடா மூடர்' என்று கூறிய அருணகிரியார் வாக்குக்கு எளியேன் இலக்காவதோ ?" என்றெல்லாம் வேண்டினுர்.

இறைவன் பேரருளுக்குப் பாத்திரராகிய இவ்விளந்-துறவி, தான் உபயோகிக்கும் பற்கொம்பு முதலாக யாவற்றையும் இறைவனுக்கே அர்ப்பணம் செய்பவர். அங்ஙனம் இடையருத தூய சிவ சிந்தனையோடு ஒழுகும் இவர், பூசும்,

கபிலர் குன்று திருக்கோவலூர்ப் பெண்ணையாற்றிடையில் உள்ளது.



" ஆற்றிற் கபிலீச லிங்கமுன் ஏற்றுஞ் சிவலிங்க பூசனை
அடிக்குன்ற நீழலில் லிங்கமே யான்செயுங் காலத்தி லிங்கமே." - முதற் குருமூர்த்திகள்

போதம் தருவதாகிய வெண்ணீறு, தன் திருமேனியின் நேரடித் தொடர்புடையதாகவே யிருக்க வேண்டுமென்று இறைவன் கருதினுன். அவர்கள் கரைக்கண் வைத்த விபூதிப் பையை மறைத்தான், திருநீலகண்ட நாயனுரிடம் "தாம் முன்வைத்த கோலமார் ஓடு தன்னைக் குறியிடத் தகலப் போக்கி"யும், "கோவணக் கள்வ"ராய் அமர்நீதி நாயனுரை ஆட்கொண்டருளியும் திருவிளையாடல் புரிந்தருளிய பரமனுர்க்கு இவர்வைத்த திருநீற்றுப் பையினைக் கவர்வதும் அரிதோ ?

வேண்டுவார் வேண்டுவதே யீவானும், வேண்டத் தக்கது அறிவோனும் பரமனே யென்பதொருபுறம் கிடக்கத், தன் நிறை திருவருள் பூதி சாதன முகத்தால் இவ் விளந்துறவிக்குக் கிடைக்கவேண்டும், அதனை யுணர்ந்தேனும் இவ்வுலக மாக்கள் தானெனும் பற்றறுத்து யாவும் பரமன் திருவருளே – அவன் திரு உருவங்களே – என்பவற்றை உறுதி செய்துகொள்ள வேண்டுமென உள்ளத்திலே உன்னினுன் போலும் !

மேற் கூறியவாறு இறைவனை நோக்கி முறையிட்டுப் பரவிச் செயலற்றிருந்த அடிகளார் திருக்கைகளிலே ஓர் திருநீற்றுப் பையும் ஓர் உருத்திராக்க மாலையும் வந்திருந்தன- அடிகளார் பைநிறையத் திருநீரும் பெருஞ் செல்வம் இருக்கக் கண்டார்கள். * மகிழ்ச்சி மிகக் கொண்டார்கள். சுற்றிலும் பார்த்தார்கள். யார் இவற்றைத் தன் கையகத்து வரச் செய்திருக்கக் கூடும் ? என ஐயுற்ருர்கள். மனித அரவமே யாண்டுமில்லை. வியந்தார்கள். இறைவன் திருவருளை

*திருக் கோவலூர்க்குக் கிழக்கே 24 கல் தொலைவில் திருமுண்டீச்சரம் என்ற தேவாரம் பெற்ற முது நகர் ஒன்றுளது. அங்கு எழுந்தருளியுள்ள பெருமானுக்குப் **பொக்கணங் கொடுத்தருளிய நாயனுர்** என்ற பெயர் கல்வெட்டுகளிற் கூறப்பட்டுள்ளது. அவ் விறைவன் அரசர் ஒருவர்க்குத் திருநீற்றுப்பை அருளினுன். (பொக்கணம் – திருநீற்றுப்பை. 'பொக்கணத்து நீற்றை இட்ட ஒருத்தனுர்' என அருணகிரி நாதர் காளத்திச் சிவகோசரியாரைக் குறிப்பிடுகிருர்) அத்தல வரலாற்றிற் பிறவும் விரிவாகக் காணலாம்.

எண்ணி யெண்ணித் துதிக்கும் அவ்வேளையிலே, "அன்பனே, இத் திருநீற்றுப் பையினின் றெடுத்து வேளைதோறும் வெண்ணீறு பூசி, இம் மணிமாலை கொண்டு உருச் செபித்து வருக. யோக சாதனையைக் கடைப்பிடித்து மனம் அடங்கும் மாஞானம் பெற்றுளீர்க." என ஓர் விண்ணொலி எழுந்தது.

மேற் கூறப்பெற்ற செய்திகள்,

"நீற்றுக் கோயில்போக் கிலிங்கமே
நின்ற நிலைவைத்தாய் லிங்கமே
நீற்றுக் கோயில்தந்து லிங்கமே
நீத்தா தடக்கென்கும் லிங்கமே"

(சதுர்லிங்க, 61)

என்ற அடிகளார்தம் அருள்வாக்கால் உறுதிப்படும். (இன்றும் இம் மடாலயத்தில் திருநீற்றுச் சம்புடம், 'திருநீற்றுக் கோயில்' என்றே வழங்கப் படுகிறது.)

தெய்வத் திருநீறு : "உள் மாசு கழுவுவது நீறு" என்றார் பரஞ்சோதியார். "ஆதி பகவன் ஞான வடிவழலிற் பூத்து நித்தியமாய், அணிந்தோர் தமக்கு வசிகரமாய், அருந்தினோர்கட்கு ஆரமுதாய், நீ தி ய றி யு ம் பசு மலத்தை நீக்கும் ஒரு நல் குறிகாட்டி நிகழ் பேரின்பக் கடல் ஊட்டி நின்ற புகழ் வெண் திருநீறு" என்று விவரித்தார் திருப்போரூர் சிதம்பர சுவாமிகள். வினை மாசு முதலியவற்றைத் திருநீறு நீக்கி விடுதலால் *பசிதம்* என்றும், இறுதியாய வடிவம் அதுவல்லாது வேறில்லை யாகையால் *பசுமம்* என்றும், தீய பேய் முதலியவற்றை அண்டவிடாமல் ஓட்டி விடுதலால் *ரட்சை* என்றும் பிறவாறுங் கூறப்படுவது திருநீறு. திருஞான சம்பந்தர் கைத் திருநீறு, பாண்டிய மன்ன (நெடுமாற நாயனா)ரது கொடிய வெப்பு நோயைத் தீர்த்தது. திருநாவுக் கரசர் இட்ட திருநீறு, கருநாகந் தீண்டி உயிர் நீத்த அப்பூதியடிகளார் மகனின் உயிரை மீட்டது. சுந்தர மூர்த்தி நாயனார் திருநீறு, பல பல ஆண்டுகட்கு முன் முதலையால் உண்ணப்பட்ட பாலனை உயிருடனும் வளர்ச்சியுடனும் வெளிக் கொணர்ந்தது, சிவபரஞ் சுட-

ராலேயே அளிக்கப்பட்ட திருநீறு எதனைச் சாதிக்காது? அந்நாளில் அடிகளார் கையாலளித்த திருநீறு எத்தனையோ நன்மைகளை யாவர்க்கும் அளித்திருக்கலாம். ஆனால் அந்தப் புனிதத் திருநீற்றின் தொடர்புடன் இன்றும் நம் மடாலயத்துள் விளங்கும் அத்திருநீற்றுப் பையினின் றெடுத்து இறை திருவருளை நினைத்துக் கொடுக்கப்பெறும் திருநீற்றால் நோய் முதலிய நீங்குவதும், எண்ணிய எண்ணியாங்கு எய்தப் பெறுவதும் கண் கூடு. *

அந்தத் திருநீற்றுப் பையும் அக்கமணி மாலையும் இன்றும் இம் மடாலயத்து உள. அவை நாடோறும் பூசிக்கப் பெறுகின்றன. அவ்வப்போது அபிடேகத் திருநீறு சேர்க்கப் பெற்று, இறைவனளித்த திருநீற்றுத் தொடர்புடன் இன்றும் விளங்குகிறது அந்த நீற்றுக் கோயில்.

வீரட்ட நாதர் தம் திருக் கரத்தாலளித்த பையினின்று வேளைதோறும் திரு நீறணிந்தும், உமையம்மை கனவில்

---

*இம் மடாலய ஐந்தாமுறைக் குரு நாதரை யறிந்தவர் பலர். அவர்கள் தமிழும் சைவமும் சிறந்தோளிர ஆம் தொண்டுகளை மேற்கொண்டவர்கள். சிவிகை யூர்ந்து சென்னை முதல் குமரிமுனைவரை பற்பல இடங்கட்கும் செல்வார்கள். தாமே ஓர் தமிழ்க் கல்லூரி நிறுவ முனைந்தார்கள். அதுகண்ட மயிலம் பொம்மபுர ஆதீனத் தலைவரவர்கள் பெரு முயற்சியுடன் ஓர் கல்லூரியை 1938 ஆம் ஆண்டு முதல் தொடங்கி விட்டார்கள். பின்னரே தருமபுரம், திருவாவடுதுறை, திருப்பனந்தாள் முதலிய இடங்களில் தமிழ்க் கல்லூரிகள் தொடங்கின. இறையுணர்ச்சியும், செந்தமிழ்ப் பற்றும் எத்தகையாரும் கொள்ளவேண்டி சுவாமிகள் ஆற்றிய தொண்டுகள் மிகப் பலவாகும். அத்தகைய பெரியார் 'ஞானி யார்?' என்ற வினாவினுக்கு 'ஞானியார்" என்றே விடையிறுக்கும் அளவிற்கு மெய்யுணர்வும் கைவரப் பெற்றவர்கள். அவர்கள் அளித்த திருநீறு, மருத்துவர்களாற் கைவிடப்பட்ட நோயாளர்கட்கும் பிணியைப் போக்கி நெடிது ஆயுள் தந்துளது. அவர்களைப் பற்றிய வரலாற்றுக் குறிப்புகளாலும், திரு. வி. க. அவர்கள அடிகளாரைப் பற்றித் தன் வாழக்கைக் குறிப்புகளிற் கூறியிருப்பன வற்றாலும் இந்நிகழச்சிகள் தெள்ளிதின் விளங்கும். அவர்கள் இறை முருகனையும் தன் முதற்குரவரையும் எண்ணியே நீறு அளிப்பார்கள்.

அருளியவாறு சூக்கும பஞ்சாக்கரம் செபித்தும் வருங் காலங்களிலேயே தன்னை நாடி வந்தோர்க்குத் திருநீறளித்து நோய் களினீங்கவும், வேண்டியன வேண்டியாங்கு எய்தப் பெறவும் அருளினார்கள். அருஞ் செயல்கள் பலவும் ஆற்றி வந்த நம் அருங்குரவரை ஊரவர் பலரும் போற்றிப் பரவினர்.

அடிகளார்க்கு வயது பதினைந்து நிரம்பிப் பதினாறு நடக்கும் காலத்திலே ஒரு நாள் ஆற்றிலே கபிலர் குன்றின் கீழமர்ந்து சிவபூசை முடித்து மனம் அடங்கும் நிலை வருவான் தியானத்திலமர்ந்து விழித்தபோது எதிரே ஓர் ஆராத்திரியர் (கோயிற் பூசனை புரிவோர்) நிற்கக் கண்டார்கள். உடனே எழுந்து அட்டாங்க பஞ்சாங்க நமஸ்காரம் செய்து நின்று 'அரகர' என அஞ்சலித்தார்கள். வந்தவர்க்கு முகமன் கூறி இருக்குமாறு வேண்டினார்கள். வந்தவர் அமர்ந்தார். சில சொல்லுவான் தொடங்கிச் செவியருகில் தன் திருவாயினைக் குவித்துக் காரண பஞ்சாக்கரத்தை உபதேசித்தார். "இன்று முதல் இதனைச் செபித்துவா" எனவும் அருளி, இருந்த இடத்திலேயே திருவுருக் கரந்தருளினார். ஆறுமுக குரு திகைத்தார்கள். வியந்தார்கள். வந்தவன் இறைவனே என்று உறுதி செய்து கொண்டு, "பெருமானே! எளியேற்கு எளிவந்த நின் பெருங் கருணைத் திறத்தினை என்னென்றியம்புகேன்? இன்னும் சற்றே அமர்ந்திருந்து கருணை பாலித்திருக்கலாகாதா?" என்று பலவாறு வேண்டினார்கள். இவை யாவும்,

"காரணம் அருளின லிங்கமே
கண்மணி எட்டினால் லிங்கமே
பேரங் குட்டச்செபம் லிங்கமே
பிழைக்க அருளிய லிங்கமே"

"அருளும் ஆராத்திய லிங்கமே
அதீதம் என்றைக்கென் ௱ லிங்கமே
உரைநான்கு வருடத்தின் லிங்கமே
உபதேசம் செய்வதென் லிங்கமே"

(சதுர்லிங்க. 62, 63)

என்றருளிய வாற்றா லறியக் கிடக்கின்றன.

டாறைக்குகை, திருக்கோவலூர் வீரட்டநாதர் ஆலயத்தின் கீழ்த்திசையில் உள்ளது அடிகளார் தவம்புரிந்த குகை. உட்புகவேண்டுமேல் தவழ்ந்தே செல்லவேண்டும்.



" ஞானம் கிடைத்திட லிங்கமே
நாடோறும் சித்திக்க லிங்கமே
போனமுப் பும்விட்டு லிங்கமே
பொசித்துப் பசுவின்பால் லிங்கமே "

" நேமன காலத்தி லிங்கமே
நின்ஆ லயலிங்கக் கீழ்த்திசை
ஆமிடம் பெண்ணையில் லிங்கமே
அருளிறைத் தியானமாய் லிங்கமே "

— *முதற் குருமூர்த்திகள்*

•

ஆறுமுக குரு ஆராத்திரிய உருவந் தாங்கிவந்த வீரட்ட நாதர் உபதேசித்தவாறே காரண பஞ்சாக்கர செபத்தினை நாடோறும் செய்து வருவார்கள். ஒரு நாள் இறைவனை நோக்கிப், "பரம்பொருளே! இங்ஙனமாகப் பல முறையும் வந்து எளியேன் பொருட்டு இந் நிலத்தில் திருவடி தோய வருந்துவதோ? எளியேன் கடைத்தேறும் வண்ணம் வாக்கு மனங்கடந்த ஒரு சொல்லினை உபதேசித் தருளலாகாதோ?" என முறையிட்டார்கள். அன்றிரவில் அவர் கனவில் இறைவன் எழுந்தருளி, "இன்னும் நான்காண்டுகளில் உனக்கு ஒரு வார்த்தை உபதேசம் அருள்வோம்." என்றருளினர். (மேற் கூறிய 63 ஆம் பாடலால் இவ்வுண்மை விளங்கும்.)

காரண பஞ்சாக்கர செபம் இடையருமல் ஒன்பது நாட்களே நடைபெற்றன. பத்தாவது நாள் வீரபத்திரக் கடவுள் எதிர் தோன்றினர். *மகா காரண பஞ்சாக்கரத்தைக்* குருநாதருக்கு உபதேசித் தருளினர். அதன் உண்மைப் பொருளையும் உயர்த்தியருளினர்.

"அருளிப்பத் தாந்தினம் லிங்கமே
ஆருகை வீரேச லிங்கமே
அருளிமா காரணம் லிங்கமே
அஞ்செழுத் துண்மையும் லிங்கமே"

(சதுர்லிங்க. 64)

"உபயாக் கரமனு லிங்கமே
உடற்சிரம் நெறியாக லிங்கமே
செபியாச் செபியெனும் லிங்கமே
சித்தம் அடங்குமென் லிங்கமே"

"நேமன காலத்தி லிங்கமே
நின்ஆ லயலிங்கக் கீழ்த்திசை
ஆமிடம் பெண்ணையில் லிங்கமே
அருள்இறைத் தியானமாய் லிங்கமே"

(சதுர்லிங்க. 65, 66)

முன் காரண பஞ்சாக்கர உபதேசம் பெற்ற பத்தாம் நாள் வீரபத்திரக் கடவுளால் மகாகாரண பஞ்சாக்கர உபதேசம் பெற்ற பின்னர், வீரட்ட நாதர் கோயிலின் கீழ்ப்புறத்திலே பெண்ணை நதியிலும் நதிக்கரையில் உள்ள ஓர் பெரிய பாறையின்மேல் அமைக்கப்பட்டு இன்றும் கிலமாகக் காணப்படும் சிறு ஒடுக்கத்துள்ளும் இருந்துகொண்டு செபித்து வருவார்கள்.

நான் காண்டுகள் மனோலயம் உண்டாவதற்காக எவராலும் ஆற்ருெணுத் தவம் இயற்றினுர்கள். *" நிட்டையாதல் கருத்தடங்க நிறுத்தல் அதுவே சிவயோகம் " என்று தாமே யருளிய வாக்குக் கொப்ப நிட்டைகூடி நிமலனை வழிபட்டார்கள்.

கருத்தடங்க வேண்டுமேல் உடற்பற்று அகல வேண்டும். ஆனுல், ' உடம்பை வளர்க்கும் உபாயமும் ' அறிந்து அவ் வுபாயங்களைப் பின் பற்றினுர்கள். அவையாவன : உணவில் உப்பை விடுதல், சில நாள் இவ்வாறு பழகிய பின் சில நாள் பசுவின் பால் மட்டுமே பருகல், சில நாள் கற்ருழையை உண்ணல், சில நாள் அறுகம்புல்லின் கட்டையிட்ட நீரை மட்டுமே கொள்ளல், புற்று மண் கலந்த நீரை மட்டுமே உட் கொள்ளல். முறையே இவ் வாருகப் பிறவாப் பெரு வாழ்வு பெறத்தக்க சாதனைகளை, 'உடலினை யானிருந்து ஓம்புகின்றேனே ' என்றவாறு, உடலினை நிலவுலகில் நிலைக்கச் செய்து நிலைத்த ஆனந்தத்தினை யடைந்தார்கள்.

" ......போக்கும், வரவும் நினைப்பும் மறப்பும் பகலும், இரவுங் கடந்து உலவா இன்பம் மருவுவித்து " எனவரும் கந்தர் கலி வெண்பாவும்,

" போக்கும் வரவும் இரவும் பகலும்
புறம்பும் உள்ளும்
வாக்கும் வடிவும் முடிவுமில் லாதொன்று
வந்து வந்து

*நிட்டானுபூதி சாரம்- 31-ஆம் பாடல்.

தாக்கும் மனேலயம் தானே தரும்எனைத்
தன் வசத்தே
ஆக்கும் அறுமுகவா சொல் லொணு
திந்த ஆனந்தமே ''

என்ற (கந்தரலங்காரம் 73) அருணகிரியார் வாக்கும்,

'' தந்தது உன்றன்னைக் கொண்டது என்றன்னைச்
சங்கரா யார்கொலோ சதுரர்
அந்தம் ஒன்று இல்லா ஆனந்தம் பெற்றேன்
... ... ... ... ...''

எனவரும் மணிவாசகப் பெருந்தகையார் வாக்கும், இந்தப் பால யோகியின்பால் உண்மையாயின. இவ்வாருகப் பதினைறு வயதுவரை இவர்கள் ஆநந்த மேலீட்டிலே தோய்ந்திருந்தார்கள்.

மேற் கூறிய வெல்லாம்,

'' ஞானம் கிடைத்திட லிங்கமே
நாடோறும் சித்திக்க லிங்கமே
போனமுப் பும்விட்டு லிங்கமே
பொசித்துப் பசுவின்பால் லிங்கமே ''

'' கற்ருழை நாட்சில லிங்கமே
கட்டை யறுகினை லிங்கமே
புற்றுமண் ணீரையும் லிங்கமே
புசிக்க விரதமாய் லிங்கமே ''

(சதுர்லிங்க. 15, 16)

என்பன வாதிய அவர்களது வாக்கினின்றே தெளியலாம்.

யான் எனதென்றும் செறுக்கறுத்து, மோனந்தமாய பர நிலையிலே நிற்கும் சாதனை கைவரப் பெற்றபின் '' பாவி மனக் குரங் காட்டம் பார்க்க முடியாமல் '' தன்னிடம் '' மனம் எனும் மாடு அடங்''கும் சாதனையில் ஈடுபட விரும்பி வரும் பக்குவர்க்குத் திருவருள் பாலிக்கவும், உடல் நல முதலிய வேண்டித் தரிசிப்பவர்க்குத் திருக் கடைக்கண் ணேக்கும் திருநீறும் அருளவும் அவ்வப்போது வெளியே

எழுந்தருள்வார்கள். முன் ஆராத்திரிய உருவந்தாங்கி வந்து காரண பஞ்சாக்கர உபதேசம் செய்த அன்றிரவிலே கனவிலெழுந்தருளிய கடவுள் குறிப்பிட்டவாறு, 'நான் காண்டுகள் என்று கழியும்?' என எதிர்நோக்கி யிருந்தார்கள்.

**இறைவன் நிட்டானுபூதி நூலும் பாவனுதீத ஒரு வார்த்தை உபதேசமும் அருளல் :**

தன் கருத்தை முற்றுவிக்க இறைவன் எழுந்தருளும் நாளை எதிர்பார்த்து வழக்கப்படியே பெண்ணை நதியில் நீராடிக் கபிலர் குன்றின் கீழமர்ந்து சிவ பூசனை புரிவார்கள். இவ்வாறு செய்யும் நாட்களிலே ஆவணி மாதம் மூல நாளிலும் சிவ பூசை புரிந்து செஞ்சடைப் பிரானை உள்ளத் தடக்கித் தியானம் புரிந்து அமர்ந்திருந்தார்கள்.

"அக்கணம் ஆற்றினில் லிங்கமே
அசையாது மோனத்தின் லிங்கமே
நிற்கும் படியருள் லிங்கமே
நின்னருள் என்சொல லிங்கமே"

(சதுர்லிங்க. 95)

என்றருளியவாறு அசையாது மோனத்தில் நின்று வீரட்ட நாதனையும் பெரிய நாயகியையும் தியானித் திருந்தார்கள். உமை பாகனாக ஒரு பரம்பொருளைக் காண வேண்டுமென்ற விருப்பம் மேலிட,

"உன்றனைப் பூசித்து லிங்கமே
உள்ளக் கனிவுடன் லிங்கமே
உன்றன் அருளினால் லிங்கமே
உமையொடுங் காண்கருள் லிங்கமே

(சதுர்லிங்க. 98)

உண்மை விளங்கருள் லிங்கமே

(சதுர்லிங்க. 18)

என்று நெக்குருகி நினைந்திருக்கும் வேளையிலே, *வீரட்ட நாதன், விமலையொரு பாகனாய் இடப வாகனத்தின் மீது எழுந்தருளிக் காட்சி நல்கினான்.* "பொன் வண்ணம் எவ்வண்ணம் அவ்வண்ணம் மேனி பொலிந்து" இலங்க,

வீரட்டநாதர் ஆலயம், திருக்கோவலூர்



'' திருக்கு ஓவும் மாபலி லிங்கமே
சிவபுரத் தருச்சிக்க லிங்கமே
திருக்கோவ லூரென்க லிங்கமே
செய்முறை யாண்டருள் லிங்கமே ''

'' அத்தம னத்திட்ட லிங்கம் நீ
அபிடேகம் கொண்டருள் லிங்கமே
அத்தவீ ரட்டலிங் கண்ணலின்
ஆலயம் சூழ்ந்தருள் லிங்கமே ''

— முதற் குருமூர்த்திகள்

ஒரு பால் பச்சை மரகதப் பொற்கொடி தோற்ற மளிக்கக், கருணை விழிகளால் தம்மை நோக்கி அபயமளித்தருள் ஆண்டகையைக் கண்குளிப்பக் கண்டார்கள். ஆநந்த பரவசத்துடன் பலபல வாறு துதித்தார்கள். உரை, மனங் கடந்து நின்ற ஒரு தனிப் பரம்பொருளைத் தோத்திரிக்க உரை யெழாமல், மயிர்க்கால் தோறும் புளகம் போர்ப்ப, ஆநந்தக் கண்ணீர் அருவியாய் ஒழுக அமர்ந்திருந்த மெய்ஞ் ஞான குரு மூர்த்திகளின் மடித்தலத்திலே வாதுளாகமத்தின் உத்தர பாகத்திலே இருபத் தெட்டாம் படலத்தில் உள்ள நிட்டானுபூதியை முக்கண்ணன் இட்டான். தன் திருவடிகளை முடிமேற் சூட்டினான். அடிகள் தலைமீது தன் கையை வைத்து அனுக்கிரகித்தான். ஆறுமுக குருவின் அஞ்செவி குளிரப் பாவனாதீத ஒரு வார்த்தையை உபதேசித் தருளினான். ஞானக் கண்களாற் கண்ட போதினும், ஊனக் கண்களாற் காணும் பெரும் பேற்றினையும், அவன் அருளிய ஒரு வார்த்தையினையும் நினைந்து உளம் மகிழும் அக்கணத்திலே இறைவன் தன் திருவுருவைக் கரந்தருளினான்.

“ஆனந்த சோதியாய் லிங்கமே
யான்காணக் காட்டிய லிங்கமே
ஆனந்தக் கண்ணீராய் லிங்கமே
அலறி யழுகருள் லிங்கமே.”

(சதுர்லிங்க. 77)

என்று பலபல வாறாக நெக்கு நெக்குருகித் தோத்திரம் செய்து, அவன் தன் மடிமீதிருத்திய வடமொழி நிட்டானுபூதிச் சுவடியைக் கண்களில் ஒற்றியும் உச்சிமேற் சூடியும் பரவசம் எய்தினார்கள்.

“ஆவணி மூலநாள் லிங்கமே
அங்கிருத் தற்கருள் லிங்கமே
கோவல் வீரட்டேச லிங்கமே
கொடுத்தருள் வாதுளம் லிங்கமே”

(சதுர்லிங்க. 67)

என்ற திருவாக்காலும், நிட்டானுபூதி சாரம் என்ற நூலின் 90-ஆம் செய்யுளிலே,

" கோவல்வீ ரட்டர் அனுக்கிரகித்துக்
கொடுத்திடும் ஆகமம் "

என்னும் பகுதியானும், ஆவணி மூ ல மா ம் நன்ளுளிலே இறைவனே வந்து அனுக்கிரகித்து உபதேசம் அருளி நிட்டானு பூதி நூலையும் அருளினு னென்பது புலப்படுகிறது.

" .........தண்டு தாவடிபோய்த் தேரில் கரியில் பரியில் திரிந்து, " செல்வ மெல்லாம் நீரில் பொறி என்று அறியாத பாவி " கட்கு அதனை அறிவுறுத்தி நிலை பெற்ற பெருஞ் செல்வத்தினை யடையப் பாடுபடவேண்டுமென மணிவாசகப் பெருந்தகையார் வாயிலாக உலகத்திற்கு அறிவுறுத்தவும், தன்னை வந்திப்பதன்றி வேறு சிந்தனையில்லாது, தான் பிழைப்புக் கருதிச் செய்து விற்கும் பிட்டினையும் தனக்கே உரிமையாக்கும் 'வந்தி' என்னும் பெயர்கொள் மூதாட்டிக்குச் சிவப்பேறு தரவும், சோமசுந்தரப் பெருமான் மதுரை யிலே வந்திக்குக் கூலியாளாய் வந்து அவள் தந்த பிட்டினை உண்டு பிரம்படி பட்டதும் ஆவணி மூல நாளே. இங்கு நம் ஞான குரவர்க்குக் காட்சியளித்து ஒரு சொல் உபதேசம் அருளிய நாளும் அதுவே.

ஆண்டுதோறும் நம் குருநாதர்க்குக் காட்சி தந்தருளிய வீரட்ட நாதன், ஆவணிமூல நாளில் நம் மடாலயத்தின் சார்பில் திருவிழாக் கொண்டருள்கிறுர். குருநாதர் எழுந்தருளியிருக்கும் திருக் கோயிலுக்கு மேற்கதும், வீரட்ட நாதர் திருக் கோயிலுக்கு வடக்கதும் ஆகித் திருக் கோவலூரிலுள்ள நம் மடாலயச் சார்பிலே உள்ள மண்டபம் ஆவணிமூல மண்டபம் என்னும் பெயரினது. இரண்டாம் முறைச் சுவாமிகள் எழுந்தருளியிருந்த நாள் முதலாகவே ஆண்டு தோறும் வீரட்ட நாதர் இம் மண்டபத்திற்கு எழுந்தருளி அபிடேக முதலிய கொண்டு அன்றிரவு திருவீதி உலாப் போவது இன்றும் நடைபெற்று வருவதொன்று.

நிட்டானுபூதி வரலாறு: முன்னெரு காலத்திலே திருக் கயிலாயத்தில் உலக அன்னையாம் உமையம்மை, சிவ பரஞ் சுடரை நோக்கி, வணங்கி ஆத்ம நிட்டையைத்

தனக்கு அறிவித் தருளவேண்டு மெனக் கேட்டார். அப்போது உலகத்து உயிர்கள் உய்வான் விரும்பிக் கருணை கொண்ட பரம்பொருள், அந் நிட்டையை அம்மைக்கு உபதேசித் தருளினுன். அது வாதுளாகமத்தின் உத்தர பாகத்தில் உள்ளது. இருபத்தெட்டாம் படலமாக அமைந்தது.

இவற்றை,

"என்கரத் திருப்பதை லிங்கமே
யான்அதி சயித்திட லிங்கமே
முன்சிவைக் கருளிதின் லிங்கமே
மொழியும் ஒருசொல்என் லிங்கமே"

"வந்தென் சிரத்திடை லிங்கமே
வைத்துன் அடிகளை லிங்கமே
சிந்தித் தருளொடும் லிங்கமே
சிரத்திற் கரம்வைத்து லிங்கமே"

"அருளொடும் பார்த்தெனை லிங்கமே
அருள்வா துளப்பொருள் லிங்கமே
ஒருவார்த்தை யேயென லிங்கமே
உமையாதி யர்கட்கும் லிங்கமே"

(*சதுர்லிங்க.* 68, 87, 88)

"அத்தனுர் தமைக்கயிலை யிடத்துமையாள் வணங்கிமகிழ்ந்
தன்பிற் கேட்ப
உத்தரவா துளந்தன்னில் நாலேழாம் படலத்தில்
உண்மை ஞான
முத்தியினை யுதவுநிட்டா வனுபூதி தனையெடுத்து
மொழிந்தான் அத்தை
இத்தலனில் யான்தமிழாற் புல்லறிவு கொடுபுகல
இசைந்து ளேனுல்.

(*நிட்டானுபூதி சாரம்*–13. *நூல் வரலாறு*)

" பாவனு தீத நிட்டானு பூதி
பரசிவன் உமைதனக் கருளத்
தேவியு மகிழ்ந்த வடமொழி யதனைச்
செஞ்சடைப் பிரான்றிரு வருளால்
கோவல்வா ழாறு முகசிவ ஞான
குருபரன் தமிழினு லுரைத்தான்
மேவுநற் பயனை யுணர்ந்துசா தித்தோர்
மேன்மைவீ டடைவது நிசமே."

(நிட்டானுபூதி 91. நூற் சிறப்பு)

என்னும் திரு வாக்குகளால் அறியலாம்.

பாவனுதீத ஒரு வார்த்தை: திருவண்ணு மலையில் முருகப்பெருமான் அருணகிரி நாதருக்கு ஒருமொழி உபதேசம் செய்தருளினுன். இதனை அவரே "அருணை நகர்மிசை – கருணை யொடருளிய பரம ஒரு வசனமு, மிருசரணமு-மறவேனே" என்றும், "அருணை நகர் மிசை கருணையொ டருளிய மவுன வசனமு மிருபெரு சரணமு – மறவேனே" என்றும், திருப்புகழிலும்; சும்மா இரு சொல்லற என்றலுமே, அம்மா பொருளொன்றும் அறிந்திலனே" என்று கந்தரனுபூதியிலும் கூறுகிறுர். அது போன்றே நம் ஞானியாருக்கும் ஒரு வார்த்தை உபதேசத்தை இறைவனே வந்து அருளிச் செய்தான். அவ்வார்த்தையைக் கடைப்பிடித்த தனது அனுபவத்தினை,

" ஒருமொழி யாலே சுருதியா கமநூல்
உயர்புரா ணமுமெலாம் மொழியும்
ஒருமொழி யாலே சரியைநற் கிரியா
யோகபா வனையெலா மொழியும்
ஒருமொழி யாலே அண்டபூ தங்கள்
ஒடுங்கிடுந் தன்னிலை தோன்றும்
ஒருமொழி சும்மா விருத்தலா மதனுல்
ஒப்பிலாச் சிவபதம் அடைவார்"

(நிட்டானுபூதி 15)

என்று ஆசிரியரே விதந்து கூறுகிறுர்கள். இச் செய்யுளையும் முத்து கிருஷ்ண பிரம்மத்தின் உரை, பதசார முதலிய

ஆவணிமூல மூல மண்டபம், திருக்கோவலூர்



" ஆவணி மூலநாள் லிங்கமே கோவல்வீ ரட்டேச லிங்கமே
அங்கிருத் தற்கருள் லிங்கமே கொடுத்தருள் வாதூளம் லிங்கமே" —முதற் குருமூர்த்திகள்

ஆதீன முதற்குரவர் ஆலயம், திருக்கோவலூர்



வற்றையும் ஆழ்ந்து கற்று அநுபவித்தவரே அதன் சுவை யுணர்வர்.

இனித் திருமூல நாயனுர், "ஓமெனும் ஓங்காரத் துள்ளே ஒருமொழி" என்றும், வாதவூரடிகள் "மன்ன என்னை ஓர் வார்த்தையுட் படுத்துப் பற்றினுய்" என்றும், "சொல்லரிய நெறியை ஒரு சொல்லால் உணர்த்தியே சொரூப அநுபூதி காட்டி" எனத் தாயுமானுரும், பிற அநுபூதி மான்கள் பல பல வாறுங் கூறு வனவற்றைக் கற்றுத் தெளிதல் நம் தலை-யாய கடமையாகும்.

ஞானியார் : திருவருணைக் குகை நமசிவாயர் பரம்பரை யிலே ஆருவது குருமூர்த்தியாக எழுந்தருளி யிருந்தவர்கள் தம் மரபினை நிலைநாட்ட வந்த ஆறுமுக குருவின் இருப்-பிடத்திற்குத் தாமே எழுந்தருளித், தன் மாணவர் "சிவ-னடியே சிந்திக்கும் திருப் பெருகு சிவஞானம், பவமதனை அற மாற்றும் பாங்கினில் ஓங்கிய ஞானம், உவமை யிலாக் கலை ஞானம், உணர்வரிய மெய்ஞ்ஞான" முதலிய யாவுங் கைவரப் பெற்றிருத்தலை யுணர்ந்து 'ஞானியார்' என்று பெயர் சூட்டினுர்கள். இறைவனருளிய நிட்டானுபூதியைத் தமிழில் மொழி பெயர்த்துத் தமிழர் யாவரும் பயனடையு-மாறு செய்யச் சொன்னுர்கள்.

ஆசிரியரின் ஆணையைச் சிரமேல் தாங்கிய ஞானியா-ரடிகள் அதனை அங்ஙனமே மொழிபெயர்த்துத் தொண்-ணூற்றொரு செய்யுள்களாக இயற்றியருளினுர்கள். தம் நூலின் வாழ்த்துப் பகுதியிலே குகை நமசிவாய தேவர்க்கும், பின் அம் மரபில் வந்த தன் தீக்ஷாகுரு குருநமசிவாய தேவர்க்கும் வணக்கம் கூறுகிருர்கள். நூலின் முடிவிலும் முன்னிருவர்க்கும் வாழ்த்துக் கூறுகிருர்கள்.

நூலினைக் கேட்டு மகிழ்ந்த அக் குரு நமசிவாயர், **ஆனந்த சோதியாய்த்** தோன்றி அகில மெல்லாம் உய்விக்க வந்த உத்தம *சிகாமணியைப்* பாராட்டினுர். தன் திரு மடத்திற்கு அழைத்துச் சென்ருர். திருவருணையில் எழுந்-தருளியிருந்த நம் குருநாதரைத் தொழுது உய்ந்தோர் கணக்

கிலர். அவர்களது அருள் வாக்குகளைக் கேட்டும், அழகார் திருமேனியைத் தரிசித்தும் யான் எனது எனும் செறுக்கு அறுத்துப் பரிபக்குவ நிலையடைந்தார் பலர்.

திருவருணைக் குருநாதர், தக்கார் ஒருவரைத் தம் மடாலய குரவராக்கும் நோக்குடன் ஞானியாரிடம் விடுத்தார். அவர்க்கு நிட்டைக்கு உபாய முதலிய கற்பித்து உரிய காலத்தே உரிய மந்திரத்தினை உபதேசித் தருளினார்கள். அவரே அம் மடத்தின் ஒன்பதாங் குருநாதராயினர். இன்றளவும் அம் மடாலயத்தில் அவ்வுபதேசமே வழக்கில் உள்ளது. இன்றும் திருக் கோவலூராதீன மடாலயத்தைச் சேர்ந்த சிவ தீட்சை பெற்றவர் யாவரேயாயினும் குகையினுட் சென்று குகை நமசிவாயரைப் பூசிக்கலாம்.

சில நாள் நம் இளந்துறவியார் திருவண்ணமலையில் எழுந்தருளி யிருந்தார்கள். அப்போது ஆரும் குரு நமசிவாயர் இவர்களுக்கு "ஆறுமுக மெய்ஞ்ஞான சிவாசாரிய சுவாமி" என்று திருநாமஞ் சூட்டி யருளினர். எனினும் அவரே முன்னோர்கால் சிறப்பால் அழைத்த 'ஞானியார்' என்ற பெயரே மிகுதியாக வழங்குவதாயிற்று.

திருக் கோவலூரையும், வீரட்ட நாதரையும் துதிக்கத் திருவுளங்கொண்ட ஞானியார் கோவல் மாநகர் குறுகினர். முன் குறிப்பிட்டவாறு பிநாகினி நீராட்டு, சிவ பூசை, சிவாலய தரிசனம் முதலிய மேற்கொண்டு தன்னை நாடிவந்த அன்பர் பலர்க்கும் திருவருள் பாலித்துக்கொண்டு எழுந்தருளி யிருந்தார்கள். இட்ட லிங்க பூசனையே யன்றி யாவரும் தரிசித்து நலமடையும் வண்ணம் தாம் இருந்த இடத்திலே 'ஞான மூர்த்தி' என்ற திரு நாமத்துடன் ஓர் கணபதியின் திருவுருவத்தைப் பிரதிட்டை செய்து பூசித்து வந்தார்கள். எங்கெங்கும் உள்ள அன்பர் பலர் வந்து அடிகளாரை வணங்கித் தம் விருப்பங்களைப் பெற்று மீள்வர். அங்கங் கெல்லாம் அடிகளாரை அழைப்பர். அவர்கள் எங்கெங்குந் திரிந்து யாவர் விருப்பத்தையும் நிறைவேற்றி வைத்தார்கள்,

" ...கண்ணுதலைப் பூசித்துக் காசினியோர்க் கின்னமுதாம்
பெண்ணை நதிசூழும் பெருமைத்தாய் — நண்ணுஞ்
செருக்கோவு மெய்யடியார் சிந்தித் திறைஞ்சுந்
திருக்கோவ லூரவன்வாழ் சீரூர் — உரைக்குமிடத்
தின்னம் பலபதியுண் டெங்கோ னிடமவைதான்
(1) பொன்னம் (2) பலமருணைப் பூதரமோ — டுன்னரிய
(3) காளத்தி (4) காஞ்சி (5) கமலா லயமண்ட
கோளத் (6) துயருமுது குன்றமென — நீளுந்
(7) திருப்பா திரிப்புலியூர் (8) சீர்வெண்ணெய் நல்லூ
ருரத்தோ (9) ரறையணிநல் லூரும் — விருப்பாகச்
சேயாறு வெள்ளாற்றந் (10) தீரவோத்தூ (11) ராடுதுறை
(12) தூயசிவ குன்றமுதற் றெல்பதிக — ணேயமுறு
மிப்பதிகட் கெல்லா மினிதாயிப் போதுறையுஞ்
செப்பரிய (13) கோவல் திருப்பதி........"

என இவ்வடிகளாரின் மாணவராய அவிநாசி நாதர் என்னும் மூதறிஞர் இவர்கள் மீதியற்றிய நெஞ்சுவிடு தூதிற் கூறியிருத்தலால், குருநாதர் பல இடங்கட்குஞ் சென்று மக்களிற் பலரையும் நல்வழிப் படுத்தினர்கள் என்பது தெளிவு.

இவற்றுள் சில இடங்களில்தான் இன்றும் இம் மடாலயத்திற் குரித்தான மடங்கள் உண்டு. பிற விடங்களீல் இருந்தவை பிறர் வயப்பட்டிருக்கலாம்.

1. திரு முது குன்றத்தில் ஓர் மடாலயம் உண்டு. அங்கு ஞான தண்டபாணி வீற்றிருந்தருள்கிருர். அது முன்ளிற் கல்விக் கூடமாயிருந்திருக்க வேண்டும். கல்வி மடம் என வழங்கிய பெயர், காலப் போக்கில் மருவிக் 'கல் மடம்' என இப்போது வழங்கப் பெறுகிறது.

2. திருப் பாதிரிப்புலியூர்ச் சந்நிதி வீதியில் உள்ள ஸ்ரீமத் ஞானியார் மடாலயமே இரண்டாவது சந்நிதான முதலாக எழுந்தருளி ஞானச் செங்கோல் ஓச்சும் இட

(5) கமலாலயம் – திருவாரூர். (6) முதுகுன்றம். விருத்தாசலம்
(10) சேயாறுதீரத்தின் திருவோத்தூர் (வடாற்காடு மாவட்டத்தி லுள்ளது). (11) வெள்ளாற்றுத் தீரத்தின் ஆடுதுறை.

மாகும். அதுவே பிற யாவற்றினும் சற்றுப் பெரிதாகவும் அமைந்திருப்பது.

3. சிவ குன்றம் என்பது தென்ஞற்காடு மாவட்டச் செஞ்சியை அடுத்துள்ள அநந்தபுரத்திற் கணித்தே உளது. மலையிலேயே கோயில் முதலிய அமைந்துள. சுனேகள் இரண்டும், தெய்வத் திருமேனிகள் பலவற்ருேடு திருக்-கோயிலும், குகை, ஒடுக்கம் முதலிய யாவும் நிறைந்தது. போக்கு வரவு வசதிகள் யாவும் நிறைந்த இந்நாளிலும் அங்கு செல்வது கடினம். தேங்காய், பழம் முதலிய வேண்டுமெனினும் அநந்த புரத்திலிருந்துதான் வரவேண்டும். இடைப்பட்ட சுமார் 3 கல் தொலேவு நடந்தே கழிக்க வேண்டும். அத்தகைய இடத்திலே நம் ஞானியார் பதினுருண்டுகள் தங்கித் தவம் புரிந்தார்களென அறிகிருேம். அங்கேயுள்ள குகையில் அவர்கள் பூசித்த முருகன் திருவுருவ முதலிய இன்றும் பூசிக்கப் பெறுகின்றன. அவர்கள் தவம் புரிந்த குகையினுள் நாம் செல்வதாயின் சுமார் 20 கஜ தூரம் தவழ்ந்தே செல்ல வேண்டும். அப்பக்கத்து உள்ள-வர்கள் எண்ணிய நலங்கள் முடித்துக் கொள்ளவும், நோய் நீக்கம் பெறவும், பேய்த்தொடர்பு முதலிய அறவும் ஆண்டு உள்ள சுனேயில் நீராடி, ஒரே மைல் சுற்றளவுள்ள அத் தனி மலேயை வலம் வந்து வேண்டுதல் செய்துகொண்டும் செலுத்திக் கொண்டும் வருகிருர்கள்.

அங்கு உள்ளோர் ஞானியாரடிகள் அங்குத் தவமேற் கொண்ட காலத்தில் கற்ருழையும், புற்று மண் நீரும் அருந்-தியே தவமிருந்ததாகச் செவிவழிச் செய்தியாகக் கூறுகின்றனர். அதற்கேற்பவே சதுர்லிங்க சதகோத்தர தசகத்தின் 15, 16 ஆம் பாடல்களும் அமைந்துள. அவை முன் எடுத்துக் காட்டப்பட்டன.

4. ஆரணி திருமலே சமுத்திரம் என்னும் இடத்திலும் அடிகளார் சென்று தங்கியிருந்து மக்கள் பலரை நன்னெறிப் படுத்தியதாகவும் அறியக் கிடக்கிறது. அவர்கள் எழுந்-தருளியிருந்த காரணத்தாலேயே, பின்னுளில் இரண்டா முறைத் தேசிகர் காலத்திலே (கலி 4900 ஆம் ஆண்டு

சிவ குன்றம். செஞ்சி தாலுக்கா அனந்தபுரத்தையடுத்துள்ளது.



குன்றமும் குகையின் வெளித் தோற்றமும்.

சித்தார்த்தி ஆண்டில் முதற் குரவரின் மாணவராகிய அருணாசல சுவாமிகளால் சென்னைப் பெரிய பணம் 1610-க்குக் காவல் நல்லதம்பி நாயக்கர், தென்னவராய நாயக்கர் என்பவர்களிடமிருந்து பாதி கிரயத்திற்கும் பாதி தானமுமாகவும் பெற்ற இடத்திலே இன்றும் ஓர் முருகன் ஆலயம் இலங்குகிறது. அது இப்போதும் இவ்வாதீனத்தைச் சார்ந்ததேயாகும். சிறப்பும் பூசனையும் செவ்வனே நடைபெறுகின்றன. ஆங்குறையும் மக்கள் அம் முருக வேளை வழிபட்டு நினைத்தவற்றை நினைத்தவாறே பெறுகின்றனர். கடந்த குரோதியாண்டு வைகாசி 18 ஆம் நாள் (31-5-1964) ஞாயிற்றுக்கிழமை ஜீரணோத்தாரண அஷ்டபந்தன மகா கும்பாடேகம் சிறப்புற நடைபெற்றது.

ஞானியார் சுவாமிகள் ‘ தாம் பெற்ற இன்பம் பெறுக இவ் வையகம் ‘ என எண்ணிப் பற்பல காலமாகப் பெற்ற உபதேச மந்திரங்களை அவற்றின் முறை, அதிகாரிகள், பயன் முதலிய வற்றுடன் தாம் இயற்றிய நிட்டானுபூதி சார நூலில் 47 முதல் 56 வரை உள்ள செய்யுட்களிலே விரிவாகக் கூறுகிறார்கள். அந் நூற்குச் சாரம், பொதியை நாயகர் சபை முதற்பட்டம் முத்துகிருஷ்ண பிரம்ம சுவாமிகள் உரை எழுதியிருக்கிறார்கள். அவ்வுரை வடலூர்-சோதி. இராமலிங்க சுவாமிகள் முதல் யாவராலும் அந்நாளிற் போற்றப் பெற்றுளது. இராமலிங்க சுவாமிகளும் பிறரும் அவ்வுரைக்குச் சாற்றுகவி அளித்துள்ளார்கள். முன் குறிப்பிட்ட 47 முதல் 56 வரை உள்ள பாடல்களின் உரையைப் படித்து உணர்தல் நற் பேறடைய முயல்வோர் தலையாய கடன்.

திருக்கோவலூரிலும் பிற இடங்களிலுமிருந்து அன்பர் பலர் ஞானியாரைக் காணவும், அவர்களருளும் திருநீற்றினைப் பெறவும், அவற்றால் நோய்நீக்கம், பொருளாக்கம் முதலிய பெறவும் வருவர். இவ்விளங் குருநாதர் யாவர்க்கும் அருள் பாலிப்பர். அவ்வப்போது அன்பர் வேண்டுகோள்களை விருப்புடன் ஏற்றுப் பல இடங்கட்கும் எழுந்தருள்வதும் உண்டு.

சென்ற சென்ற இடங்களிலெல்லாம் திருவருள் வயமாகிச் செப்பரிய அநுபூதி நிலையில் அமர்ந்து விடுவார்கள்,

" ஒருநாள் இருநாளும் லிங்கமே
ஒருவார மேற்றெகை லிங்கமே
அருள்வச மாயருள் லிங்கமே
அகிலங் காணுதருள் லிங்கமே

(சதுர்லிங்க. 83)

என்று அடிகளார் வேண்டுவதால் பல நாள்கள் ஒருங்கே நிட்டை கூட விரும்பி யமர்ந்தபோது,

" உடுக்கத் துகில் வேணு நீள்பசி
யவிக்கக் கனபானம் வேணுநல்
ஒளிக்குப் புனலாடை வேணுமெய்–யுறுநோயை
ஒழிக்கப் பரிகாரம் வேணும் "

(திருப்புகழ் – கதிர்காமம்)

எனக் கருதும் பலரும் வந்து இரக்கத் தொடங்குவர் என்பதால் ஒரு மவுன பரம சுக சுத்தப் பெரும் பதத்தைச் சிந்திக்க இயலாதாகி விடுவதுண்டு. ஆகவே இவ்வுலகவர் கண்களுக்குப் புலனுகா வண்ணம் மறைந்திருந்து தவமாற்ற வேண்டி அங்ஙனமே சாதனை பெற்றிருந்தார்கள்.

" நின்னை ஆ லிங்கனம் லிங்கமே
நின்னில் அயிக்கியம் லிங்கமே
நின்னரு ளாற்பெற லிங்கமே
நீயே யருளினை லிங்கமே "

(சதுர்லிங்க. 101)

என்றருளி யிருப்பதால் அடிகளார் பலகால் முயன்ற தவப்பேறு அவர்களுக்குச் சிவனோடு ஐக்கிய மாந்தன்மையும் அவனை ஆலிங்கனம் செய்து மகிழும் பேறும் இவ்வுலகவர் கண்ணுக்குப் புலனுகாமல் மறைந்து தவம் ஆற்றும் தன்மையும் எய்தியிருந்தன என்பதை யறியலாம்.

ஒருகால் அடிகளார்க்குத் திருவண்ணமலை குகை நமசிவாய தேவாரம் முதற் குருநாதரையே காணும் எண்ணம் மேலோங்கியது. உறுதியுடன் தியான மேற்கொண்டு நிட்டையில் அமர்ந்தார்கள். அப்போது அவர் முன்னே அக் குருநாதரும் தோன்றித் திருவருள் பாலித்தார்கள். இதனுற் பரவசம் எய்திய ஞானியார்,

" திருவண்ணு மலைக்குகை லிங்கமே
தேசிக ருஞ்சிட்டர் லிங்மே
உருவாகக் காட்சியை லிங்கமே
ஓர்தினம் காட்டிய லிங்கமே "

(சதுர்லிங்க 102)

என்று அருளியுள்ளார்கள்.

ஆகவே ஞானியாரடிகள் இகவுலகிலே நடமாடுந் தெய்வமாகவே தம் எண்ணங்களை முற்றுவித்துக் கொண்டும் தன்னை நாடி வந்தோர்க்கு நலங்கள் பல விளைவித்துக் கொண்டும் எழுந்தருளி யிருந்தார்கள் என்பது தெளிவு.

இறைவன் திருவருளை முற்றிலும் பெற்றிருந்த ஞானியார் சுவாமிகள், இறைவனருளிய நிட்டானுபூதியின் வழியிலே நிட்டை கூடியும், பாவனாதீத ஒரு வார்த்தையினைக் கடைப் பிடித்தும், இட்டலிங்க பூசனை முதலிய யாவற்றையும் செவ்வனே இயற்றி வந்தார்கள். எனினும் தான் உபதேசம் பெற்ற திரு வைந்தெழுத்துகள் ஒன்றினும் மற்றையது சிறப் பெய்தி நலங்களைப் பயக்குமாறு போல, இறுதியதாகிய மகா காரண பஞ்சாக்கரத்தினும் மேம்பட்டதொரு மந்திரம் உளதோ எனும் ஐயத்தோடு இறைவனைத் தான் நிட்டை யிலே காணும்போது வினவுவார்கள். சில நாட்கள் வினவை எழுப்பி விடை கிடைக்கக் காத்திருந்தார்கள். இங்ஙன மாகச் சில காலம் கழியலாயிற்று.

முருகக் கடவுளின் உபதேசம்: " சீவன் சிவச் சொரூபம் எனதேறி, நான் என்பதற்று, உயிரொடு ஊன் என்பதற்று, வெளி நாதம் பரப்பிரம ஒளிமீதே, ஞானம் சுரப்ப மகிழ் ஆனந்த சித்தியோடே நாளும் களி"த்து எழுந் தருளியிருந்த ஞானியார் சுவாமிகள், தன் குறையினை ஒரு நாள் உருக்கத்துடன் விண்ணப்பித்துக் கொண்டார்கள்.

" தகப்பன்சாமி எனவரு பெருமாள், "யார் வேண்டி-னுலும் கேட்ட பொருள் ஈயும் தியாகாங்க சீல "ளுக எதிர் தோன்றினன்,

" ... ... ... ... ... ... ... ... ... ...

எழுதரிய அறிமுகமும் மணிநுதலும் வயிரமிடை
இட்டுச் சமைந்தசெஞ் சுட்டிக் கலன்களுந் –
– துங்கநீள்ப

னிருகருணை விழிமலரும் இலகுபதி னிருகுழையும்
ரத்நக் குதம்பையும் பத்மக் கரங்களும்–
– செம்பொனூலும்,

மொழிபுகழும் உடைமணியும் அரைவடமு மடியிணையும்
முத்தச் சதங்கையும் சித்ரச் சிகண்டியும் –
– செங்கைவேலும்

முழுதும் அழகிய குமர " னுகக் காட்சி நல்கினுன்.

'கண்டார் பிறிதொன்றுங் காணுர்' என்ற நிலையினைக் குருமணி அடைந்தார்கள். கண்பெற்ற பேருகக் கண்டு, நாப்பெற்ற பேருகத் துதி செய்தார்கள். தலைபெற்ற பேருக அவன் திருமல ரடிகளைச் சூடினுர்கள். முருகன் ஆசி மொழிந்தான். ஞானியார், மீண்டும் அவனடி தொழுது, *" மஹாப்ரணவ சிவ சம்வாத ரூபனே! ஏழையேனுக்கு ஒரு ஐயம் உளது. அதனைத் தீர்த் தருள வேண்டும் " என வேண்டினுர்கள்.

" அய்யம் உளத்துள லிங்கமே
அறைகெனத் தேவரீர் லிங்கமே
செய்யுங் கருணையே லிங்கமே
தேவரைக் காண்கருள் லிங்கமே "

என்ற திருவாக்கு ஐயங் கேட்டமையை உணர்த்தும்.

வேண்டலும் சிவகுரு நாதனுகிய குமரகுரு பிரண-வத்தை உபதேசித்து அதன் உண்மையையும் உணர்த்தி 'எல்லா மந்திரங்கள் மட்டு மன்று; உலகமும் அதைத் தோற்றுவித்துக் காத்து அழித்து, மறைத்து அருளி ஐந்-தொழில் நடாத்தும் தனிப் பரம்பொருளும் பிரணவ உருவமே

---

*இம் மடாலய உபாசனு மூர்த்தியாம் முருகனுக்கு அமைந்த அஷ்டோத்தர சத நாமாவளியில் 46 ஆவது திருநாமம்.

என்பதை ஐயமற உபதேசித் தருளினன். பக்குவியின் நிலைமை இன்னதெனவும் தெரிவித்தருளினன். உபதேசித்-தமை மட்டுமன்று தன் திருவடிகளை ஐந்து முறை ஞானியார் திரு முடிமேற் சூட்டினன்.

"பிரவணத் திறையுண்மை லிங்கமே
பேசா திதுவெனும் லிங்கமே
முருகர் அருள்இதை லிங்கமே
மோனந்தம் பெற்றநீ லிங்கமே"

"என்றுரைத் தன்பொடும் லிங்கமே
இணையடிக் கமலத்தை லிங்கமே
புன்றலை மேல்வைத்து லிங்கமே
போற்றிஐம் முறைமுறை லிங்கமே"

"பணிந்தன் பொடுநிற்க லிங்கமே
பார்த்தரு ளாற்குகர் லிங்கமே
குணம்பரு வற்கிவை லிங்கமே
கூர்ந்தருள் என்றமேல் லிங்கமே"

(சதுர்லிங்க. 90, 92, 93)

என்னும் இத் திருவாக்குகள் மேற் கூறிய நிகழ்ச்சிகளைப் புலப்படுத்துகின்றன.

மாவலி பால் மூவடி (படி) கேட்டு, அன்று மூதண்ட கூடம் முகடு முட்டச் சேவடி நீட்டும் பெருமான் மருகன் தன் சிற்றடி, தன் தலைமீது ஐந்து முறை சூட்டப்பட்டவுடன் சுவாமிகளது ஆனந்தம் கூறுெணாத தாயிற்று. அவர்களது ஐயமகற்றிய ஐயனை மன, மொழி, மெய்களாற் போற்றத் தொடங்கினார்கள். ஏட்டிலடங்காத அவன் திருநாமங்களைக் கூறிப் பரவினார்கள்.

"தனிப் பரம் பொருளே! ஆறு சமயக் கடவுளரும் வேறு வேறென்னக் கொண்டு இடர்ப்படுவோர் எண்ணரிய பரம்பொருள் ஒன்றே எனத் துணியவோ நின் முகங்கள் ஆறாயின? அடியார் நினைத்த போதெல்லாம் எந்தத் திசையும் எதிர்தோன்ற வந்து இடுக்கணெல்லாம் பொடிபடுத்தி எவ்வரமும் தந்து" அருள்வதற்காகவே அவை திசைக்கு

ஒன்ருக நோக்குகின்றனவோ? எனத் திருமுன்னர் விண்ணப்பித்துத் தொழவும், "அன்பனே! மெய்யன்புடன் நாளும் நம்மை வழிபட்டு உய்க; அவ்வாறே வழிபடுவோர் யாவர்க்கும் நலம் பலவும் தந்தருள்வோம்" எனக் கூறி மறைந்தருளினுன்.

அன்றே அறுமுகத் தொருவனை உள்ளத்து அடைத்துத் தியானத்தினை மேற் கொண்டார்கள். தான் கண்ட காட்சி என்றும் நீங்காது உள்ளொளியை எழுப்ப எழுப்ப அடிகளாரது ஆனந்தம் அளவிடற் கரிதாயிற்று. தான் கண்ட திருவுருவத்தைக் காணத்தக்க பக்குவிகட்குக் காட்டியருளினுர்கள். தான் கேட்ட திருமந்திரத்தினை அவர்களும் செபிக்க உபதேசித் தருளினுர்கள்.

மண்ணகத் தெய்வமாகவே மானிடருள் எழுந்தருளி யிருந்த நம் குருமணியைப் பல பக்குவிகள் வந்தடைந்தார்கள். தம் ஐயங்களைப் போக்கிக் கொண்டார்கள். சாதனை கிடைக்கப்பெற்று மன ஒருமைப்பாடு எய்தினுர்கள். திருக்கோவலூரே ஓர் கயிலையாயிற்று. யாண்டும் தெய்வ கணங்கள்! சிவ கணங்கள்! நீற்ருெளிர் பேரொளியன்றி வேறு ஒளி ஆங்குத் தேவையில்லை. குக நாம ஒலி யல்லாது யாண்டும் வேருெலி எழுவதில்லை. கிள்ளைகளும் பூவைகளும் அவ் வொலியினையே எழுப்பும். குகனடியவரையன்றி எவரையும் எங்கும் காண்டலறிதாயிற்று.

கந்த மாதன மெனவே கவின்பெற விளங்கிய திருக் கோவலூரினை நோக்கி நாற்றிசைகளிலிருந்தும் நம்பனடியவர் வந்தனர். ஊரவர் யாவரும் வருவோர்க் கெல்லாம் உணவு முதலிய அளித்துப் பொருள் பெற்ற பேறு பெற்றனர். ஆறுமுக குருவைத் தம் குருவாகக் கொண்டவர் அளவிடற் கரியராயினர். சீவன் முத்தராகிச் சிறப்பெய்தியவர் பலர். குருநாதருக்கு இடையருத் தொழும்பு பூண்டு ஒழுகியவர் சிலர்.

சுவாமிகள், தம்மை அண்டிவருந் தொண்டருள் தொடக்க நிலையான சரியை மேற்கொண்டவர்களும் உய்யும்

வண்ணம் முன் பிரதிட்டை செய்து பூசித்துவந்த ‘ஞான மூர்த்தியாம் பிள்ளையாருடன், ‘ஞானஸ்கந்த’னையும் எழுந்தருளச் செய்து பூசித்து வந்தார்கள். அத்திருவுருவங்கள் இரண்டும் திருக் கோவலூரில் இன்றும் பூசிக்கப்பெற்று வருகின்றன.

குருநாதனார், தமது சிறு பருவ முதற்கொண்டு பெற்ற உபதேசங்கள் யாவும், இரண்டாமுறை ஸ்ரீமத் சிவசண்முக மெய்ஞ்ஞான சிவாசாரிய சுவாமிகள் இயற்றிய தனியனில் மிக நன்ருகக் கூறப்பட்டுள.

அது வருமாறு :

“ தூலவை வனமு மிலிங்கமுங் குகையோன்
சூக்கும முமையுரு வாகி
மேலதா மிறைகா ரணமுமா ராத்யன்
மிகுமகா காரணம் வீரன்
சீலமாம் ஞானே பாயசா தனையைத்
தெரித்தவீ ரட்டர்செந் நெறியின்
மேலிலா துண்மை யீதென மொழிந்த
வேலவ னிணையடி பணிவாம். ”

மாணவர் :– சிவப் பேரன்பால் அடிகளார்பால் தொண்டு பூண்டு ஒழுகி, மாணவராயவர்களுட் குறிப்பிடத் தக்கவராய் அறியக் கூடியவர், (1) வேதாந்த சாரத் திரட்டு முதலிய நூல்கள் செய்த பூங்கோட்டு *அம்பலவாண சுவாமிகள்*, (2) *சம்பூரணப் பிரகாச அடிகள்*, (3) நெஞ்சுவிடு தூது, சிகாமணிப் பதிகம், அபிடேக மாலை, அட்டகம், மங்களம் (யாவும் தம் குருநாதர் ஸ்ரீலஸ்ரீ ஆறுமுக மெய்ஞ்ஞான சுவாமிகள்மீதே இயற்றப் பெற்றவை; இவை இம் மடாலய ஐந்தாமுறை ஸ்ரீலஸ்ரீ சிவசண்முக மெய்ஞ்ஞான சிவாசாரிய சுவாமிகளால் பதிப்பிக்கப்பட்டன) முதலிய இயற்றிய *அவிநாசி நாத சுவாமிகள்*, (4) விண்ணுறு கயிலைப் பதிகம் செய்த *மதுரைச் சட்டை முனிகள்*, (5) இம் மடாலய இரண்டாமுறைச் சுவாமிகளாக எழுந்தருளியிருந்த ஸ்ரீலஸ்ரீ சிவ சண்முக மெய்ஞ்ஞான சிவாசாரிய சுவாமிகள்,

(6) அருணுசல சுவாமிகள் என்னும் அண்ணுமலை சுவாமிகள் என்போராவர்.

சீடராயினுர் பலருள் இன்று அறியத் தக்கார் மேற் குறிப்பிட்ட அறுவரே. இவருள் இரண்டா முறைத் தலைவ-ராக எழுந்தருளியிருந்த சுவாமிகளைக் குறிப்பிட்டு, ஸ்ரீலஸ்ரீ ஞானியார் சுவாமிகள் வரலாருகப் புலவர் புராணம் பாடி-யருளிய தவத்திரு தண்டபாணி சுவாமிகள் அப் புராணத்-தின் முப்பத்தொன்பதாவது சருக்கமாக 'ஆறுமுக சுவாமி சருக்கம்' என்ற பெயரிேைடு 18 பாடல்கள் அருளியிருக்கி ருர்கள். (அவை பிற்சேர்க்கையாகத் தரப்பட்டுள) அவர் கூறுவதாவது :-

ஸ்ரீலஸ்ரீ ஞானியார் சுவாமிகட்கு அணுக்கத் தொண்ட ராய்ச் சிறந்த குருபக்தி பூண்டு குருவே தெய்வமென ஒழு-கியவர் வீரபத்திரர் என்பார். சுவாமிகள் இக வுலகத்தில் திருமேனி தாங்கி எழுந்தருளியிருந்த காலத்திலேயே அவ-ருக்கு முடிவு காலம் நெருங்கிவிட்டது. அதனை யறிந்த வீரபத்திரர், தன் குரு நாதரின் முகநோக்கி அழுது அரற்றி-ஞர். குருநாதர் காரணங் கேட்டபோது, இன்னும் சுவாமி கட்குப் பணி செய்திருக்க விருப்ப மேலோங்கியுளதாகவும், அவ் வேட்கை தணியாது தனக்கு முடிவுகாலம் நெருங்குத-லால் தனக்கு அருள் பாலிக்கும்படியும் வேண்டினுர். குரு நாதர் ஒரே கணத்தில் அப் பரிசுத்த ஆவியைத் தனது போத வெளியிற் கலக்குமாறு திருவருள் செய்தார்கள்.

சில நாள் சென்றபின், தம் விருப்பங்களை நிறைவேற்றிக் கொள்ள அடிகளாரை யடையும் பலர்போலப் புனிதராய ஒரு தம்பதியர் சுவாமிகளை அணுகினர். தமக்கு மகப்பே-றில்லாக் குறை பெரிதா யிருக்கிறதென விண்ணப்பித்தனர். தக்கார் அவரென அறிந்த அடிகளார், அவர்களை நோக்கி, "உமக்கு இரு ஆண் மகவு உதித்தால் எமக்கே உரிமை யுடன் ஒரு பிள்ளையை அளித்துவிட வேண்டும்." என அருள, அவர்கள் அங்ஙனமே இணங்கினுர்கள். அவர்கட்-குத் திருநீறு அளித்து, ஆசிமொழிந்து அனுப்பி விட்டார்கள், பத்தாம் மாதத்திலே அவர்கட்கு ஓர் ஆண் மகவு பிறந்தது.

மேலும் மூன்ருண்டுகள் கடந்து இரண்டாவது ஆண் மகவு உதித்தது. முனிவரது திருவருட் கருணையை வியந்த அத்தம்பதியர் முதற் குழந்தையை அழைத்துச்சென்று சுவாமிகளின் திருவடிகட்கே உரிமையாக்கி விட்டனர். சுவாமிகள் அன்று முதல் அக் குழவியைத் தம் நேர்ப் பார்வையிலே வளர்த்தார்கள். தாம் உணவு கொள்ளும்போது உடன் அருந்தினுர்கள். கலைகள் பலவும் கற்பித்தார்கள். தனக்குத் தொழும்பு பூண்ட அவருக்குச் 'சண்முகர்' எனத் திருநாமஞ் சூட்டிச் சிவலிங்க தாரணமும் உபதேசமும் அருளினுர்கள். தியான முறை, அட்டாங்க யோகமுறை, நிட்டை முறைகளையுங் கற்பித் தருளினுர்கள். தன் சீடருள் தலைமையாம் தன்மை வருவித்து வாழ்த்தி யருளினுர்கள். பின்னுளில் அவரையே தம் பின் தலைவர்களாய் அமர்த்தி யருளினுர்கள் என்பதாம்.

(2) ஸ்ரீலஸ்ரீ சுவாமிகளது சிறப்பு நாற்றிசையும் பரவலாயிற்று. கொங்கு நாட்டிலே அந்தியூரில் தோன்றிய அவிநாசி நாதர் சுவாமிகட்குத் தொண்டராயமைந்தவர். அவரது வரலாற்றினை இம் மடாலய ஐந்தாமுறைச் சுவாமிகள் பதிப்பித்த அவிநாசி நாதர் தோத்திரக் கொத்தில் குறிப்பிட்டுள்ளார்கள். அவை பழைய சுவடிகளிற் காணப் பெற்றவாறே அவர்களால் குறிப்பிடப் பெற்றன. அவ்வரலாருவது :-

கொங்குநாட்டிலே அந்தியூரில் அவதரித்து அவிநாசி நாதர் என்னும் பிள்ளைத் திருநாமம் பெற்றவர் ஒருவர் இருந்தார். அவர் மிகச் சிறு பருவத்திலேயே கற்பன கற்றுங் கேட்டும் ஒழுக்கத்துடன் வாழ்ந்தார். சித்தாந்த சாத்திர முதலிய வற்றையும் நன்கு பயின்றிருந்தார். துறவு நிலையை மேற்கொண்டு தாம் பிரவேணியில் அன்பர்கள் அமைத்த ஒடுக்கத்தில் தவமேற்கொள்ளும் முயற்சியில் ஈடுபட்டார். ஒருகால் "குனித்த புருவமும் கொவ்வைச் செவ்வாயிற் குமிண் சிரிப்பும், பனித்த சடையும், பவளம்போல் மேனியிற் பால் வெண்ணீறும், இனித்தமுடைய எடுத்த பொற் பாதமும் காணப்பெறும் விருப்பத்துடன் தில்லையம்பதி யணைந்

தார். நாடோறும் நடத்தரசனை வழிபட்டு வருவார். தமக்கு ஞானசிரியர் எந்நாள் வருவாரோ எனத் தில்லை மன்றினுள் ஆடியை உருக்கத்துடன் வேண்டுவார். அப்போது வேத புரியினின்று அங்கு வந்திருந்த சிற்றம்பலப் பத்தர் என்பவர், அவிநாசி நாதருடன் தொடர்பு கொண்டார். அவரது கல்வியறிவு முதலிய நலன்களை யறிந்தார். அவரைத் தம் ஊருக்கு அழைத்தார். இசைந்த அவிநாசி நாதரைச் சிவி-கையில் எழுந்தருளுவித்துத் தம் ஊருக்கு அழைத்துச் சென்றார். வேதபுரி அன்பர்கள் அவரைப் பாராட்டி அவர் எழுந்தருள ஓர் மடம் செய்வித்தனர். அம்மடத்தில் இருந்து கொண்டு தம்மை நாடிவரும் அன்பர்க்கு இலக்கிய, இலக்-கண, சாத்திர, தோத்திர நூல்களைப் போதித்து வந்தார். அக்காலத்தே திருக் கோவலூர் ஞானியார் சுவாமிகளது அடியவர் ஒருவர் தம்மை மறந்து பற்றறுத்துத் திருவருளிற் கலந்தருளினர். இவ்வுண்மையைத் தம் மனத்தில் தோன்றிய சில குறிப்புகளால் அவிநாசிநாதர் அறிந்தார். திருக் கோவலூர்க்குப் புறப்பட்டார். அங்கு ஞானசாரியரைத் தரிசித்தார். தன் விருப்பம் யாவற்றையும் குருநாதரிடம் விண்ணப்பித்தார். குருநாதர் அவரது பக்குவ நிலையை யறிந்தார்கள். மூவகைத் தீக்கையையும் முறையே செய்-தார்கள். ஞானோபாய சாதனையை வருவித்தார்கள். சில காலம் பயின்ற அவிநாசி நாதர் சாத்தியராயினர். ஐயம் தோன்றிய போதெல்லாம் சுவாமிகள் தம் ஞான மதலைய-ராகிய பூங்கோட்டு அம்பலவாண சுவாமிகளிடத்தும், சம்பூரணப் பிரகாச அடிகளிடத்தும் கேட்டறிந்து கொள்ளச் செய்வார்கள், அவநாசி நாதர் அறிந்து ஐயமகற்றிச் சிவாநுபூதிப் பெருஞ் செல்வராய்த் திகழ்ந்தார். தன் ஞான குரவர்மீது பல நூல்களை இயற்றினர். தன்குருநாதரைப் போலவே, சிவகுன்றம், செஞ்சி, விருத்தாசலம் முதலிய இடங்களில் தங்கிப் பல மக்கள் உய்யுமாறு செய்தார். பல நாளிருந்து இறைவனோடு இரண்டறக் கலந்தருளினர்.

இவர் இயற்றியனவாக இன்று கிடைப்பவை: நெஞ்சு விடு தூது – (காப்பு–1 நூல் 303 கண்ணிகள், வாழ்த்து 1.) சிகாமணிப் பதிகம் (நூல்–10, வாழ்த்து–1), அபிடேக மாலை

(காப்பு-1, நூல் 11), அட்டகம் (நூல்-8), மங்களம் (கீர்த்தனை-1) இவை யாவற்றையும் எம் ஐந்தாமுறை அடிகளார் அச்சிற் பதிப்பித்து அருளியுளர்.

(3) அம்பல வாண சுவாமிகள்: இவர் ஸ்ரீலஸ்ரீ ஞானியார் சுவாமிகளிடம் அட்டாங்க யோக முதலிய பயின்று சித்தி திரு எய்தியவர். ஞான நூல்கள் பலவுங் கற்று, இரண்டாமுறைச் சுவாமிகள் பயிலுங்கால் அவர்க்கு நேர்ந்த ஐயங்களையும் போக்கி யருளியவர். வேதாந்தசாரத் திரட்டு முதலிய நூல் செய்தவர்.

(4) மதுரைச் சட்டை முனிகள்: இவர்களும் ஸ்ரீலஸ்ரீ ஞானியார் சுவாமிகளைத் தன் ஞான குருவாகக் கொண்டு ஞான நூல்கள் பல கற்றுத் தெளிந்து நிட்டை பயின்று கைவரப் பெற்றவர். முன்னவர் போன்றே கல்வியறிவிற் சிறந்து சாதனை தொடங்குவோர்க்கு நேரும் ஐயங்களைப் போக்கி வந்தவர். விண்ணுறு கயிலைப் பதிக முதலிய இயற்றியவர்.

(5) அருணாசல சுவாமிகள்: இவர் சிறந்த குரு பக்தர். சுவாமிகளை அடுத்துப் பல நூல்களையும் பயின்று தன் ஞான குரவர்க்கு உடல், பொருள், ஆவி யாவும் உரிமை யாக்கியவர். சுவாமிகள் திருவுருக் கரந்தருளி அருவாய் எழுந்தருளியுள்ள இடத்திலே ஆலயம் அமைக்கப் பெரு முயற்சி எடுத்துக் கொண்டவர். தவ முதல்வராகவும், சித்த புருஷராகவும், வேண்டுவார் வேண்டுவன வற்றைத் திருவருள் செய்துகொண்டு எழுந்தருளியிருந்த சுவாமிகளது திருவருளை மக்கள் வழி வழியாக உணர்ந்து அவர்களது அருவ ஆசி பெறவும் வழி காட்டியவர். எவ்வாறெனக் காண்போமாக:

திருவருள் வயத்தால் சுவாமிகள் திருவுருக் கரந்தருளிய பின்னர், அத் தூய இடத்திலே ஓர் கோயில் அமைக்கும் உறுதி பூண்டார். திருவருளைத் துணைகொண்டு நினைவைச் செயலாக்கவும் முனைந்து விட்டார். சுவாமிகளது பெருமையை உணர்ந்த யாவரும் உடலாலும், பொருளாலும்

துணைபுரிய முன் வந்தனர். ஆலயத்திற்கு அடிப்படை திரு மதில் முதலிய ஒருவாறு அமைக்கப் பெற்றன. கல், சுண்ணும்பு முதலியவை அன்பராயினுர் உதவுகிருர்கள். ஆயின் கூலியாட்களுக்குக் கூலிப் பணம் தர இயலா நிலை ஏற்பட்டுவிட்ட்து. யாவையும் கவனித்துக் கொண்டு வந்த அருணுசல சுவாமிகள் 'ஈ யென இரத்தல் இழிந்தன்று' எனக் கருதித் திருவருளைச் சிந்தித்துக்கொண்டிருந்து விட்-டார்கள். கூலியாட்களும் தாம் மேற்கொண்ட வேலை தெய்வத்திற்கே; அத் தெய்வம் எங்ஙனமேனும் கூலி தரும் என எண்ணி நாள் தவராது தாம் மேற்கொண்ட வேலை-யைத் தொடர்ந்து ஆற்றுவர். அருணுசல சுவாமிகளும் நித்த நியமங்களை முடித்துக் கொண்டு வழக்கம்போல் வந்து வேலைகளை மேற்பார்வை யிடுவர். 'நாள் சில கடந்தன. கூலி யாட்களுள் ஒருவன் மட்டும் ஒரு நாள் "சுவாமிகள் கூலி தராமல் நாம் மனைவி மக்களுடன் எவ்வாறு காலந்-தள்ள இயலும்?" எனத் துடுக்காகச் சில மொழி பகர்ந்தான். அதைக் கேட்ட அடியவர், "இனி உங்களுக்குக் கூலி பாக்கியைத் தீர்க்காமல் நான் உணவு கொள்ள மாட்டேன்" என்று சூள் உரைத்து, அன்று முதல் நீராடிப் பூசை முடித்-துப் பெண்ணையாற்று நீர் அருந்தி உபவாசம் தொடங்கி விட்டார். இரண்டு மூன்று நாள்கள் கடந்தன. ஓர் இரவில் குருநாதராம் ஞானியார் சுவாமிகள் கனவில் எழுந்தருளி, அன்பனே! தெற்கு நோக்கிச் செல்க. உன்னை எதிர் கொண்டு அழைத்துச் செல்லும் அன்பர்க்குத் திருவருளைத் துதித்து. நீறளித்து, அவருக்குற்ற உடல் நோயைத் தீர்க்க, வேண்டிய பொருள் கிடைக்கும். அதுகொண்டு திருப்பணி நிறை வேற்றுக." எனக் கட்டளையிட்டருளினுர்கள். உடனே விழித்து எழுந்து நீராடி மிக்க அதி காலையிலே குரு வாணையைச் சிரமேல் தாங்கித் தெற்கு நோக்கி வழிக்கொண் டார். நடை வழியே எனினும் தான் உரைத்த சூளுரை கடவாமல் உண்ணு நோம்பினைக் கடைப் பிடித்தார். திருமுது குன்றம் நெருங்குங்கால் ஆங்கு உறைந்த முருக-னடியார் ஒருவர் எதிர்வந்து அடிவீழ்ந்து வணங்கினுர். தான் பல காலமாகச் சூலை நோயால் பிணிப்புண்டு, மணி,

மந்திர, ஔஷதங்களாலும் தீராமையால் பழநி யுறையும் பன்னிருகரத்தனை யன்றி வேறெவராலும் தீராதெனும் உறுதி-யுடன், அவன் திருவடி நீங்காச் சிந்தையோடு "இந்நோய் நீங்கினால் உன் திருவடிக்கே யுரிமையாக்குவேன்" என்று கூறிப் பொன் முடிப்பொன்று அமைத்து அதனையே பழநி யாண்டவன் என்று எண்ணி வழிபட்டு வருவதாகவும், முன்-னாளிரவில் பழநியாண்டவனே அண்ணாமலையார் உருத்-தாங்கி வந்து, "அன்பனே! இவ்வுருவத்துடன் வடக்கே யிருந்து நானை அடியவர் ஒருவரை வரச்செய்தேம். அவரை உபசரித்து அவர் திருவடி நீரருந்தி அவர் கைத் திருநீறு பெறுக; உடனே நோய் நீங்கும். நீ எமெக்கெனக் கட்டி வைத்திருக்கும் பொன்னை அவரிடமே சேர்க்குக. அவர் மேற்கொண்டுள்ள தூய திருப்பணி நம் சார்பிற் செய்யப் படுவதே, அதற்கு ஆகும்" என்றருளிய தாகவும், அவ்-வாறே தான் வந்ததாகவும் விண்ணப்பித்துக் குறையிரந்தார்.

தன் கனவிற் குருநாதன் எழுந்தருளித் திருவருள் பாலித் தமையும் எதிர் தொழும் அன்பர் உரைத்தனவும் பொருந்தி யிருக்க அருணசல சுவாமிகள் அவருடன் சென்றார். பூசனை களை ஏற்றார். பழநியாண்டவனின் திரு வருளையும், அவனின் வேறல்லாத தன் குரு நாதராம் ஞானியாரருளையும் சிந்தித்துத் திருநீறளித்தார். அன்பரது நோய் சற்றுத் தணிந்தது. அவ்வன்பர் உணவு கொள்ளுமாறு வேண்டி-னார். அண்ணாமலை சுவாமிகள் தன் சூளுரை பற்றிக் குறிப் பிட்டார். அவ்வன்பர், "இத்தகைய தனக்கென வாழாப் பிறர்க்குரியாளரும் குருவடி நீங்காக் குணத்துப் பெரியோர் களும் உள்ளமையாலன்றோ இவ்வுலக இல்லற நெறியாளர் இனிது வாழ இயல்கின்றது?" என நினைந்து தானும் திருக் கோவலூர்க்கு வந்து தன் உடல் நோய் முற்றும் தீர்த்து ஆண்ட குருவினைப் பரவித் தன் பவ நோயையும் தீர்த்தருளு-மாறு வேண்டிக் கோயில் திருப்பணியை முற்றுவித்து, அக் கோயிற் பூசனைக்காகச் சில நிலமும் வாங்கி விடுத்துச் சென்றார்.

அண்ணாமலை சுவாமிகள் என வழங்கப் பெறும் அருணா சல சுவாமிகள் தன் குருநாதர் ஆலய பூசனையை இயற்றிக்

கொண்டும், ஒவ்வொரு கார்த்திகையிலும் திருவண்ணுமலை சென்று அண்ணுமலையானையும், குகை நமசிவாயரையும் தரிசித்துக் கொண்டும் குருநாதனை நம்பி வரும் அடியவர்க்குக் குருவருளை எண்ணித் திருநீறளித்து இஷ்ட சித்தி யடையச் செய்தும் வந்தார்.

தன் குருநாதர் திருவருள் நிலை யெய்திய பின்னர் தன்னேடு ஒருசாலை மாணவராக விளங்கிய ஸ்ரீலஸ்ரீ சிவ சண்முக மெய்ஞ்ஞான சிவாசாரிய சுவாமிகள், திருப்பாதிரிப்புலியூர் அன்பர்கள் வேண்டுகோளுக் கிணங்கி ஆண்டெய்தி, அவர்கள் செய்வித்த மடத்தில் எழுந்தருளி யிருந்தமையால் திருக்கோவலூரில் திருப்பணி, பூசை முதலியவற்றைத் தாமே ஏற்றருளினுர். மேலும் குருவருளைத் துணை கொண்டு பலபல இடங்கட்கும் சென்று சிவ-குக நெறியினைப் பரப்பினுர். இன்றும் இம் மடாலயச் சார்பிலுள்ள ஆரணி திருமலை சமுத்திரம் பால சுப்பிரமணியர் தேவத்தானத்திற்கான இடம் அன்று இருந்த இம் மடாலயத் தலைவர் இரண்டாமுறை ஸ்ரீலஸ்ரீ சிவ சண்முக மெய்ஞ்ஞான சிவாசாரிய சுவாமிகட்காக இவரால் வாங்கப்பட்டதே. (விவரம் ஆரணி பற்றி முன் கூறப்பட்டது) இங்ஙனம் ஏற்பட்ட எத்தனை அறங்கள் பிறர் வயப்பட்டனவோ !

அருணசல சுவாமிகள் சில காலங் கடந்தபின் தன் குருநாதர் திருக் கோயிலைச் சுற்றிலும் மதிலும் திருக் கோவலூரில் மடம் ஒன்றும் அமைக்க முனைந்தார். பல அன்பர்கள் கல், சுண்ணும்பு முதலிய உதவினர். சில காலம் எவ்வாறே கூலிக்குப் பொருளும் கிடைத்து வந்தது. ஆயின், வேலை நடைபெற்று வருங்கால் இடையிலே கூலிக்குப் பொருள் முட்டு ஏற்பட்டது. அன்பர் என் செய்வார்? முன்போர்க்கால் ஆட்கள் அவதிப்பட நேர்ந்ததுபோல் நேரவிடக் கூடாதெனக் கருதினுர். குருவருளைச் சிந்தித்து, வில்வ இதழ்களையும், திருநீற்றினையும் கூலிக்காரர்க்கு வழங்குவார். அவர்கள் அதை யேற்றவுடன் அவை, அன்றன்று அவரவர் செய்த வேலைக்கேற்ற கூலிப் பொருளாக மாறிவிடும்,

இத்தகைய பல நிகழ்ச்சிகளைச் செவியுற்ருன் அக்காலத்தே திருக்கோவலூர்ப் பகுதியினை அரசாண்ட வேலூர் நவாப். திருக்கோவலூருக்கு வந்தான். தக்கார் வாய்க் கேட்டறிந்தன்றித் தானே சில நிகழ்ச்சிகளைக் கண்டும் அறிந்தான். ஆற்றங்கரை ஓரத்திலே வீரட்ட நாதர் ஆலயத்திற் குரித்தான இடந்தவிர ஏனைய இடங்களையும் சில நிலங்களையும் மடத்திற்கே உரிமையாக்கிச் சென்ருன்.

இவ்வாருக அருணுசல சுவாமிகள் திருமடத்திற்கெனச் சில தாவர சொத்துகளைச் சேர்த்தும் ஆங்காங்கு சென்று மக்கள் உய்ய வழிகாட்டியும் குருவருளுக்குப் பாத்திரராகிப் பலகாலம் வாழ்ந்து திருவருள் நிலை யடைந்தார். இத்தகைய தனக்கென வாழாப் பிறர்க் குரியாளர்களால்தான் இன்று தமிழும் சைவமும் தழைத்து ஒளிர்கின்றன.

பிற்காலத்திலே இம் மடாலய ஐந்தாமுறைக் குருநாதரவர்கள், அருணுசல சுவாமிகளின் பெருமைகளைப் பற்றிச் செவி வழியாகவும் ஆரணி மடாலயம் பற்றிய வழக்குக் காரணமாகப் பல சாஸனங்களை நோக்கியும், முதற் குருநாதர் தம் கனவிலருளிக் கூறியமையாலும் நன்ருக அறிந்தவர்களாதலால் அவ்வருணுசல சுவாமிகள் சமாதி கூடிச் சிவமாயின இடத்திலே 1938 ஆம் ஆண்டில் ஓர் சிறு கருவறையுடன் முன் மண்டபமும் அமைத்தார்கள். முன் எப்போதும் நிகழ்ந்து வந்தது போலவே ஞானியாரடிகள் கோயிற் பூசனை புரிவோர் இத்தூய இடத்திலும் பூசிப்பர். யாவரும் அண்ணுமலை சுவாமிகட்கும் வழிபாடாற்றுவது இன்றும் வழக்கு.

திருவருளிற் கலத்தல்: நமது ஞானியார் சுவாமிகள் தம் பதிஞரும் ஆண்டு தொடங்கி இருபதா மாண்டிற்குள் மேற் கூறப்பட்டவாறு உபதேசங்கள் பெற்றும், இறையவன் அருளிய நிட்டானு பூதியின் வழிநின்று நிட்டை கூடியும், பற்பல மாணவர்க்குச் சிவ குக நெறியைப் போதித்தும் மன்பதைகள் உய்யுமாறு பல பல நூல்களை அருளிச் செய்தும், அன்பர் பலர்க்கும் ஆம் நலங்களை யருளியும் இவ்வுலகத்திலே தொண்ணூற்றே ழாண்டுகள் பூதவுடலை நிலை நிறுத்

திய பின்னர், இறைவனேடு ஒன்றி இரண்டறக் கலக்கத் திருவுளங் கொண்டார்கள்.

அங்ஙனமே, யோகுசெய்தமர்ந்து கலி 4871 (கி. பி. 1770) ஆம் விகுர்தியாண்டு மாசித்திங்கள் இருபத்தேழாம் நாளாகிய வியாழக்கிழமை அநுட நட்சத்திரம் கூடிய நாளிலே பேரொளியிற் கலந்தருளினுர்கள்,

" கலியெழுபத் தெண்சதகா கச்சிர நான்காண்
டொலிவிகுர்தி மாசிமூ வொன்பான் – சொலுகுருவா
ரத்தினத்திற் கோவலில்வா ழாறுமுக தேசிகனுர்
சித்தாய் நிறைந்ததெனத் தேர் ".

(இரண்டா முறைச் சுவாமிகள் இயற்றியது.)

---

சரஸ்வதி பிரஸ், கடலூர் – 2



ஸ்ரீமத் ஞானியார் மடாலயம், ஆரணி

பத்தியு மறியேன் முத்தியு முணரேன்
பத்தர்தங் குழுவினை யணுகேன்
எத்திற வினையும் எண்ணிலா துளுற்றும்
ஏழையேன் உய்வதும் உளதோ
சித்திகள் பலவுஞ் செய்திடு சித்தே
சிதைந்திடா ஆனந்த வடிவே
தத்துறு மலைசேர் வாவிசூழ் புலிசைச்
சண்முக ஞானதே சிகனே.

— ஜந்தாமுறைச் சுவாமிகள். ஞானதேசிகமாலை 4

இரண்டாம் பட்டத்துச் சுவாமிகளை மூலவராகவும், ஏனைய சுவாமிகளைச் சூழவும்பெற்றுள்ள ஆலயம் திருப்பாதிரிப்புலியூர்



ஸ்ரீமத் ஞானியார் மடாலய வெளியீடு – 18.

உ
வேலுமயிலுந் துணை.
சிவசண்முக மெய்ஞ்ஞான தேசிகன் திருவடி வாழ்க.

---

திருக்கோவலூராதீனம்
திருப்பாதிரிப் புலியூர் ஸ்ரீமத் ஞானியார் மடாலய
முதற் குருமூர்த்திகள்
ஸ்ரீலஸ்ரீ
ஆறுமுக மெய்ஞ்ஞான சிவாசாரிய சுவாமிகள்
(ஞானியார்)

திருவாய் மலர்ந்தருளிய

# ஆசைச் சோடச மாலை.

இஃது

கரந்தைப் புலவர் கல்லூரித் தமிழ் விரிவுரையாளர்
**உயர்திரு - திரு. அடிகளாசிரியர் அவர்களால்**
ஓலைச் சுவடிகளின்றெடுத் தெழுதிக் குறிப்புரையுடன்
செப்பஞ் செய்யப்பெற்றது.

*

கலி–5067, பராபவ ஆண்டு (1966)

உ

சிவமயம்.

சிவசண்முக மெய்ஞ்ஞான தேசிகன் திருவடி வாழ்க.

## ஸ்ரீலஸ்ரீ ஆறுமுக மெய்ஞ்ஞான சிவாசாரிய சுவாமிகள்

திருவாய் மலர்ந்தருளிய

# ஆசைச் சோடச மாலை.

---

ஆறணி திங்கள் வேணி
அத்தா!உன் அடிகட் கன்பால்
நீறுகண் மணியும் பூண்டு,
நெஞ்சில்அஞ் செழுத்தை உன்னி
ஆறுகால் முகராப் பூவால்
அருச்சனை செய்து: கண்ணீர்
ஆறெனப் பெருகும் அன்புக்கு
அண்ணலே! ஆசைப் பட்டேன். 1

பொய்ம்முத லாகச் சொல்லும்
பொல்லாங்கு தம்மைப் போக்கி
மெய்யெலாம் நீற ணிந்து
விரூபாட்சி! சிவம கேசா!
செய்யமே னிய வென் னுள்ளத்
தினிலுனைத் தியானம் செய்து
அய்யனே! உன்றருள் சாரற்கு
அண்ணலே! ஆசைப் பட்டேன். 2

பவக்கடற் றுயரம் நீங்கிப்
பரிசுத்த பதங்கட் கன்பால்
தவத்தினை இயல்பாய்ச் செய்யும்
தகைமையோர் உறவைப் பெற்றே
சிவத்தினை அர்ச்ச ளுதி
தினமுழுப் போதுஞ் செய்தே
அவத்துவ காலம் போக்காது
அண்ணலே! ஆசைப் பட்டேன். 3

பேராசை கொண்ட மாது
பிரிந்ததன் பதியை நாடி
ஆராமை யாகக் கண்ணீர்
அவள்வடித் திடல்போற் கொன்றைத்
தாரா!செஞ் சடையா! கெங்கா
தர!சந்த்ர சேக ரா!வென்று
ஆராப்பே ரன்பு தந்தாள்
அண்ணலே ஆசைப் பட்டேன். 4

சிவமிட்ட பிராண பாவம்
செய்தர்ச்சித் தன்பு சேடம்
சிவலிங்கக் கேள்வி தியானம்
சிவஆலிங் கனம்அ யிக்கியம்
உவமையில் உயர்வாம் எட்டும்
உளந்தனில் அடிமைக் கின்னே
அவமொழித் தருளாய்த் தந்தாள்
அண்ணலே! ஆசைப் பட்டேன்.

குறிப்பு :- சிவத்தினை, இட்ட, பிராண, பாவம் எனும் மூன்ருகச் செய்து தூல, சூக்கும, காரண உடல்களில் முறையே தரித்து, அம் மூன்றையும் அருச்சித்து, அன்பு (பக்தி) செய்து இலிங்க நிவேதனமாகிய சேடத்தினை அருந்தி, சிவலிங்கத்தின் பெருமையையே கேட்டு, சிவலிங்கத்தையே தியானித்து, சிவத்தையே தழுவி, சிவலிங்கத்தோடு அயிக்கிய மாகும் எட்டினையும் அருள் என்றவாறும். இங்குக் கூறிய பொருளைச் சதுர்லிங்க சதகோத்திர தசகத்திலே 99, 100, 101 ஆம் செய்யுட்களிலும் காணலாம். 5

பூசித்தேன் கரத்தில் உன்றன்
புகழ்துதித் துன்சொ ரூப
மாசுத்தர் சரணர் தீர்த்த
மகாப்பிர சாதம் கொள்ள
நேசித்துன் பாத நாட்டம்
நினைப்பற நினைந்து நீங்காது
ஆசித்தற் கன்பு தந்தாள்
அண்ணலே! ஆசைப் பட்டேன்.

குறிப்பு :- உன் சொரூப மாசுத்தர் சரணர் தீர்த்த மகாப் பிரசாதம் என்றது, இலிங்க தீர்த்தம், இலிங்கப் பிரசாதம், குருப் பிரசாதம், அடியார் தீர்த்தம், அடியார் பிரசாதம் என்பவைகளை யாகும். 'உன்' என்றது இலிங்கத்தை, 'உன் சொரூப மாசுத்தர்' என்றது குருவை; 'சரணர்' என்றது அடியார்களை. 6

தற்போதம் உள்ள மட்டும்
சம்போ!உன் சொற்ப டிக்கே
அப்போடாக் கவ்ய மாதி
அபிடேகார்ச் சனையு மற்றும்
செப்பாமற் செப்பு ஞான
சிவானந்தா தீதம் ஆதற்கு
அப்பா!உன் அருள்வ சத்துக்கு
அண்ணலே! ஆசைப் பட்டேன்.

குறிப்பு :- சம்புவே! என்னிடம் ஆன்ம போதமாகிய தற்போதம் உள்ளவரையில் அது தீர்வதற்காக, நீ கூறிய ஆகமப்படி அப்பு முதலான சிவபூசைப் பொருள்களைக்கொண்டு அருச்சனை முதலியன செய்து, உன் அருள் வசமாய்ச் சிவாநந்தாதீதம் ஆகுதற்கு ஆசைப் பட்டேன் என்றவாறும்.

அப்பு - தண்ணீர், ஆக்கவ்யம் - பஞ்சகவ்யம்.

அஞ்ஞானிகளுக்கு மெய்ஞ்ஞானம் வருதற் பொருட்டே சிவபூசை செய்வது என்பதை "அஞ்ஞான

சித்தத்தாருக் காவாகனுதி பூசை, மெய்ஞ்ஞான முதித்தத் தாலே வீட்டைக்காண் குதற்பொருட்டாய், அஞ்ஞான மில்லாதாருக் கான்மாவில் இலிங்கந் தோன்றும், மெய்ஞ்ஞானம் தானே தானும் வீடுந்தா னேதான் ஆகும்'' மெய்ம்மொழி என்னும் நூலாலறிக. (பெருந்திரட்டு பக்கம் 320.) 7

எழுந்தபே ரொளியே அந்நாள்
இருவர்தே டரிதாய் நின்றும்
அழுந்துநே யத்த ருள்ளத்து
அயலிலா தறிவுள் நின்ருய் ;
விழுந்துபூ மியிற்பு ரண்டு
விதிர்த்துளம் உருகி அன்பாய்
அழுந்தஉன் அடிகள் தன்னில்
அண்ணலே ! ஆசைப் பட்டேன். 8

விடையினில் ஏறும் மன்னு !
மேருவிற் பிடித்த வேந்தே !
நடைநொடி பாவம் "செம்மை
நாடிய தராசு முட்போல் ''
இடைவிடா திருந்தேன் நான்,உன்
இணையடிக் கன்ப ளுக
அடிமைசெய் தாண்டு கொள்ளற்கு
அண்ணலே ! ஆசைப் பட்டேன். 9

குறிப்பு :- நடை - செயல்; நொடி - சொல்; பாவம் - நினைவு.

இப்புவி மண்ணிற் பாலை
யினிற்கோடை உச்சிக் காலத்து
அப்பொடி நிற்ப தைப்போல்
... ... ... ... ... ...
... ... ... ... ... ...
... ... ... ... ... ...
... ... ... ... ... ...
... ... ... ... ... ... 10

குறிப்பு :- இப்பாட்டு முற்றிலுங் கிடைக்கவில்லை.

சம்புவே ! சிவசி வாய !
தாணுவே ! உனைப்பூ சித்தே
அம்பக நீர்க்க சிந்தே,
அனலுறு மெழுகாய் உள்ளம்
நம்புதல் முயன்று மோன
நடுநிலை நிற்க, நாளும்
அம்புவி யாதி நீங்க,
அண்ணலே ! ஆசைப் பட்டேன். 11

குறிப்பு :- அம்பகம் - விழி; அம்புவியாதி – நிலம் முதலான முப்பத்தாறு தத்துவங்கள்.

பொறியொடு புலன்ஓ டாமல்
புகுமனத் தினைய டக்கும்
நெறியிடை உரம்தோள் கண்டம்
நேர்செம்மை யாயி ருந்து
குறியிலாக் குறிகு றித்துக்
கூர்மனை அடக்கி நாட்டத்து
அறியவர் வகன்றி ருத்தற்கு
அண்ணலே ! ஆசைப் பட்டேன். 12

குறிப்பு :- இப்பாட்டின் கருத்தை, "இயம்புமா தனங்க டம்மில்" என்னும் நிட்டாநுபூதி 23 ஆம் பாட்டாலறிக.

பந்தம்ஆ சாரம் நேமம்
பசிதம்கண் மணியும் மந்த்ரம்
கந்தம்ஆ தியின்அர்ச் சித்துக்
கடவுளே ! என்று நைந்து
விந்தனே னிலையில் நின்று
தானெதி நிலாமை நீத்தே
அந்தமா தியுமின் றுகும்
அண்ணலே ! ஆசைப் பட்டேன். 13

தன்னையே சிவோகம் என்பார்
தன்னிலை வேண்டு கில்லேன்
பின்னமாம் சிவமும் என்பார்
பேதைமை வேண்டு கில்லேன்
என்னையும் ஒழிந்த இன்பத்து
இராதிருந்து அதீத நிட்டை
அன்னிலை திண்ண மாமென்று
அண்ணலே! ஆசைப் பட்டேன்.

குறிப்பு :– இப்பாட்டின் கருத்தைச் சதுர்லிங்க சத-கோத்திர தசகத்துள், "ஒன்றற்று இரண்டற்று லிங்கமே, ஒன்றும்அல் லாவொன்றில் லிங்கமே நின்றற்று நிட்டை இலிங்கமே, நில்லாமல் நிற்கருள் லிங்கமே" என்ற 82 ஆம் பாட்டாலறிக. 14

நினைத்தனைத் துஞ்சிவ மென
நீக்கிய நாம ரூப
மனத்தினுன் அதுநான் என்றுல்
மன்னுமோ பிரமந்த தானே
தனித்தனி மனவாக் காகுந்
தானும்போய்த் தனையொ ழிந்த
அனைத்துநீ யல்லா யாமென்
றண்ணலே! ஆசைப் பட்டேன். 15

வானிகா ருவை நீங்கா
மகத்பரி மாண மென்னு
மோனநீ ததகு னுப்பான
முடிவினின் முடிவா யெங்கு
மானதோர் சிவநீ யல்லால்
அன்றிவே ருென்றி லாமல்
ஆனவுன் றிருத்தாள் நீழற்
கண்ணலே! ஆசைப் பட்டேன். 16

ஆசைச் சோடச மாலை முற்றும்.

சிவ சண்முக மெய்ஞ்ஞான தேசிகன் திருவடி வாழ்க.

---

பிற் சேர்க்கை II.

## சுவாமிகள் அருளிய நூல்கள்.

பிறப்பதற்கே தொழிலாகி இறக்கும் மாக்கள், அங்ஙன மின்றி இறைவன் திருவடியில் ஒன்றிப் பிறவாத பேரானந்தம் அடையும் பொருட்டாக நம் குரு மூர்த்திகள் திருவருளி-யனவாக முப்பத்தொரு நூல்களின் பெயர்கள் அறியத் தக்கனவாய் உள. கால வெள்ளத்தில் அடித்துச் செல்லப் பட்டவை எத்துணையோ !

| | | செய்யுள்கள். |
|---|---|---|
| 1. | நிட்டானுபூதி சாரம். (இது அச்சேறி வெளி வந்துளது) | 91 |
| 2. | வீரசைவ உண்மை யகவல் | 1 |
| 3. | சதுர்லிங்க சதகோத்தர தசகம் (அச்சேறி வெளிவந்துளது) | 113 |
| 4. | இட்டலிங்கத் திருத்தல மாலை | 17 |
| 5. | சிவ சோடச மாலை | 16 |
| 6. | ஆசைச் சோடச மாலை (முன்னதாக அமைந் துள்ளது) | 16 |
| 7. | உய்யப் பத்து | 10 |
| 8. | ஓலப் பத்து | 10 |
| 9. | கரதலப் பதிகம் | 10 |
| 10. | ஆடுதுறைக் குற்றம் பொறுத்தார் தோத்திரம் | 4 |
| 11. | சண்முகர் உலா | 120 |
| 12. | தேன் பாங்கு | 10 |
| 13. | மாசிலாமணிப் பதிகம் | 11 |
| 14. | சிவ சிவ பதிகம் | 11 |
| 15. | சிவ சிவ ஹரஹர பதிகம் | 11 |
| 16. | கரதல நாயக பஞ்சகம் | 5 |

| | | |
|---|---|---|
| 17. | இஷ்டலிங்கப் பதிகம் | 10 |
| 18. | கரதலத் திருப்புகழ் | 3 |
| 19. | வீரட்டேசுவர மஹாகுரு அனுபவ தோத்திரக் கலித் துறை | 12 |
| 20. | இலிங்கப் புலம்பல் | 219 |
| 21. | அருள்வாம உண்மை விளக்கம் | 113 |
| 22. | பிரதம துர்க்க நிச்சயம் | 22 |
| 23. | வெற்றருலா | 47 |
| 24. | உண்மையுலா | 113 |
| 25. | பரம உபதேச ஒடுக்கம் | 82 |
| 26. | சிவாத் துவைதக் கும்மி | 27 |
| 27. | ஞானிகள் நிலைமை | 8 |
| 28 | மேன்மைப் பதிகம் (அச்சேறி வெளிவந்துளது) | 12 |
| 29. | வீரட்டேசுவர தோத்திர கலிப்பா | 16 |
| 30- | சண்முக ரகவல் | 1 |
| 31. | வீரட்டேசுவர மஹா குரு தோத்திர மங்களம் | 5 |
| | | 1146 |

இவற்றுள் நிட்டானுபூதி சாரம் அதன் உரையோடு இதுவரை பலமுறை அச்சாகி வெளிவந்துளது. நூலும் அதற்கு முத்துகிருஷ்ண பிரமம் எழுதிய உரையும் மிகச் சிறந்த நூல்களெனப் பல பெரியோர்களால் போற்றப் பெற்றவை. இந் நூலின் உரைக்குச் சாற்று கவிகள் அளித்-தோர் இருபதின்மர். (1) அட்டாவதானம் – வீராசாமி செட்டியார். (உரைச் சிறப்புப் பாயிரம் செய்தவர்), (2) புரசை அட்டாவதானம் சபாபதி முதலியார், (3) சிதம்பரம் இராமலிங்கம் பிள்ளை (வடலூர் . இராமலிங்க அடிகளார்), (4) சேமங்கலம் வித்வான் – நாராயண முதலியார், (5) திருநீர்மலை கவிராஜ சேகரர், (6) தில்லை-யம்பூர் சந்திரசேகர கவிராஜர், (7) நரசிங்கபுரம் புலவர் –

வீராசாமி, (8) தாயுமானவர் மரபு எடுத்துக் கட்டி அருணசல சுவாமிகள், (9) திருப்போரூர் ஆதீனம் ஒன்பதாம் முறை முத்துக்குமார சுவாமிகள், (10) குளத்-தூர் சட்டநாத சுவாமிகள், (11) சேங்காலிபுரம், கோயிற் பத்து குழந்தைவேல் ஓதுவார், (12) கரபாத்திர சுவாமிகள் ஆதீன பிறைசை அருணசல சுவாமிகள் மாணவர் கா. முருகேச நாயகர், (13) விசாகப் பெருமாள் ஐயர், (14) காஞ்சீபுரம் சபாபதி முதலியார், (15) கோ. இராஜ கோபால பிள்ளை, (16) மதுரை ஆதீன அடியவர் சிதம்பர சுவாமிகள் — ஆகியோர் தெரிந்து கொள்ளக் கூடிய வராவர்.

நலங்கொள்சிவ யோகமண நாற்றிசையு மணக்கும்
ஞானமணங் கந்திக்கு மோனமண நாறும்
விலங்கலில்சித் தாந்தமணம் பரிமளிக்கு மின்பா
வேதாந்த மணங்கமழும் வேதமணம் வீசும்
தலங்கொளுமெய் யத்துவிதத் திருமணமும் பரவும்
தனிமுத்துக் கிருட்டினப்பேர் தங்கியநம் பிரமம்
வலங்கொளுநன் னிட்டாநு பூதியெனு நூற்கே
வாய்மலர்ந்த வுரையெனுமோர் மாமலரி னிடத்தே.

என்பது வடலூர் இராமலிங்க அடிகளார் அளித்த உரைச் சாற்று கவியாகும். உரைக்கே இத்தனை இயல்புக ளென்றால் நூலின் பெருமையை யளவிட்டுரைப்பவர் யாவர்? முத்துக்கிருட்டின பிரமமே யன்றிப் பிறரும் உரையியற்றி யிருக்கக்கூடும். இவ்வாசிரியர் தன் உரையில் 'என்பாரும் உளர்' எனக் கூறுவதால் இங்ஙனம் துணிதற் கிடமுண்டு.

இங்ஙனமே ஏனை நூல்களும் சிறப்படைந்து விளங்-குவன. திருவருள் கூட்டுவித்தால் அவையும் வெளிவரும்.

சுவாமிகளின் திருவுருவ எழில்: இந்நாள் போன்று அந்நாளிற் புகைப்படக் கருவி இல்லையேனும் ஓவியரும் சிற்பியரும் அக்குறையைப் போக்கினர். சிறந்த சிற்பி ஒருவர் அவரது கைத்திறமையால் சுவாமிகளின் திருவுருவத் தைச் சிலையுருவில் வடித்து அழகிய விமானமும் அமைத்துத்

தர இரண்டா முறைச் சுவாமிகள் காலத்திலேயே அத் திருவுருவப் பிரதிட்டை திருக் கோவலூரிலுள்ள ஸ்ரீலஸ்ரீ ஆறுமுக சுவாமிகளின் கோயிலிலேயே நடைபெற்றது. அன்று முதல் இன்றுகாறும் பூசனையும் பெற்றுச் சிறக்கிறது.

ஓவியர் ஒருவர் தக்க முறையிலே ஓர் ஓவியத்தைச் சிறப்புடன் தீட்டித்தர அது திருப்பாதிரிப் புலியூர் மடாலயத்திலே நாடோறும் பூசனை பெற்று வருகிறது.

சுவாமிகளது உருவ எழிலைப் பருகிய ஸ்ரீமத் அவிநாசி நாதர்,

"பூவுலகோர் நாணும் போற்றவரும் ஆறுமுக
தேவனெனுஞ் செல்வத் திருப்பெயரான் – ஆவலுடன்
மானததீர்த் தம்படிந்து வண்பவள வெற்பின்மிசை
பானிலவின் சோதி படிவதையொத் – தூனமிலா
நீற்றிணைநல் லாகமஞ்சேர் நீதியுட னேயெடுத்து
மேற்றிகழ வெங்கும் வியந்தணிந் – தேற்றமிகும்
பொற்றருவீ ழென்னப் பொலியுஞ் சடாமவுலி
விற்பொலியக் கைபுனைந்து மேவவே — வெற்பரவும்
ஆதவன்செம் பொன்னூசல் ஆடுதல்போற் —
கண்மணிசேர்
காதிலணி யெங்குங் கதிர்வீசப் — போத
வுயிர்க்குயிரா யெங்கும் ஒளிர்பரம லிங்கம்
வியப்பினுடன் மார்பில் விளங்க — நயப்பாக
வேறு பலவணிகள் மெய்க்கணிவ தன்றியே
பேறிலையென் றிம்மணியைப் பேசுகினு — மீறிலிதைக்
கையாற் றெடினுங் கதிதருமென் றக்கமணி
மெய்யாரத் தாங்கி விருப்போடு — மொய்யொளிசேர்
அங்குட்டத் தோடு மணிவசவ மோதிரமுஞ்
செங்கை விரலதனிற் சேர்த்தியே — துங்கமிகும்
ஏம கிரிமீதில் எழிற்செக்கர் சூழ்ந்ததெனக்
காமர்செஞ் சேறாட்டுங் கலையிடையிற் — சேமமுற
நன்குபெற வேயசைத்து நாடுபத வாரிசத்தின்

மென்சுரும்பு வீழ்ந்து மிழற்றுவபோல் – பொன்
பிறங்கும்
வீரமணி வெண்டயமு மேல்விளங்க வேபுனைந்து ''
நெஞ்சுவிடுதூது 105 – 116.

என்று கூறுவதினின்று ஒருவாறு உளக்கண்ணுல் உணர முயலலாம்.

இம்மடாலயத்தின் வரன்முறை மூலம் திருக் கயிலாயமாகும். அகச் சந்தானம், புறச் சந்தான வழிமுறை உபதேசத்தால் வந்ததன்று. தூல பஞ்சாக்கர உபதேசந் தவிர்த்த ஏனைய உபதேசங்களை அடிகளார்க்குத் தெய்வமே யளித்தமை தனிச்சிறப்பாகும்.

இப்பூவுலகில் அண்ணுமலையாரே குகை நமச்சிவாயராகத் தோன்றி யிருந்தாரென அருணுசல புராணங் கூறும். எனவே நம் ஆறுமுக குருவினுக்குத் தூல பஞ்சாக்கரம் உபதேசித்தவர் குகை நமச்சிவாயர், சூக்கும பஞ்சாக்கரம் உபதேசித்தவர் பெரியநாயகித்தாய், காரண பஞ்சாக்கரம் உபதேசித்தவர் ஆராத்திரிய உருவந் தாங்கிய அமலன் வீரட்டநாதன், மகா காரண பஞ்சாக்கரம் உபதேசித்தவர் வீரபத்திரக் கடவுள், ஒருமொழி மகா வாக்கியம் உபதேசித்து வாதுளாகமத்தை யளித்தவன் வீரட்ட நாதன், பிரணவம் உரைத்தவருளிய ஆன தனிமந்த்ர ரூப நிலைகொண்ட ஆடுமயிலோன்.

இன்னும் ஓர் சிறப்பினைக் குறிப்பிடாமலிருக்க இயலவில்லை. அதாவது அறுமுகத் தொருபரம் பொருளை உபாசனு மூர்த்தியாகக் கொண்ட ஆறுமுக குருவினுக்கு உபதேசம் ஆறு முறை நடந்தது.

மேலும், இம் மடாலயத்திற் குரித்தாய ஆறு இடங்களிலே முருகன் வழிபாடு நடைபெற்று வருகின்றது. அவை சற்றேறக் குறைய 200 ஆண்டுகட்கு மேலாகத் திகழ்வன.

1. திருக் கோவலூர்: ஸ்ரீமத் மகா குரு சுவாமிகள் இன்றும் அருவாய் எழுந்தருளி அருள் பாலிக்கும் கோயில்.

அவர்கள் உருவத் திருமேனியைக் கரந்தருளி ஒளியோ டொன்றிய இடம். இது பாதிரியுங் கொன்றையும் வில்வமும் செறிந்த சூழல் தென் பெண்ணைக் கரையது வீரட்ட நாதன் கோயிலின் கிழக்கே சற்றேறக் குறைய 30 முழத் தூரத்தில் அமைந்தது. வடபால் பெண்ணை நதியும், அதன் மறு கரையில் அறையணி நல்லூர்ச் சிவன் கோயிலும், கபிலர் குன்று, அடிகளார் தவயோகத் தமர்ந்திருந்த குகைக் குன்று இவற்றை அணித்தே கொண்டது. ஆங்கே ஸ்ரீலஸ்ரீ ஆறுமுக மெய்ஞ்ஞான சிவாசாரிய சுவாமிகள் பூசித்துவந்த ஞான விநாயகர், ஞானஸ்கந்தர் திருவுருவங்களோடு சுவாமி களின் இலிங்கத் திருவுருவும், அவர்களது எழிலார்ந்த திரு-வுருவமும் பூசனை பெறுகின்றன,

2. திருப்பாதிரிப் புலியூர்: கரையேறவிட்ட முதல்-வன் கருணைத் திருச் சந்நிதி வீதியிலே அடிகளாரின் மாணவராகிய இரண்டாம் குருநாதர் ஸ்ரீலஸ்ரீ சிவ சண்முக மெய்ஞ்ஞானசிவாசாரிய சுவாமிகள் காலத்தே தோன்றிய மடாலயம். அவர்களால் பிரதிட்டை செய்யப்பெற்ற ஆறு-முகப் பரம்பொருள் இரு தேவிமாருடன் வேண்டுவார் வேண்டிய நலங்களை அளித்துக் கொண்டு பூசனை பெறு-கிறார். ஆன்றோர் இம் மூர்த்தியின்மீது அட்டோத்திர சத நாமாவளி ஒன்று அருளியுளார். அதுவே நாடோறும் பூசனையில் ஓதப் பெறுகிறது. இம் மூர்த்தியினையே முருக-ரந்தாதி என்னும் நூலால் இரண்டாம் பட்டத்து அடிகளார் பரவியுள்ளார். இந்நூல் 200 சில்லரைக் கோர்வை என்னுந் தொகுப்பு நூலில் பன்னெடுங் காலமாக அமைந்துள்ளது.

3. வண்டிப்பாளையம்: திருப்பாதிரிப் புலியூருக்குத் தென் திசையில் ஒருகல் தொலைவில் கரையேற விட்ட குப்பம் என்னும் வண்டிப் பாளையம் விளங்குகிறது. அங்கு முருகனுக்கே ஓர் தனி ஆலயம் உளது. அது இம் மடாலய இரண்டாம் குருநாதரால் பிரதிட்டை செய்யப்பெற்ற திரு-வுருவத்தையுடையது. நோயால் நலிந்தும், பேயாற் கொள்ளப்பட்டும் இன்னலடைந்தாரும், பிறர் பலரும் வந்து வணங்கி வலம்வந்து திருநீறு பச்சிலை முதலிய பெற்றுப்

பயன் பலவும் எய்தும் தலமாகப் பண்டு தொட்டே விளங்குவது.

4. சிவ குன்றம் : முதற் குருநாதர் பல ஆண்டுகள் தங்கித் தவம் புரிதற் கிடமாயது. அவர்கள் பிரதிட்டித்துப் பூசித்த திருவுருவங்களை யுடையது. இங்கும் மக்கள் பலர் வந்து, தொழுது தூமலர் தூவித் துதித்து நின்று, அழுது காமுற்றவைகளை அடைந்து செல்வர். நாடோறும் இம் மடாலயச் சார்பில் பூஜை முதலியவை நடைபெறுகின்றன. முதற் குருமூர்த்திகள் இங்குத் தவம் புரிந்துவந்த காலங்களில் அவரைச் சூழப் புலி, கரடி முதலிய கொடிய பிராணிகள் காவல் புரிந்து வந்ததாகவும் திருவருள் வெளிவர எண்ணிய போது திருக்கைச் சத்தம் எழுப்ப அவை வழிவிட்டு விலகிப் பின் வழக்கம்போற் காவலிருந்ததாகவும் செவிவழிச் செய்தி உண்டு.

5. ஆரணி : இம் மடாலய முதற் குருமூர்த்திகள் சிலகாலம் ஆரணியில் தங்கி அருள்பாலித்துக் கொண்டிருந்த காரணத்தால் அன்பர் பலர், அறுமுக அண்ணலை ஆறுமுக குரு காட்டிய நெறியே வழிபடற் கிடமாயுள்ளது. இரண்டாங் குருமூர்த்திகள் எழுந்தருளியிருந்த காலமாகிய கலி 4900 ஆம் ஆண்டாகிய சித்தார்த்தி, ஆடி 20 ஆம் நாள் சென்னைப் பெரிய பணம் 1610-க்குக் க்வல் நல்ல தம்பி நாயக்கர், தென்னவராய நாயக்கர் ஆம் இருவரிடமும் இரண்டாங் குருநாதர்க்காக அருணசல சுவாமிகளாற் பாதி கிரயமாகவும், பாதி தானமாகவும் வாங்கப்பெற்ற இடத்தில் மடாலயம் அமைந்துள்ளது. அவ்வூரினுக்குச் சிறப்பளிக்கும் தனிக் கோயிலாகப் பலகாலமாகத் திகழ்வது. இரண்டாம் குரு மூர்த்திகளால் பிரதிட்டை செய்யப்பெற்ற அறுமுக அண்ணலின் திருவுருவமும், பின்னுளில் ஏற்பட்ட சனீசுவரர், ஒன்பான் கோள் முதலிய திருவுருவங்களுங் கொண்டு திகழ்வது. ஆண்டுதோறும் கந்தர் சட்டிப் பெருவிழா பனிரண்டு நாளளவும் நடைபெறுவது. மேலும் மாசிப் பெருவிழாவும், வைகாசி விசாகம் நவராத்திரி, மார்கழித் திருவாதிரை (சைதாப்பேட்டையார் நடத்துவது) தைப்பூச ஏழூர்ப்பத்து. மாதக் கார்த்திகை முதலிய நைமித்திக விழாக்

களும் சிறப்புடன் நடைபெற்று வருகிறது. 31—5—1964ல் பல திருப்பணிகள் நிறைவேறிக் குடமுழுக்கு விழா சிறப்புற நடைபெற்ற ஆலய மாகும்.

6. **திருமுது குன்றம் :** இம் மடாலயத்திற் குரித்தாகக் கல்வி மடமாகிய கல்மடம் என்ற இடமும் ஸ்ரீ தண்டபாணி ஆலயமும் உள. தண்டபாணி சுவாமிக்கு நித்திய நைமித்திக பூசைகள் இம் மடாலயச் சார்பில் நடைபெற்று வருகின்றன.

பண்டு இங்கு உறைந்த அடியவர்கள் அண்டியவர்க்குச் சமயக் கல்வி முதல் எவ்விதக் கல்வியும் போதித்து வந்தனர். அதனுற் 'கல்வி மடம்' என்ற பெயர் வழங்கியிருந்து, பின் கல் மடம் என மருவியது. அருணுசல சுவாமிகளால் சூலை நோய் நீங்கப்பெற்ற அன்பரும் திருமுது குன்றத்தவரே யென்பது ஈண்டைக்கு நினைவுகூர்தற் குரியது.

ஆறெழுத் தருமறைக் குரியோனுகிய அறுமுக அண்ணலுக்கு இம் மடாலயச் சார்பிலும் ஆறு திருத் தலங்கள் இன்றும் விளங்குவது கருதத்தக்க ஓர் சிறப்பே யாமன்றே ?

இவற்றுள் வண்டிப்பாளைய ஆலயம் அவ்வூர் அன்பர்களால் அந்நாள் முதலாகவே பரிபாலிக்கப்பெற்று ஆதி சைவர் பூசனையுடன் விழா முதலியவற்ருற் சிறப்புறுவது. ஆயின் அங்குள்ள மூலவரைப் பிரதிட்டை செய்து யந்திரம் தாபித்துப் பெருமானை மூர்த்தி கரத்துடன் விளங்க வழிவகுத்தவர்கள் இம் மடாலய இரண்டாம் குருமூர்த்திகளே.

ஏனைய ஐந்தும் இன்றும் இம் மடாலயச் சார்பில் பூசை முதலிய கொண்டருள்வனவே.

எங்கும் நிறைந்து தம் அடியவர் எத்திசையில் இருப்பினும் அறியத்தக்கவாறு ஆறு திசைகளுக்கும் திசைக்கு ஒன்ருக அறுமுகங் கொண்டான் எம் அண்ணல் எனினும், பாலினிடமிருந்து திரண்டுவந்த வெண்ணெய் போன்று இவ்விடங்களிலும் அடியவர் விருப்பத்தைத் தீர்த்து வைக்குமாறு இம் மடாலய முதல்வர்கள் அவனை வழிப்படுந்தி யிருக்கிருர்கள் என்பது உன்னத் தக்கது.

சிவ குன்றம். செஞ்சி தாலுக்கா அனந்தபுரத்தையடுத்துள்ளது.



குன்றத்தின் முழுத்தோற்றம். குகைவாயில், சுனை வாயில்.

சிவகுன்றம். செஞ்சி தாலுக்கா அனந்தபுரத்தையடுத்துள்ள ஓர் குன்றம்.



குகையின் உட்புறத் தோற்றம். மூலவர். உற்சவர் திருப் படிமங்கள்.

வேலுமயிலுந் துணை,
சிவசண்முக மெய்ஞ்ஞான தேசிகன் திருவடி வாழ்க.

---

பிற்சேர்க்கை. III.

(முன் 56 ஆம் பக்கத்திற் கூறியவாறு புலவர் புராணத்தின் நாற்பத்தைந்தாவது சருக்கம் ஈண்டுத்தரப்படுகிறது. இதனை இயற்றினர் மகான் வண்ணச் சாபம் தவத்திரு தண்டபாணி சுவாமிகள் ஆவர். இவர்கள், 1839ல் திருநெல்வேலி மாவட்டத்திற் றோன்றிச் சந்தக் கவிகள் பல பாடி வேற்பூசை, ஆறெழுத் தருமறை செபம் மேற்கொண்டு தமிழ் நாடெங்கணுந் திரிந்து 1898ல் விழுப்புரத்தை யடுத்த திருவாமாத்தூர் என்னும் சிவ தலத்தில் இறைவனோ டிரண்டறக் கலந்தருளினர்கள்.)

# புலவர் புராணம்

## நாற்பத் தைந்தாவது
## ஆறுமுக சுவாமிகள் சருக்கம்.

---

1. ஓங்கும் பெருமை திருக்கோவ
 லூரிற் குடிகொள் ஒருமுனிவன்
ஆங்கு பிறந்து வளர்ந்தோனே
 அலதோர் ஊர்விட் டுவந்தானே
தாங்கும் இலிங்க தாரணத்தோன்
 தவத்தா லருட்பே றடைந்துய்ந்தோன்
தீங்கு தவிர்த்தன் னவற்கருள்முன்
 செய்த குருப்பேர் தெரிந்திலனே.

2. தந்தக் கரித்தோற் பரன்வீர
சைவா கமத்தோர் தலைவனென்பார்
கந்தக் கடவுள் உபாசனையின்
கணத்தோன் என்பர் கவுமாரர்
எந்தப் பொருளும் ஒன்றெனத்தேர்ந்
திடும்வே தாந்தி என்பர்சிலர்
அந்தப் புருடன் உண்மைநிலை
அறிந்தோ ராரோ அருள்சான்றே.

3. அல்லல் ஒழிக்கும் முதலாசான்
ஆறு முகப்பேர் அணிந்தவிர்ந்து
நல்ல புலமைத் தொழில்வாய்ந்து
நறுஞ்சொற் றமிழ்ப்பாப் பலபாடி
இல்லந் துறந்து மடமாதர்
இச்சைக் கடல்நீந் தினரல்லாப்
புல்லர் உணரா நிட்டாரூ
பூதித் தனிநூல் புகன்றானே.

4. இடமும் பொருளும் ஏவலும்பெற்
றேனோர் அழுக்கா றெய்திடும்சீர்
உடன்வை திகவாழ் வுறுநாளில்
உரஞ்சேர் வீர பத்திரப்பேர்க்
கடகுஞ் சரநேர் ஒருதொண்டன்
கருணைக் குருவே பரமென்னும்
திடமொன் றினையே குறிக்கொண்டு
செய்யும் பணியிற் றிறம்பாதான்,

5. எடுத்த வுடலின் வினைமுடிவுற்
றேகுந் ததிநேர்ந் திட்டமையால்
அடுத்த குருவின் முகநோக்கி
அழுதான் அவனே னெனக்கேட்பத்
தொடுத்த வுனது பணிவேட்கை
தொலையா மையினால் என்றிடலும்
தடுத்த வுடலோ டுயச்செய்திலான்
தயையோ டுவகைத் தகைமலிந்து.

6. வருந்தேல் உனதா ருயிரிணையோர்
மாதா வயிற்றில் மகவாக்கித்
திருந்தா தரவால் எடுத்தாண்டு
தேற்றி யருள்வேன் எனச்சொல்லிப்
பொருந்தோர் கணத்தில் அதுதனது
போத வெளியிற் புகக்கவர்ந்தப்
பருந்தூ லத்தைப் பிறரெடுத்துப்
படியிற் புதைக்கும் படிசெய்தான்.

7. காணு வுயிரைக் கண்டுதனுட்
கலக்குந் திறமை பெறுமொருவன்
வாணுள் அளித்தவ் வுடலிணையேன்
வாழ்வித் தில்லான் எனமறுத்து
வீணுங் கதையென் றிடமாட்டார்
விரியார்த் துளவெள் விடையுகைத்து
நீணு கப்பூண் அணிபரமன்
நியமம் அதுவென் றுணர்ந்தோரே.

8. ஈண்டு மகப்பே றிச்சையினுல்
இளைத்த புனிதர் எனைஇரக்க
வேண்டும் என்னத் திருவருளை
வெகுவா நினைத்தான் மெய்த்தவத்தாற்
ருண்டு மயிலோ னணையனையத்
தன்மை யாராந் தம்பதிகள்
ஆண்டு பணிந்தங் ஙனமொருநாள்
இரந்தார் அவர்பால் அறைகின்ருன்.

9. உமக்காண் மகவோர் இரண்டுதிக்கில்
அவற்றுள் மூத்த தனையுரித்தோ
டெமக்கே சொந்த மாக்கொடுத்தற்
கிசைவீர் கொல்லோ எனக்கேட்டான்
இமக்கார் வரைமின் னெடுசிவனே
யெனமுன் னின்ருர் இசைவுற்ருர்
தமக்கே டறும்அம் முனிக்கரத்தாற்
றவளத் திருநீ றளித்தானே.

10. அந்த மதியிற் சூலுண்டாய்
அதற்குப் பத்தாம் மதிமுடிவில்
சந்த மதலை யொன்றுபெற்ருள்
சார்த்தூ லத்தின் கன்றெனவே
மைந்தன் அவனை அம்முனிவன்
மனத்துள் இருந்த உயிரென்பார்
பிந்த மூன்ருண் டாயவுடன்
பிறந்த தோராண் மதலையதே.

11. முனிசொற் பலிதம் உணர்ந்தவர்தாம்
மொழிந்த படியே முதன்மகவைத்
தனியே கொடுபோய் அவண்விடுத்தத்
தவன்பொற் கமலச் சரண்பணிந்திட்
டினியெங் கரத்து மதலையிட
ரெய்தா தளிக்கை கடனென்ருர்
துனியுற் றதுபாய்ந் திடிலிந்தச்
சுதனைத் தருவேன் எனச்சொன்னுன்.

12. சொன்ன மொழிகேட் டுளம்நடுங்கித்
தொழுது புகழ்ந்து துரிசுடையேம்
என்ன அறியா மையிற்புகன்றேம்
எனினும் பொறுப்ப துனக்கியல்பாம்
உன்ன தருட்சொற் பலிதமுணர்ந்
திருந்து மயங்கேம் எனஓதி
அன்ன தாயும் தந்தையும்போ
யதற்பின் அறவோன் அம்மகவை.

13. சண்மு கமெனும் பெயரிலிங்கந்
தவளத் திருநீ றக்கமணிந்
துண்மு கமுகெக் குருகவெடுத்
துச்சி முகந்து மெய்தழுவித்
தண்மு கவனை தனைநினைத்துத்
தயங்கா வண்ணந் தான்பழகி
விண்மு கவமு துறமுணவும்
வேறுட் டாதே யுடனருத்தி.

14. மின்ன னிகர்வேற் படைநிறுவி
விழியா லிதுபார்த் திருவென்ன
நன்னர் மொழியாற் றியானமதும்
பழக்கு வித்தா னுடுமவன்
என்ன தவஞ்செய் தனன்கொல்லோ
யானின் பணிவேட் டனனெனச்சொற்
றன்ன குரவன் றன்பணியா
மருமை செயப்பெற் றனன்மன்னே.

15. இவ்வா றவன்பக் குவமெய்தி
யெவனப் பருவ மதுமடைந்திட்
டொவ்வா மதுரத் தந்தாதி
ஒன்று முருகற் குரைத்தணிந்தான்
அவ்வா ருய காலத்தே
ஆறு முகப்பே ரநட்குரவன்
செவ்வா னனைய பெருஞ்சோதிச்
சிவன்சே வடியிற் புகுந்தானே.

16. அச்சண் முகப்பேர் முனிவரனை
அகில முழுதும் ஞானியென
மிச்சம் படவே சொல்லியது
விருத்தி விரியா தொடுங்கியென்று
எச்சங் கத்தும் அழுந்தாமல்
ஏக நிலையிற் றேய்ந்ததவன்
நச்சல் எதுவா யினும்சிறிதும்
நழுவா வண்ணம் நடந்தனவே.

17. கும்பிட் டிறைஞ்சா ரிடத்தொருசொற்
கூறு நிலையும் கொடுதிகழ்ந்தான்
றெம்பிற் றிருப்பா திரிப்புலியூர்ச்
சீரார் மடமும் செய்தாண்டான்
நம்பித் தனைச்சூழ் பவரறிய
நவின்ற தினத்தந் நாழிகையிற்
கம்பிட் டவிர்கா துடைப்பெருமான்
கழற்றுண் மலரிற் கலந்தானே.

18. ஆறு முகப்பேர் முனிபுகழும்
அடுத்த பிறப்பில் அவனருளாற்
றேறு மகிமைச் சண்முகப்பேர்த்
தெளிஞன் செயலும் சிறிதுரைத்தேன்
சாறு மலிதில் லையின்முத்துத்
தாண்ட வன்றன் தமிழ்ப்பாடல்
கூறு நலத்தால் அரியகதி
கொளுமா றுரைக்கக் குறித்தேனே.

— ஆறுமுக சுவாமிகள் சருக்கம் முற்றிற்று. —

---

உ

வேலுமயிலுந் துணை.

சிவ சண்முக மெய்ஞ்ஞான தேசிகன் திருவடி வாழ்க.

---

மகான் வண்ணச் சரபம் ஸ்ரீ தண்டபாணி சுவாமிகள்

அருளிய

# பழநிப் பிள்ளைத் தமிழ்.

---

மின்படு நெடுஞ்சடைச் சிவனிகர் அகத்தியனும்
வீணைவல நாரதனு நல்
விரதமுசு குந்தனும் கங்கைவரு மாறுதவ
மிகமுயல் பகீரதனும் ஓர்

வன்பனை மணந்துற்ற வணிகமக ரும்புலமை
வலிபெறு தமிழ்க் கீரனும்
மாறில்பொய் யாமொழியும் அருணைநக ரின்சிகரி
வடவருகில் உய்ந்து ளானும்

கொன்பரவை நீந்திப் பிழைத்தசிவ ஞானியும்
கோவலூர் வந்து தொண்டன்
குறைதவிர் பிறப்புதவு முனிவனும் போரூர்
குலாவவரு வானும்இவர்நேர்

அன்பர்எதிர் மயிலேறி ஆடிவரும் அழகனே
ஆடியருள் செங்கீரையே
அணிபொழில் பழநிமலை யாளுமுரு கையனே
ஆடியருள் செங்கீரையே.

(செங்கீரைப் பருவம். 4 ஆம் பாட்டு)

## தமிழலங்காரம்.

---

தன்னுடைச் சீடன்றன் ஆவியைக் காத்தொரு
தையனல்லாள்
இன்னுத ரத்தின் மகவாக்கி யாண்டும் இலங்கருட்சீர்
துன்னுறச் செய்துள்ள தூயோன் ஒருவன்
துணைக்கொளலும்
பன்னு தமிழ்க்கலை யேயென்னும் வார்கடற் பாருலகே.

(பாடல் 71)

மகான் வண்ணச் சரபம் ஸ்ரீ தண்டபாணி சுவாமிகள்

இயற்றியது.

பிற்சேர்க்கை : 3.

# இம் மடாலய வரன் முறை.

---

முதற் குரு மூர்த்திகள் :

தோற்றம் ஆநந்த கார்த்திகைக் கிருத்திகை.
(கலி 4774)

பரிபூரணம் : விகுர்தி (கலி 4870) மாசி 27. வியாழன் அநுடம். இயற்றிய நூல்கள், ஆற்றிய அருஞ் செயல்கள்: முன்னர் இந்நூல் முழுதுமே விளக்கப்பட்டன.

சுவாமிகளுடைய இருபதாம் ஆண்டளவிலே திருக்-கோவலூர்ப் பெண்ணை நதியில் நீராடி இட்டலிங்க பூசை முடித்தபின் ஓர் நாள் தன்னை மறந்த தியானத்திலே ஆநந்த பரவச முற்றிருக்குங்கால் வெண்ணெய் உருகுவதற்கு முன் பெருகிவரும் பெண்ணை நதியில் வெள்ளப் பெருக் கேற்பட்டு விட்டது. அடிகளார் திருவருளை வேண்டிக் காத்திருந்த சிலர் அடிகளாரை எழுப்பியும் உணர்வற் றிருத்தலையும், தூக்கியும் முடியாது போனமையையும் கண்டு தாம் பிழைக்க வேண்டிக் கரை சேர்ந்து அடிகளாரைப் பற்றிய கவலையுடன் இருந்தனர். நீர்ப் பெருக்கு மிக அதிகரித்து இருகரை புரண்டு ஓடத் தொடங்கிவிட்டது. கரை நின்றோர் யாவரும் கவலைக் கடலுள் மூழ்கித் திருவருளைத் தியானித்-திருந்தனர். சிறிது நேரங் கடந்து அடிகளார் நீர்மேல் நடந்து வரக்கண்டு முன்னையினும் அவர்கள்பாற் பற்று மிகுந்தவராயினர். ‘ நீர்மேல் நடக்கலாம் ’ என்ற தாயு-மானுர் வாக்கு அடிகளார்பால் உண்மையாயிற்று. இதனுல் சுவாமிகள் அணிமா முதலாய எண் சித்திகளும் கைவரப் பெற்றவர்க ளென்பது தெளிவாகிறது. (இது திருக் கோவ லூரில் வழங்கும் செவி வழிச் செய்தியாகும்).

எழுந்தருளி யிருந்த ஆண்டுகள் - 97.

**இரண்டாங் குரு மூர்த்திகள் :**

ஸ்ரீலஸ்ரீ சிவ சண்முக மெய்ஞ்ஞான சிவாசாரிய சுவாமிகள்.

தோற்றம், பெற்ரோர் முதலிய விவரங்கள் ஆதாரத்துடன் அறியக்கூடவில்லை. ஸ்ரீ தண்டபாணி சுவாமிகள் புலவர் புராண நாற்பத்தைந்தாவது சருக்கத்திற் கூறியதினின்று அவர்களது முற்பிறவிப் பெயர் வீரபத்திரர் எனத் துணிய இடமுண்டு:

பட்டமேற்றது : கலி 4870 விகுர்தி மாசி 27 அநுடம், வியாழக்கிழமை.

பரிபூரணம் : நந்தன, கார்த்திகை. அசுவினி மூன்றும் செவ்வாய்.

பட்டத்தி லெழுந்தருளியிருந்த காலம் : 63 ஆண்டுகள்.

***இயற்றிய நூல்கள் :***

| | | | | | | |
|---|---|---|---|---|---|---|
| 1. | விநாயகர் மாலை | காப்பு | 1 | நூல் | 30 | பாடல்கள் |
| 2. | சுப்பிரமணிய பரம்பரபதிகம் | ,, | 1 | ,, | 10 | ,, |
| 3. | முருக ரந்தாதி | ,, | 1 | ,, | 30 | ,, |
| 4. | திருக் கோவலூர்ப் புராண சாரம் | ,, | 3 | ,, | 111 | ,, |
| 5. | சிவகுரு லீலை (கிடைத்தவரை) | ,, | 3 | ,, | 77 | ,, |
| 6. | இட்டலிங்க பூசையாதி தரிசன அநுக்கிரகம் | ,, | – | ,, | 42 | ,, |
| 7. | தணிகாசல சதகம் | ,, | 1 | ,, | 101 | ,, |

எழுந்தருளியிருந்த இடங்கள் : 1. திருக்கோவலூர், 2. திருப் பாதிரிப் புலியூர், 3. ஆரணி, 4. திருமுதுகுன்றம், 5. சிவ குன்றம் முதலிய.

மூன்றாங் குரு மூர்த்திகள் :

ஸ்ரீலஸ்ரீ சிவ சண்முக சங்கண வசவ மெய்ஞ்ஞான சிவாசாரிய சுவாமிகள்.

பட்டமேற்ற நாள் : நந்தன, கார்த்திகை அசுவினி, மூன்றாம் செவ்வாய்.

பரிபூரணம் : கீலக, புரட்டாசி, கடைசி சோமவாரம்.

பட்டத்தி லெழுந்தருளி யிருந்த காலம் ; 16 ஆண்டுகள்.

நான்காங் குரு மூர்த்திகள் :

ஸ்ரீலஸ்ரீ சிவ சண்முக பரசிவ மெய்ஞ்ஞான சிவாசாரிய சுவாமிகள்,

பட்டமேற்ற நாள் : கீலக புரட்டாசி, கடைசிச் சோமவாரம்.

பரிபூரணம் : விரோதி, ஐப்பசி 26 ஆம் நாள் ஞாயிறு.

பட்டத்தி லெழுந்தருளி யிருந் காலம் : 41 ஆண்டுகள்.

இவ்விருவரது தோற்றம், பெற்றோர் முதலிய விவரங்கள் அறியக்கூடவில்லை.

ஐந்தாங் குரு மூர்த்திகள் :

தோற்றம் : ஸ்ரீமுக வைகாசி, 4௳ வியாழன் மூல நாள் 17—5—1873.

தந்தையார் : சிவத்திரு - அண்ணாமலை அய்யர்.

தாயார் : திருமதி - பார்வதி யம்மையார்.

பிள்ளைத் திருநாமம் : சிவத்திரு - பழநியாண்டி அய்யர்,

பட்டமேற்ற நாள் : விரோதி, ஐப்பசி 26 ஞாயிறு (10—11—1889).

அறுபானுண்டு நிறைவு விழா : ஸ்ரீமுக, வைகாசி 1933 ஆம் ஆண்டு.

பட்டமேற்ற ஐம்பதாண்டுப் பொன் விழா : பிரமாதி, கார்த்திகை 1939 ஆம் ஆண்டு.

பரிபூரணம் : விஷு, தை 19 ஆம் நாள் ஞாயிறு, பூசம். (1—2—1942)

பட்டமேற் றெழுந்தருளியிருந்த காலம் : 53 ஆண்-டுகள்.

*இயற்றிய நூல்கள் :*

1. குருதுதி கோவல் ஸ்ரீமத் (மஹா குரு சுவாமிகள் மீது பாடப்பட்டவை) கிடைத்தவை 49 பாட்டுகள்.

2. ஞான தேசிக மாலை.
(இரண்டாங் குரு மூர்த்திகள் மீது இயற்றப் பெற்றது) அவ்வாலய கும்பாபிடேக நினைவு வெளியீடு. 23 பாட்டுகள்.

3. திலகவதி யம்மை துதி. 7 பாட்டுகள்.

ஆற்றிய தொண்டுகள் : திருஞான சம்பந்தர் தோன்-றிய வைகாசி மூல நாளிற் றோன்றிச் சைவமும் தமிழும் நாடெங்கணும் தழைத் தோளிரவேண்டு மெனும் பேரவாக் கொண்டு நால்வரைப்போல் ஆலய வழிபாடு செய்து கொண்டு, ஞான சம்பந்தரைப்போல் சிவிகை யூர்ந்து குமரி முதல் வட வேங்கடம் வரை பலமுறை சென்று தம் செஞ் சொன் மாரியால் சைவப் பயிரையும், தமிழ்ப் பயிரையும் வளர்த்தவர்கள். பலருக்கு ஞானோப தேசமும், சிவலிங்க தாரணமும் செய்வித்தவர்கள். தனித் தமிழ் பயிற்றுவிக்கும் கல்லூரிகள் யாங்கணும் தோன்ற வேண்டுமெனக் கருதி முதன் முதலில் செட்டி நாட்டரசர் ராஜா சர். அண்ணாமலைச்

செட்டியாரவர்களைத் தூண்டித் திருத் தில்லையில் மீனாட்சி தமிழ்க் கல்லூரி தோற்றுவித்து, அங்கு பயிலற் குரியவராகத் தாமே நேரிற் பயிற்றுவித்த அறுவரை மாணவராக அனுப்பி ஊக்குவித்தவர்கள். (அதுவே இன்று அண்ணாமலைப் பல் கலைக் கழகமாகப் பெருகியுள்ளது).

வடமொழி மட்டுமே பயிற்றுவித்து வந்த திருவை-யாற்று வடமொழிக் கல்லூரியில் தனித் தமிழும் கற்பிக்கு-மாறு திரு. A. T. பன்னீர் செல்வம் அவர்களைச் சிவத்திரு தமிழ் வேள் – செந்தமிழ்ப் புரவலர் – த. வே. உமா-மஹேசுவரம்பிள்ளை யவர்களைக்கொண்டு தம்மிடம் வருவித்து எடுத்துரைத்துப் படிப் படியாகப் பாதி மாணவர்க்கு உணவு முதலிய உதவிகளை வழங்குமாறு தூண்டி வழிசெய்தவர்கள்.

தாமே ஓர் தமிழ்க் கல்லூரி நிறுவ முனைந்து, தம் அறுபாணாண்டு நிறைவு விழாவின்போதும், பட்டமேற்ற ஐம்பதாண்டுப்பொன் விழாவின்போதும் ஓரளவு தொகையை ஒதுக்கினார்கள். மேலும், பொருள் வசதியும் பிறவசதி-களையும் எதிர்நோக்கித் தாமதிக்க நேர்ந்தது. அவர்களது இறுதிக் காலம் வரை கல்லூரி காணும் அவ்வெண்ணம் கைகூடா தாயிற்று.

இருந்த போதினும் அவர்களது முயற்சியே இன்று பற்பல தமிழ்க் கல்லூரிகள் தோன்றக் காரண மாயிற்று. எங்ஙன மெனின், அடிகளார் முயற்சிகளை யறிந்த மயிலம் பொம்மபுர ஆதீனப் பதினெட்டாம் பட்டத்து அடிகளார் தாமும் ஓர் தமிழ்க் கல்லூரி நிறுவத் திருவுளங்கொண்டு 1938 ஆம் ஆண்டு முதல் தொடங்கி விட்டார்கள். அதன் பின்னரே பற்பல தமிழ்க் கல்லூரிகள் தோன்றலாயின.

திருப் பாதிரிப் புலியூரில் 'வாணி விலாச சபை' என்ற ஓர் நிறுவனத்தின் வாயிலாகப் பெரியோர் முதல் யாவர்க்-கும் சாத்திர – தோத்திர, புராண, இதிகாசங்களை நாடோ-றும் பாடஞ்சொல்லி வருவார்கள். அங்ஙனமே திருக் கோவலூரில் நம் மடாலயத்தில் தாமே தோற்றுவித்த கோவல் தமிழ்ச் சங்கத்திலும், ஆரணியில் அடுத்த அன்-பர்கட்கும் பாடங்கள் கற்பிப்பார்கள்.

திருப் பாதிரிப் புலியூர் மடாலயத்தின் முன்பகுதியில் 1917ல் ஓர் பெருங் கூடம் அமைத்துச் சொற் பொழிவுக் கேற்ற வண்ணம் இடவசதி செய்தார்கள்.

திருக் கோவலூர், ஆரணி மடாலயங்களைப் புதுப்-பித்துச் சிறந்த வகையிற் கட்டி முடித்தார்கள். அவை முறையே 1913 லும், 1929 லும் நிறைவேறின.

திருக் கோவலூர் ஆவணிமூல மண்டபம் கிலமாகி விட்டமையால் முழுதும் கருங்கல் கொண்டு புதுவதாக அமைத்தார்கள். அது 1937ல் நிறைவெய்தியது.

ஆரணி மடாலய சம்பந்தமான வழக்குகளை நடத்தி வென்று மடாலய வழிபாடு நாடோறும் நடைபெற வழி வகுத் துதவினுர்கள்.

இரண்டாங் குரு மூர்த்திகளை மூலவராகக்கொண்டு விளங்கும் ஆலயத்தைச் செப்பனிட்டு 1937 ஆம் ஆண்-டில் குடமுழுக்கு செய்து சிறப்பித்தார்கள்.

தம்மை நாடிவந்த மாணவர் பலரைப் புலவராக்கி யாவரும் இன்று நல்ல நிலையிலிருக்கத் திருவருளாசி யுடன் வழி வகுத்தார்கள். அவர்களது அருளாசியால் சைவமுந் தமிழும் பரப்பும் அன்பர் பலர் இன்று வடவேங்-கடம், தென்குமரி யிடையே நிலவுகிருர்களெனில் அது மிகைக் கூற்றன்று.

7—7—1905 ஆம் ஆண்டில் தம் புலிசை மடா-லயத்திலேயே சைவ சித்தாந்த மஹா சமாஜத்தை நிறுவி, அதன் வளர்ச்சிக்காகப் பெரிதும் உழைத்தார்கள். ஆண்டு தோறும் பேரவைகளிற் கலந்துகொண்டு சாத்திர – தோத்திர அறிவினை எத்திறத்தாரும் அடையுமாறு பரப்பியவர்கள்.

சென்னை இந்து அறநிலையத்தின் முன்னுள் தலைவர் – உயர் திருவினுர் T. M. நாராயணசாமிப் பிள்ளை, M. A., B. L., ஆணையர் உயர் திருவினுர் C. M. இராமச்சந்திரம் செட்டியார், B. A., B. L., ஆகியவர்களைத் தம்பால் ஈர்த்து

அறநிலையங்கள் ஆற்ற வேண்டிய அரும்பணிகள் பற்றி வகுத்துக்கூறிச் செயலாக்குவித்தார்கள். ஆலயச் சுவர் களில் அவ்வத் தலத்திற்குரிய பாசுரங்கள் வரைவிக்கக் காரணரும் அவர்களே யாவார்கள்.

திரு. வி. க. அவர்கள் தம் வாழ்க்கைக் குறிப்பிலும், திரு. புலவர் முருகவேள், B. O. L. (ஹானர்ஸ்). M. O. L., அவர்கள், சமாஜ வெளியீடான 'ஞானியாரடிகள் நினைவு மலர்' பதிப்புரையிலும் எழுதியிருப்பன அடிகளாரின் தொண்டுகளை உலகுக் கறிவிப்பன.

**ஆறுங் குரு மூர்த்திகள் :**

ஸ்ரீலஸ்ரீ சிவசண்முக சத்தியஞான சிவாசாரிய சுவாமிகள்.

தந்தையார் : சிவத்திரு – பழநியாண்டி அய்யர் (மாமா சுவாமிகள்)

தாயார் : திருமதி – அமிர்தம் அம்மையார் (மாமி)

தோற்றம் : விரோதி, பங்குனி 11, பானுவாரம், பரணி. (23—3—1890)

பட்டமேற்பு : விஷு, தை (1—2—1942)

பரிபூரணம் : விகுர்தி கார்த்திகை 29, வெள்ளி சதயம், 15—12—1950.

பட்டத்தி லெழுந்தருளியிருந்த காலம் : 9 ஆண்டுகள்

திருப் பாதிரிப் புலியூர் ஸ்ரீமத் ஞானியார் மடாலய ஸ்ரீ சுப்பிரமணிய சுவாமி கோயிலைக் கருங்கல் தளியாக்கி விகுர்தி, சித்திரை, 12 (24—4—1950)ல் குடமுழுக்காட்டி நிறைவேற்றினர்கள்.

திருமுது குன்றத்தில் ஸ்ரீமத் ஞானியார் மடாலயத்-தைச் சேர்ந்த கல்விமடத்தில் எழுந்தருளியுள்ள ஸ்ரீ பழநி யாண்டவர்க்கு ஐந்தாம் குருமூர்த்திகளால் புதிதாக எடுப்-பித்திருந்த கருங்கற் கோயிலில் முன் இருந்த இடத்தினின்று ஸ்ரீ பழநியாண்டவர் திருவுருவத்தை மாற்றிப் பிரதிட்டை

செய்து சர்வசித்து, ஆனி 23 (7—7—47)ல் குடமுழுக் காட்டி நிறைவேற்றினுர்கள்.

திருக் கோவலூரில் முதற் குருமூர்த்திகளும், திருப் பாதிரிப் புலியூரில் ஏனைய ஐவரும் பரிபூரண மெய்தினுர்கள்.

ஏழாங் குரு மூர்த்திகள் : (இப்போதிருப்பவர்கள்)

ஸ்ரீலஸ்ரீ சிவசண்முக ஆறுமுக மெய்ஞ்ஞான சிவாசாரிய சுவாமிகள்.

தந்தையார் : சிவத்திரு – அண்ணுமலை அய்யர்.

தாயார் : திருமதி – சிவகாமி யம்மையார்.

அவதாரம் : கீலக, சித்திரை 3, புதன் அஸ்தம் (15—4—1908)

இதுவரை செய்த தொண்டுகள் : இம் மடாலய முதற் குருமூர்த்திகள் அருளிய நிட்டானுபூதி சாரத்தை பதிஞன்காம் பதிப்பாகவும், அவர்கள் இயற்றிய மேன்மைப் பதிகம், சதுர்லிங்க சதகோத்திர தசகம் ஆகிய ஓலைச் சுவடிகளிலிருந்த நூல்களை யாவர்க்கும் பயன் படுமாறு அச்சிடு வித்தார்கள். ஐந்தாம் குரு மூர்த்திகளின் கிருத்திகைச் சொற்பொழிவினை 1955 ல் மடாலய வெளியீடாக வெளி யிட்டார்கள்.

தோன்றிய காலம் முதலாகத் திருப்பணி முதலியன செய்யப் பெருதிருந்த ஆரணி ஸ்ரீ பாலசுப்பிரமணியர் ஆலயத்தைச் செப்பனிட்டு (31—5—64) குரோதி வைகாசி 18 ஆம் நாளிற் திருக் குடமுழுக் காட்டி நிறைவேற்றினுர்கள்.

பல காலமாகத் திருப்பணி செய்யப் பெருதிருந்த திருக் கோவலூர் ஸ்ரீலஸ்ரீ ஆறுமுக மெய்ஞ்ஞான சிவாசாரிய சுவாமிகள் ஆலயத்திற்குத் திருப்பணி மேற்கொண்டுள்ளார்கள். விரைவில் சிறப்புற கும்பாபிஷேகம் நிறைவேற, ஆதி பரமாச்சாரிய மகா குருமூர்த்திகள் திருவருள் பாலிப்பாராக.

உ
வேலுமயிலுந் துணே.
சிவசண்முக மெய்ஞ்ஞான தேசிகன் திருவடி வாழ்க.

# ஞானேபதேசச் சருக்கம்.

1. சீர்வளரும் திருக்கோவ லூர்புகழ உலகினிலே
செம்மை ஞானம்
ஆர்வமுறு மக்கட்கிங் களித்தருள ஆறுமுகப்பே
ரமையத் தோன்றி
ஏர்வளர நற்குணங்க ளினிதுயர வளர்பிறைபோ
லேற்றங் கொள்ளக்
கூர்மதியும் பெற்றுமனக் குறைவின்றி வாழ்ந்திடுவார்
குணக்குன் றன்னர்.

2. இவ்வுலக மாயையிலே யிணந்திடிலோ எஞ்ஞான்
இறைவன் தாளேப் [றும்
பவ்வமெனும் பிறப்பகலப் பணிந்திடுதல் இயையாத
பான்மை கண்டு
செவ்வகையின் பக்திநெறி சேர்ந்தொழுகி ஐந்தடக்
செம்மை கொண்டார் [கிச்
இவ்வகையைத் திருவருளே யிருமூன்ரும் குகைநமச்சி
வாய ரெண்ணி.

3. அறமோங்க நற்பணிகள் அகிலமதில் நிறைவுபெற
அடிகள் தம்மை
இறையுளத்த ராய்நிலேக்கச் சிவலிங்க தாரணமும்
இயற்றி முத்தி
உறவளிக்கும் பஞ்சாக்ர உபதேசஞ் செய்தருள
உண்மை ஞானி
முறையுணர்ந்து பக்திமிகுந் துறவறமேற் கொண்டா
முனிந்து வாழ்வார். [சை

4. அண்ணலரும் பெருஞானி யவர்நாளும் ஆதவனிங் கலர்வ தன்முன்
பெண்ணைநதி நீராடிப் பிறங்கொளிசேர் கபிலன்முன் பிரிந்து நீத்த
தண்ணியநற் குன்றருகிற் ருனமர்ந்து நிட்டையினிற் றங்கி யன்பின்
பெண்ணமர்ந்த பாகனடி பிறழுமனந் தான்சேர்த்துப் பிறங்கு மாலோ.

5. சின்னுளிவ் வாறேகச் சிம்மமதித் தசமியினிற் சேரு மூலம்
அந்நாளில் வழக்கம்போல் அடிகள்தாம் நிட்டையி அமர்ந்த காலை [னில்
நன்னுளாம் அன்றுதிரு வீரட்ட நாதன்றன் நங்கை யோடு
முன்னுயே எழுந்தருளி முறையாகப் பஞ்சாக்ரம் உபதே சித்தார்.

6. உத்தரவா துளாகமத்தி லிருபத்தெட் டாம்படலத் துடைய தாகும்
புத்தகத்தை நிட்டானு பூதிவட நூலதனைப் புனிதன் அன்று
சித்தமொன்றும் அடிகள்மடித் தலத்திருத்திருத்தி செயலின் பின்னர் [மறைந்தனரிச்
அத்தனவன் தெளிந்தெழுந்தே யவனருளை வியந் கறையு மாலோ. [தன்பர்க்

7. அனற்பிழம்பா யான்மாலுக் கறிவுறுத்துந் திருவருணை ஆரும் பட்டம்
எனப்பொலியுங் குகைநமச்சி வாயரிந்த அற்புதத்தை இயம்பக் கேட்டு
மனத்தகத்து மகிழ்ச்சிமிக மலரவிறை யருணுலைத் தமிழி லாக்கு
கெனப்பணிக்கக் குருபரனி னேவலிணை அடிகள்சிர மேற்றுப் பின்னர்.

8. நலம்பெற்றுர் செந்தமிழின் நடைகற்றுர் இறையருளால்
நல்ல ஞானப்
பலம்பெற்றுர் தமிழ்மொழியிற் பகன்றிடலோ அரிதன்று
பலரும் போற்றத்
தலம்பெற்றுர் தமதகத்தார் நிட்டானு பூதிசாரத்
தனிநூ லொன்றை
மலம்பெற்று ருய்வதற்கிங் கெழுதியருள் புரிந்துமனம்
மகிழ்ந்திட் டாரால்.

## வேறு

9. மண்மிசையோர் நாளடிகள் நிட்டை கூடி
மாதவத்தைச் செயவவர்முன் முருகன் ருேன்றி
வண்மலரின் மிசையவற்குப் பண்டை நாளில்
வழங்கியவப் பிரணவத்தை யுபதே சித்துத்
தண்ணருளைப் பொழிந்தனரந் நாட்டொ டங்கிச்
சரவணத்தான் றன்னையுபா சனைக்கு மூர்த்தி,
பண்ணியவர் தம்மடத்தி லிருத்தி நாளும்
பாமலரான் மெய்யுளத்தாற் பரவி வாழ்வார்.

10. ஆறுமுக .மெய்ஞ்ஞான சிவஆ சார்ய
அடிகள் என்ன அமைந்த தன்றி
ஆறுமுகன் திருவருளா லளவில் லாமெய்ஞ்
ஞானமுற் றுரதனுல் அகில மெல்லாம்
பேறுமிகு ஞானியார் சுவாமி யென்றே
பெயர்தந்தா ரவர்தங்குந் திரும டந்தான்
வீறுமிகு ஞானியார் மடமே யென்னும்
வியன்பேர்பெற் றேவிளங்கு மேன்மை யாலே.

11. பன்னரிய நல்லறிவும் பகலெனப்பொன் திகழுடலும்
பார்த்த போதே
என்னருமை இறையவரோ எனநினைக்குந் திருமுகமும்
இரக்கம் ஈகை
மன்னுயிர்கட் குய்வழிசொல் மாண்பொடுதன்னிடம் வந்தார்
மருளற் றேங்கக்
கன்னல்எனத் தந்தருளும் கனிமொழியுங் காண்பவரைக்
கவரு மாலோ.

12. அடிப்பொருந்தி வந்திருந்தங் கவர்மொழியும்
லகத்தி னேட்டத் [பொன்மொழியா
துடிப்படக்கித் துலங்கிமனத் தூய்மையுற்ருர்
சொல்லி லாகா [பலராகும்
படிப்படியாய்ப் புனிதரெனப் பவக்கடலை நீந்திமிகப்
பயனுங் கொள்வார்
நடிப்பருளும் வீரட்ட நாதருப தேசத்தை
நாளு மேலாம்.

13. திருநாளா யம்மடத்திற் றிருவிழா ஆற்றினரச்
சிறந்த நாளைப்
பெருநாளாய்ச் சிம்மமதி மூலத்திற் கொண்டாடும்
பேறு பெற்ருர்
வருநாளில் விணையகற்றி வன்பிறவித் தளை நீக்கும்
வலிமை வேண்டி
ஒருநாளில் ஒருபொழுதா யினுமிறைவன் அடி
யுய்கு வோமே. [போற்றி



உ

வேலுமயிலுந் துணை.

சிவசண்முக மெய்ஞ்ஞான தேசிகன் திருவடி வாழ்க.

## பிற்சேர்க்கை

# அருஞ்சொல் விளக்கம்.

பக்கம்,

1. அறுதி = வரையறை

2. முகிழ்த்துவிட்ட = தோன்றிவிட்ட

ஒருப்பட்டார் = இசைந்தார்.

3 நாலடியார் :- நிறைந்த கல்வியில் அறிவு நூல்களைக் கல்லாது உலக இன்ப துன்பத் தொடர்பான நூல்களையே பயில்வது. கலகலவெனக்கூவுமளவேயன்றி உள்ளத் தடுமாற்றம் (மயக்கம்) ஒழிக்கத்தக்க வகையினை யறிந்த பயனைத் தரமாட்டாது.

4. தேவாரம் = மேன்மேலும் அவா ஐந்தனையும் எழுப்பும் வஞ்சனையுடைய ஐம் பொறிகளே! இவ்வுலகில் உங்கள் விருப்பமே நிறைவேற்ற ஓடித் திரிந்து ஆணை செலுத்தி வருபவர்களே! நிறைவுரு து ஓங்கி எழும் விருப்பமுடையீரே! இந்தப் பெரு விசும்பின் உச்சியைத் தாங்கும் தூணுகவும், பாதாளத்தில் முளையாகவும், திருவாரூரை ஆள்பவருகவும் உடைய எம்பிரானை விரைவிற் சென்று அடை-வேன்; உங்களால் ஆட்டப்பட மாட்டேன்; என்னிடம் நீங்கள் ஓடிவந்து அலைய வேண்டிய நியதி இங்கு கிடையாது.

5. மல பரிபாகம் = மூல மலமாகிய ஆணவம் கெட்டழியும் நிலை.

அலமருதல் = அலைதல்.

6. அளக்கர் = கடல்.

9. அரசோச்சிய = அரசு செலுத்திய

10. பவக்கடல் = பிறவிக்கடல்.

14. இலாடம் = நெற்றி (லலாடம்)

15. மெய்ம்மயிர் பொடிப்ப = மயிர்க்கால் தோறும் புளகம் உண்டாக.

17. கொளுவியமை = கொளுத்திய தன்மை

நால்வர் நான்மணிமாலை = தவநெறி பிடித்து நடத்தலோ ஐந்தீயிடை நின்று ஆற்றரிய கடுந்தவங்கைக் கொள்ளலோ, நீரையே பருகி (உணவு ஒழித்து) துய்ப்பனவற்றைத் துறத்தவோ இன்றித் திருநாவுக்கரசு ' என்னும் ஒப்பற்ற சொல்லையே யாண்டும் எழுதியும் கூறியும் என்றும் துன்பமே யில்லாத பேரின்ப நிலையை யடைந்தான் அப்பூதி யென்னும் பெருந்தகையாளன்.

21. அல் = இருள். அஃது அறியாமை, கோ = அவ்விருளை யகற்றி. மெய்விளக்கு விளக்கும் தலைவன். அறியாமை யென்ற அந்தக அசுரனை ஒழித்த தலைவன் எனவுங் கொள்ளலாகும். அத்தகைய சிறப்புப் பெற்ற இந்நகரமே, முதலாழ்வார் மூவரும்

'' வையந் தகளியா வார்கடலே நெய்யாக '',
'' அன்பே தகளியா ஆர்வமே நெய்யாக '',

என்றெடுத்துப் பாடி மொழிவிளக் கேற்றித் துதிக்க இடமாயது.

22. தண்டுலம் = அரிசி.

கலி ஆயிரம் × நான்கு + எழுபத்து நான்கு 4774.

27. கல்லாடை = காவியாடை.

28. தோயம் = நீர், கண்மணி = உருத்திராக்கம், சதுர்விதப்பூ = கோட்டுப்பூ, கொடிப்பூ, நிலப்பூ, நீர்ப்பூ, உபகரணம் = துணைப் பொருள்கள்.

30. அத்தசாமம் = நள்ளிரவு (அர்த்தம் + சாமம்).

32. 'நீறு இடார்களே நிரய வாணரே'. திருப் பாதிரிப்-புலியூர்க் கலம்பகம்

" கோதுஇல் அஞ் செழுத் தோதி நீறணிந்து,
இன் றுபாதிரிப் புலிசை சேர்வரேல் யாவராயினுந்
தேவராவரே "

33. போதம் = உண்மை யறிவு "போதந் தருவது நீறு". சம்பந்தர்.

34. 'உள்மாசு கழுவுவது நீறு' — பரஞ்சோதியார் திரு-விளையாடற் புராணம்,

" ஆதிபகவன்...........வெண்திருநீறு ". திருப்போரூர் முருகன் பிள்ளைத் தமிழ்.

36. காரணம் = காரண பஞ்சாக்கரம்

அங்குட்டச் செபம் = அங்குட்டம் எனப்படும் பெரு-விரலின் மேலாகச் செபமாலை போகுமாறு செபித்தல் இம்முறை துறவியர்க் குரியது என்க.

37. மாகாரணம் = மகாகாரண பஞ்சாக்கரம்.

உபயாக்கரமனு — ,, — (இரண்டெழுத்துகளே கொண்டதாகலின் உபய அக்ரமனு என்றருளப் பெற்றது.

38- மனோலயம் = மன அடக்கம்,

41. பாவனாதீத = பாவன + அதீத = நினைப்பிற்கும் எட்டாத.

உ
வேலுமயிலுந்துணே.
சிவசண்முக மெய்ஞ்ஞான தேசிகன் திருவடி வாழ்க.

## பிற் சேர்க்கை.

# பிழை திருத்தம்.

| பக்கம் | வரி | பிழை | திருத்தம் |
|---|---|---|---|
| (2) | 20 | அதற்கு | அத்தகு |
| (11) | 5 | மயூராசால | மயூராசல |
| ,, | 14 | வழிப்பட்டு | வழிபட்டு |
| (37) | 9 | நுணுக்கங்காள் | நுணுக்கங்கள் |
| ,, | 9 | தகவிற் காற்றி | தகவிற் சாற்றி |
| (38) | 24 | சமயகாலத்தவர் | சமகாலத்தவர் |
| (45) | 25 | வென்றீர்ந்தார் | வென்றீந்தார். |
| 4 | 28 | கொண்டனர். | கொண்டனர் |
| 5 | 24 | குரம்பை. | குரம்பை |
| 8 | 8 | தோற்றந்திக்கு | தோற்றத்திற்கு |
| | 22 | பெரும்பாலரும் | பெரும்பாலரும், |
| | 26 | திருமுனைப்பாடிநாடு | திருமுனைப்பாடிநாடு, |
| 13 | 3 | மல்லையத்தேவர் | மல்லையதேவர் |
| 14 | 32 | திருவோலக | திருவோலக்க |
| 17 | 22 | திருப்பெயரையே | திருப்பெயரையே, |
| | 29 | சேக்கிழார் கூறும் | சேக்கிழார் |
| 21 | 10 | அடங்கியிருக்கத்(தவ- | அடங்கியிருக்க (த்தவ- |
| | 21 | சுப்பம்மா | சுப்பம்மா, |
| 22 | 20 | 1474 | 4774 |
| 25 | 2 | குரவாற் | குரவராற் |
| | 27 | சதகம் | தசகம் |
| 26 | 30 | ,, | ,, |
| 28 | 30 | உபதேசிக்த | உபதேசித்த |
| 29 | 23 | லிங்கமே, அளவில் | அளவில் |

| பக்கம் | வரி | பிழை | திருத்தம் |
|---|---|---|---|
| 31 | 13 | சிவபிரானது} | சுந்தரர், சிவபிரானது |
| | 24 | பாதிரிப்புலியூரானே | பாதிரிப்புலியூரானே. |
| 33 | 4 | மறைத்தான், | மறைத்தான். |
| 35 | 31 | திரு. வி. க. அவர்கள | திரு. வி. க. அவர்கள் |
| 37 | 17 | உயர்த்தியருளினுர் | உணர்த்தியருளினுர். |
| 39 | 24 | யான் எனதென்றும் | யான் எனதென்னும் |
| 41 | 3 | கண்குளிப்ப | கண்களிப்ப |
| 42 | 23 | கோயிலுக்கு வடக்கதும் | கோயிலுக்குத் தெற்கதும் |
| 47 | 6 | பொன்னம்(2)பலமருணே | பொன்னம்பலம்(2)அருணே |
| 50 | 27 | எய்தியிருந்தன என்பதை | எய்துவித்திருந்தது என்பதை |
| | 29 | தேவாரம் | தேவராம் |
| 52 | 2 | எழுதரிய அறிமுகமும் | எழுதரிய அறுமுகமும் |
| | 8 | மடியினேயும் | மடியிணேயும் |
| 54 | 22 | காண்டலறிதாயிற்று | காண்டலரிதாயிற்று. |
| 56 | 8 | முப்பத்தொன்பதாவது | நாற்பத்தைந்தாவது |
| 57 | 7 | அருந்தினுர்கள். | அருத்தினுர்கள், |
| | 12 | வாழ்தி | வாழ்த்தி |
| | 33 | காணப்பெறும் | காணப்''பெறும் |
| 58 | 26 | அவநாசி | அவிநாசி |
| 60 | 5 | விட்ட்து | விட்டது |
| | 22 | ஞானியார் சிவாமிகள் | ஞானியார் சுவாமிகள், |
| | 31 | நோம்பினே | நோன்பினே |
| 63 | 17 | நோக்கியும் | நோக்கிய போதும் |
| 87 | 10 | மகரும் புலமை | மகளும் புலமை |

